# மூவர் தேவாரம்

## இரண்டு பார்வைகள்

**சொ. சிங்காரவேலன்**


பதிப்புத்துறை






**மதுரை காமராசர் பல்கலைக்கழகம்**

பதிப்பு எண் : 95

விலை ரூ 15-00

பதிப்பு விவரங்கள் :

1) ஆசிரியர் : பேராசிரியர் சொ. சிங்காரவேலன்
தமிழ்த்துறை, ஏ. வி. ஏ. கல்லூரி,
மாயூரம்.

2) தலைப்பு : மூவர் தேவாரம் — இரண்டு பார்வைகள்

3) பதிப்பு

i) இடம் : மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
(Madurai Kamaraj University,
Madurai-21.)

ii) பதிப்பித்தோர் : பதிப்புத்துறை (Publications Division,
Madurai Kamaraj University,
Madurai-21)

iii) ஆண்டு : 1987 முதற் பதிப்பு

4) மொத்தப் பக்கங்கள் : 165 + IV

5) பொருள் : சைவம்

6) அச்சும் அமைப்பும் : இராயல் ஆர்ட் பிரிண்டர்ஸ், மதுரை-21

தமிழண்ணல்
அறிஞர் இராம. பெரியகருப்பன்
தமிழியல் துறைத் தலைவர்.

மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை—21.

# அணிந்துரை

அறிஞர் சொ. சிங்காரவேலன் தமிழ் இலக்கிய இலக்கணத்தில் வல்லுநர்; எழுத்தாற்றலும் பேச்சுத்திறனும் வாய்த்தவர். பத்திமை இலக்கியத்தில் தோய்ந்த புலமைநலம் உடையவர். அத்தகையவரை, நம் அறக்கட்டளைப் பொழிவுகட்கு அழைப்பதென முடிவு செய்து, ஐந்தமிழ் விழாவிற்கு அழைத்தோம்.

தமிழ்க்கடல் 'காரைக்குடி இராய.சொ.' அவர்களது பெயரா லமைந்த அறக்கட்டளை 'தேவாரத் திருமுறைகள்' பற்றிப் பேசுதற் கமைந்ததாகும். அதன் சார்பில் இரண்டு பொழிவுகளாற்றி அனை வரையும் மகிழ்வித்த அறிஞர் சொ.சிங்காரவேலன், தமது இரண்டு உரைகளையும் மிகவும் தெளிவாக எழுதித்தந்தார். அதனால் அவை அச்சேற்றப் பெற்று, நூல்வடிவில் உங்கள் கைகளில் திகழ்கின்றன. இங்ஙனம் தாம் பேசிய அறக்கட்டளையினைப் பல்லோரும் நினைவு கூரச் செய்த அறிஞர் பாராட்டுக்குரியவராகின்றார். இராய.சொ. அவர்களின் பெயராலும் அறக்கட்டளை நிறுவிய அ.க. சித. அழ. சிதம்பரம் செட்டியார் அவர்கள் சார்பிலும் சொற்பொழிவாளருக்கு நன்றியும் பாராட்டும் கூறுகின்றோம். பல்கலைக்கழகம் இதனை நூல் வடிவில் வெளியிடுவதென்பது இந்நிறுவனத்தின் உயரிய மரபுகளில் ஒன்று. அவ்வகையில் துணைவேந்தர் அறிஞர் சீனி. கிருட்டிணசாமி அவர்கட்கும் ஆட்சிக்குழுவினருக்கும் நன்றி கூறும் கடப்பாடுடை யோம்.

இந்நூல் இரண்டு பொழிவுகள் அடங்கியது. முதற்பார்வை தேவாரத்தின் இலக்கியத்திறன் பற்றியது; இரண்டாம் பார்வை அதன் மெய்ப்பொருள் திறன் பற்றியது. இங்ஙனம் மூவர் தேவாரம் பற்றிய இரண்டு பார்வைகளும் ஒரு நூலாக வெளிவருகின்றன. முதற்பார் வையில், இறையன்புத் திருநூலில் இலக்கியத்திறன் காணுதலும் முறையே எனத் தன்கோள் நிறுவிக்கொண்டு தொடங்கப்படுகிறது. தொல்காப்பியம் தொடங்கியமையும் மரபுவழியான ஆய்வுப்போக்கை இப்பார்வை முழுவதும் காணலாம். இடையிடையே மேலை இலக்கியக் கோட்பாடுகளும் பொருத்திக் காட்டப்படுகின்றன. அக மரபு அமைந்திருத்தல், வடிவப் பாங்கும் சித்திரகவிகளும் பொருளுக்

கேற்பப் பொருந்தியிருத்தல், அணிகள் பல நயமுடன் அமைந்திருத்தல், கற்பனைத்திறன், இயற்கைப் புனைவு, உணர்வுகள், பின்னிப் பிணைந்து வெளிப்படுதல், சொல்லாட்சித்திறன், வனப்புவகை காணப்படுதல். குறிக்கோள் சுட்டும் விழுப்பம் என மூவர் தேவாரத்தில் அமைந்த இலக்கிய நலன்கள் பலவும் சான்றுகாட்டி விளக்கப்படுகின்றன. பெருங்கடலுள் மூழ்கி, நன்முத்துக்களை எடுத்துவந்து தருவர் போல இவர் இந்நூலுள் இத்திட்பநுட்பங்கள் பலவற்றையும் பொருந்திய உட்தலைப்புக்களுடன் நிரல்படத் தந்துள்ளார்.

இரண்டாவதாகிய மெய்ப்பொருள்திறனில் அமைந்துள்ள செய்திகள் மிக அரியவை; சொற்பொழிவாளரின் சைவ சமய நுண்பொருளறிவை நன்கு வெளிப்படுத்துவன. மூவர் தேவாரத்தில் தோத்திரத்தில் சாத்திரப் பார்வை பார்க்கும் இதன் கண், சைவசமய உண்மைகள் பல நம் மனத்திற்காகும் வண்ணம் எளிமையுடன் எடுத்தோதப்பட்டுள்ளன. மேன்மேலும் 'மிகுசைவத் துறை விளங்க' ஆராயப்பட வேண்டும் என்ற தூண்டுணர்வை இவை தருகின்றன. சொற்பொழிவாளர் சொ. சிங்காரவேலனாரின் தேவாரப் பயிற்சி சாத்திர ஆராய்ச்சி, பெரியபுராணப் புலமை, பிற சாத்திர நூல்களில் தோய்வு என்ற இன்னோரன்ன சிறப்பாற்றல்கள் இப்பகுதியில் பளிச்சிடுகின்றன.

ஆற்று நீரோட்டம் போல, அரியசெய்திகளை வரிசைப்படுத்தித் தரும் இந்நூலைச் சமய நெறி கற்பாரும் தமிழ் மாணவரும் கற்றுப் பயன்பெறவேண்டும். அருள்நெறித் திருநூல்களை அருகணைத்தற்கு அஞ்சும் இடங்களாக நினைந்து, ஒதுங்கியே நடந்துபோகும் மனப்போக்குகள் மாறவேண்டுமேல் இத்தகைய வழிகாட்டும் வன்மை மிக்க சிறுசிறு நூல்வரிசைகள் வந்துகொண்டே இருக்க வேண்டும்.

அறக்கட்டளைகளை நினைவுகூரப்படுவோர்க்கும் அந்நினைவை நிலைக்க வைக்க அறக்கட்டளை நிறுவியோர்க்கும் பெருமை தருமாறு செயற்படுத்தி வருகிறது மதுரை காமராசர் பல்கலைக்கழகம். தமிழியல்துறை இணைப்பேராசிரியரும் பதிப்பாளருமாகிய அறிஞர் கதிர். மகாதேவன் இவற்றை நன்கு வெளிப்படுத்தப் பெருமுயற்சிகள் எடுத்துவருகின்றார். இதன்கண் அனைவரும் ஒத்துழைப்பதுடன் தமிழ் மக்களும் இந்நூல்களைப் பெரிதும் ஏற்றுப் போற்றுவராயின், எம்முடைய 'சீரிய முயற்சிகள் சிறந்துமிக்கோங்கும்' என்பதுறுதி.

6-1-1986
மதுரை.

தமிழண்ணல்

முதற் பார்வை

# இலக்கியத் திறன்

தமிழ்நலம் செழுமிய சான்றோர்களே! ஆய்வாளர் பெருமக்களே!

## 0. ஐந்தமிழ்த்துணிவு

இந்த இனிய மாலைப் பொழுதில், ஐந்தமிழ் விழாக் கொண்டாடி மகிழும் நல்ல வேளையில், இலக்கியப் பேருரையாற்றும் ஓர் அரிய பங்கை எனக்குத் தந்த நல்லோர் அனைவர்க்கும் என் நன்றியை முதற்கண் தெரிவித்துக் கொள்கின்றேன். மதுரை காமராசர் பல்கலைக் கழகம், செந்தமிழுக்குக் காலம் தழுவிய பல பணிகளைப் புதிது புதிதாகச் செய்து, அன்னையின் திருமேனிக்குப் பலப்பல அணிகலன் களைச் சார்த்தி மகிழும் பெருந்திறம் உடையது; காலத்திற்கேற்ப மாறி வரும் உலகச் சூழ்நிலைக்கேற்ப புத்துலகத் தேவைகளுக் கேற்ப- இன்றமிழ்த்தாய்க்கு இத்துறை எடுத்து வரும் இனிய பணிகளில் முடிமணியாக விளங்குவது இந்த 'ஐந்தமிழ் விழா' என்பது என் கருத்து. 'முத்தமிழாக' விளங்கி வந்த தமிழைத்துணிவுடன், 'ஐந்தமிழ் என்று அயரா அன்புடன் அழைத்து விழா எடுக்கும் வித்தகத்தை எச்சொல்லால் பாராட்டி மகிழ்வேன் யான்?

## 0.1 ஐந்தமிழ் அரும்பொருள் :

இயலும், இசையும், கூத்தும் என்னும் மூன்று நிலைகளில் இருந்த தமிழின் வளர்ச்சி நிலைகளின் படிகளாகிய நுண்கலை, அறிவியல் என்ற இரண்டையும் சேர்த்து விழா எடுப்பது மகிழ்வுக்கும் நெகிழ்வுக்கும் உரிய நிகழ்வு. தமிழ் இவ்வாறு வளர்ந்து வருகிறது; மேலும் வளர இருக்கிறது. பல்துறைத் தமிழாக மேலும் மேலும் வளர வேண்டும். "ஓங்கலிடைத் தோன்றி, உயர்ந்தோர்தொழ விளங்கி, ஏங் கொலி நீர் ஞாலத்து இருளகற்றும் மின்னேர் தனியாழி வெங்கதிரோ டொத்தது தன்னேரிலாத தமிழ்" என்று தண்டியலங்காரத் தண்டமிழ் வெண்பா கூறுவதற்கேற்ப,[1] உலகத் தமிழாக இன்று உருவெடுத்து வருவது ஒண்டமிழ்; இதனைக் கோடிட்டுக் காட்டி அயர்ந்து கிடக்கும் அருந்தமிழ் மக்களுக்குப் புதிய உணர்வு ஊட்டி, முன்னே செல்ல விருக்கும் பணி நெடும்பாதையைச் சுட்டிக் காட்டுவதாக அமைகிறது 'ஐந்தமிழ்' என்ற அரும்பொருட் குறிப்பு.

## 0.2 மூலையிலிருந்து முற்றத்திற்கு:

'எதிலும் தமிழ்,' 'எங்கும் தமிழ்' என்ற குறிக்கோளை உடைய இப்பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கட்கும், தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் தமிழண்ணல் அவர்கட்கும் தமிழ்கூறு நல்லுலகின் சார்பில் பெருநன்றியன். தமிழ்க் கடல் காரைக்குடி இராய. சொக்கலிங்கனார் அவர்கள் அறக்கட்டளைச் சொற்பொழிவிற்கென என்னைத் தேர்ந்து தெளிந்தமைக்கு எவ்வாறு நன்றி கூறுவன்? இத்தேர்வு என் உள்ளத்தில், சான்றோர் சாத்திர வாக்கு ஒன்றினையே எழுப்புகின்றது:[2]

*"மூலை யிருந்தாரை முற்றத்தே விட்டவர்*
*சாலப் பெரியர்என் றுந்தீ பற*
*தவத்திற் றலைவர் என்றுந்தீ பற"*

ஆம் ! தமிழ்நாட்டின் மூலையொன்றில், பொன்னிக்கரையோர மயிலாடுதுறைச் சிறுநகரில் தமிழ்ப்பணியில் தோய்ந்து கிடக்கும் என்னை, வைகை நதிக்கரையோரம் வளர்ந்தோங்கி நிற்கும் இப்பல் கலைக்கழக முற்றத்தே கொணர்ந்த தமிழன்பிற்குத் தலை வணங்கி என் பணியில் முந்துகின்றேன்.

## 0.3 தேவாரம்–இரண்டு பார்வைகள் :

தமிழ் காலந்தோறும் திட்பநுட்பமும், புத்தழகும் பொலிவும் கொண்டு வளர்ந்துவரும் இயக்கமொழி. தேங்கிப் போன எத்தனையோ மொழிகள் இவ்வையகத்தில் உண்டு; தேய்ந்து போன எத்தனையோ மொழிகள் இவ்வுலகிடை உண்டு; வழக்கற்றுப்போன எத்தனையோ மொழிகள் இம்மண்ணிடை உண்டு; வாழ்வற்றுப் போன எத்தனையோ மொழிகள் இப்பாரிடை உண்டு. ஆனால், நம் தண்டமிழ் மொழியோ உயிர் மொழியாய் இன்றும் மக்கள் நாவிடைத் தங்கிப் புதுக்கோலம் பலவற்றைத் தாங்கிப் பொதியமாய். இமயமாய் நின்று நிலவுகின்றது. சங்க காலத்திற்குப் பின் இறையன்பு நெறியில் நம் தமிழ் வனப்புக் கோல வடிவொன்று கண்டது. காதலும் வீரமும் ஆகிய நெறிபடர்ந்த தமிழ் இறையன்பு என்ற தனிநெறியில் தலை நிமிர்ந்த காலத்தையே 'பத்தி இலக்கிய காலம்' என்று இலக்கிய வரலாற்றாசிரியர் பாகுபாடு செய்கின்றனர். ஆம்; இறையன்பில் தோய்ந்த அருளாளர் தோன்றி, 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய' காலம் அது;[3] புதுப் புனலாக அன்புத் தமிழ் இத்தென் னாட்டிடைப் பெருக்கெடுத்த காலம் அது; தேவார அமுது தமிழ்ப்

பாற்கடலில் தோன்றிய புதுப்புராணப் புனைவு பொங்கிய காலம் அது. இறையருள்அன்றி வேறெதுவும் கருதாத திருவருட்செம்மாப்புடைய பேரருளாளர் வழி உணர்வு பொங்கிய காலம் அது. அவ்வமுதப் பாக்கள் ஆயிரம் ஆயிரமாகத் தமிழ் உலகில் வழிந்தோடின. இறையன்பு என்ற ஊற்றுக் கண்ணிலிருந்து தமிழ்த் திருக்கோயில்களிலேயும், தமிழகத் தெருக்களிலேயும் பெருகியோடிய அந்தப் புதிய தமிழின் வேகத்தையும், அக்காலத் தமிழரின் தாகத்தையும் மறக்கவியலாது. அந்தப் பாடற்றொகையைப் பகுத்தாய்வது தமிழ்இலக்கிய வரலாற்றில் ஒரு குறிப்பிட்ட காலக் கட்டத்தை ஆய்வதாகும். அந்த ஆய்வினையே இந்த இரண்டு உரைகளில் நான் இரண்டு பார்வைகளாக மேற்கொள்ளுகின்றேன்.

### 0.4 ஒரு சிந்தனையாற்றுப்படை முயற்சியே:

எப்பொருளையும் ஆயப் புகும்போது சில நோக்குகளைக் கொண்டு தொடங்குதல் நல்ல விளைவுகளைத் தரும். ஆனால் அந்த நோக்குகள் முழுமையான அளவில் அமைதல் வேண்டும். இறையன்புப் பேராழிகளாகிய — சிவநெறிச் செழும்புதையல்களாகிய மூவர் தேவாரத்தை இரண்டு நோக்குகளில் இங்கு ஆயப் புகுகின்றோம். ஒன்று இவ்விறையன்புப் பனுவல்களின் இலக்கியத் திறன் பற்றியது; மற்றொன்று மெய்ப்பொருள் திறம் பற்றியது. இவ்விரண்டு பார்வைகளில், மெய்ப்பொருள் திறன் பற்றியதைப் பின்னே வைத்து, இலக்கியத் திறன் பற்றியதை முன்னே வைத்துத் தொடங்கலாம். வோரம் மெய்ப்பொருட் பார்வைக்குரிய நூல்; இறைநெறி பற்றிய பனுவல். ஆதலின் அது பற்றிய நோக்கு அனைவர்க்கும் புதுவது ஒன்று அன்று. இலக்கியத் திறன் பற்றிய செய்திகள் அவ்விறையன்புத் திருநூலில் உண்டு என்பதே இங்குப் புதியது. தோத்திர நிலையில் வைத்தே கருதிப் பழகிவந்த இத்திருநூல் தொகுப்பில், புதிய சிந்தனை விளைவாக நோக்கும் புதுப்பார்வை முன்னது என்பது கூறாமலே விளங்கும். புதியதை முன்னே கிளந்தெடுத்து ஓதிப் பின்னே பழகிய பாதையில் தொடர்வது ஓர் இனிய உத்தியாகும் என்று கருதியமையே இம் முறைவைப்பிற்கு அடிப்படை. 'நுதலிப்புகுதல்' என்ற தொல்காப்பிய நூல் நெறியில் இவ்வாறு தொடங்கிப் புகுகின்றோம்.

தேவாரத்தின்கண் பொதிந்துள்ள இலக்கிய நலங்கள் அனைத்தையும், இவ்வொருநாள் விரிவுரையில் எடுத்துரைத்திட இயலாது எனினும், ஆங்காங்குக் காணப்பெறும் இலக்கியச் சிறப்புக் கூறுகளைச்

சுட்டுதல் நம் குறிக்கோளாகும். ''ஓர் இலக்கியப் படைப்பின்கண் பொதிந்துள்ள இலக்கியச்சிறப்புக்களை யெல்லாம் கலைநுணுக்கத்தின் உதவியால் வெளிப்படுத்துவதே சிறந்த திறனாய்வு'' என்பர் வல்லோர்.[4] அக் கூற்றுக்கிணங்க இங்குக் கூடியுள்ள சிந்தனையாளர்களை ஆற்றுப் படுத்தும் வகையிலேயே இவ்வுரை அமைகின்றது.

## 0.5 கவிஞர்களின் அறநெறி நாட்டம்:

கவிதை கவிஞனுடைய அற்புதப் படைப்பு; உள்ளத்தே கனன்ற கனலொன்றே அற்புதமான கவிதையாக வார்ப்படம் கொள்ளு கின்றது. கவிதை என்ற பெயரில், சிலவேளைகளில் நெஞ்சத்தில் தேங்கியிருந்த துயர நினைவுகள் வெளிப்படுவதும் உண்டு. பொங்கித் ததும்பி நின்ற மகிழ்ச்சி கவிதை வடிவம் பெற்றுக் கனிப்பித்தலும் உண்டு. எங்ஙனமாயினும் கவிதைக்கு ஒரு நோக்கம் இன்றியமை யாததாக உள்ளது. ஒப்பற்ற கவிஞர்கள் உலக நல்வாழ்வே நாட்டமாக உடையவர்கள்; தந்நலம் என்பதைக் கனவிலும் கருதாத வர்கள் அத்தகு விழுமியோர், 'தீய என்பன கனவினும் கருதாத தூய மாந்தர்' என்று சேக்கிழார் சுட்டுவது இத்தகு சான்றோரையே குறிக்கும்.[5] இவர்கள் உலகத்திற்கு உறுதிப் பொருளைக் கூறி நன்னெறிப் படுத்தும் போக்கினர். எம்மொழிக் கவிஞர்க்கும் இது பொருந்துவதாகும்.

கவிதை பொழுது போக்குவதற்காகவே என்ற கருத்துத் தமிழர்க்குப் பொருந்தாது; தமிழ்க்கவிஞர் பொழுதுபோக்கிற்குத் தம் படைப்பாற்றலைப் பயன்படுத்தினாரல்லர்; அறிவுறுத்தி மாந்தரை உயர்விப்பதே இவர்தம் தலையான நோக்கமாக இருந்தது, குறிக் கோளை வெளிப்படையாகவோ, அன்றிக் குறிப்பாகவோ சுட்டி நெறிப்படுத்தும் உயர்ந்த நோக்கம் அற்றவையைக் கவிதையென்று கொள்ள முடியாது. அறநெறிக்கு மாறுபட்ட கவிதை மெய்யான கவிதை அன்று என்று இக்காலத் திறனாய்வாளரும் எடுத்துமொழிவது மறக்கற் பாலதன்று[6]. ''இலக்கியம் அறநெறிப் பட்டதாகல் வேண்டும் என்பதற்கும், அறநெறியைப் போதிக்க வேண்டும் என்பதற்கும் நிறைய வேறுபாடு உண்டு. இலக்கியப் பொருள் அறநெறி பிறழாதமையின் கற்பாரை அது நன்னெறி நிறுத்தும் என்பது தமிழ்நூற் கோட்பாடாகும்'' என்ற தமிழியற் பேரறிஞர் கூற்று இவ்விடத்து மனம் கொள்ளத் தக்கது.[7]

கவிதைக்கு நோக்கம் எது எதுவாக இருக்கலாம் என்று நெடுக எழுதுவதை விடச் சுருக்கமாக ஒன்று கூறலாம். தன்னைப் படிப்பவர் களை உயர்ந்த நிலைக்குக் கொணர்வதே ஓர் உண்மையான கவிதையின் அளவடையாக இருக்க முடியும். பாட்டியல் நூலில், 'மதுரகவி' எது என்று உரைக்கும் தமிழ் இலக்கண வரையறை ஒன்று இங்கு நினைக்கத்தக்கது;[8]

*"எடுத்த பொருளினோடு ஓசை இனிதாய்*
*அடுத்தவை செஞ்சொல்லாய் அணியும் — தொடுத்த*
*தொடையும் விளங்க அவைதுதிப்பச் சொல்லின்*
*இடமுடைய மாமதுர யாப்பு"*

'இவ்வியல் கவிதைக்கு உரியது' என்று சுட்டிய இப்பழம் பாட்டும், 'எடுத்த பொருள்' என்று, 'விழுமிய பொருளை' யே தொல் காப்பிய நெறியில் சுட்டுகின்றமை காணலாம்.

## 0.6 கவிதை-ஒரு ஞானவேள்வி:

தன்னைக் கற்போர்க்குத் தான் உணர்த்த வந்த செய்தியை உணர்த்தாத வரையில், ஒரு கவிஞனை உயர்த்திக் கூறமுடியாது. உலக நிலையில் ஆழ்ந்து கிடக்கும் மனிதனைத் தன் கருணைக் கரங் களால் தழுவியெடுத்து, அவனுக்கு இயற்கையின் மாபேராற்றலை அறிவுறுத்தி, கீழ்நிலைப்படுத்தும் உணர்வுகளினின்றும் அவனை மீட்டு உயர்ந்த சிந்தனைகளோடு அவனை ஒன்ற வைக்கும் பணியையே ஓர் இனிய கவிதை செய்து முடிக்கின்றது. அதுவரை மூடிக் கிடந்த மனிதனின் அகவிழிகள் இப்போது மலர்கின்றன; தன்னைச் சூழவுள்ள உலகையும், தான் உணர்ந்த புதிய உலகையும் ஒப்பிட்டுணர்ந்து இறும்பூது எய்துகின்றான் மனிதன். கவிஞனின் சொற்கள், இனிய கற்பனை, உணர்த்தும் திறன் முதலிய அனைத்தும் அவனைக் கவி யுலகிற்கு மீண்டும் மீண்டும் அழைத்துச் சென்று நிலைக்க வைத்து விடுகின்றன.[9] ஆம்; கவிதையின் நோக்கம் அப்போது கைகூடி விடு கின்றது; கவிஞனின் உள்ளுணர்வு படிப்போனின் நெஞ்சில் சுடர் விட்டுக் கலைத் தொடங்குவது அப்போதே எனலாம்.[10] இது ஒரு வகை ஞானவேள்வி தான்; தூய வேள்விதான். உயர்ந்த கவிதை இந்த வேள்வியைக் காலம் காலமாகச் செய்து வருகின்றது. படைத்த படைப்பாளி மறைந்தாலும் படைப்புத் திறன் கொண்டு அவன் படைத்த கவிதை அல்லது இலக்கியம் காலத்தை வென்று நின்று இத்

தகு விழுமிய பணியைத் தொடர்ந்து செய்து கொண்டிருக்கின்றது.

### 0.7 தொல்காப்பிய விளக்கொளி:

தூய இலக்கியங்கள் சங்க காலத்திற்கு நெடுங்காலம் முன்பிருந்து பிறக்கத் தொடங்கி விட்டன. தமிழ் மாந்தர் செய்த தவச் சிறப்பாக அழிந்தன போக இன்று பட்டொளி வீசி நிற்கும் பத்துப் பாட்டும், எட்டுத் தொகையும் முதலிய பழந்தமிழ் இலக்கியங்கள் ஒவ்வொன்றும் இத்தகைய உயர் நோக்கம் உடைய சொல்லோவியப் புதையல்கள். இலக்கிய நலம் கனியக் கனியப் பூத்து நிற்கும் புது மலர்களாக விளங்கும் இச்சங்கக் கவிதைகள் ஒவ்வொன்றும் நம் மூதாதையரின் மூதறிவிற்குச் சான்றுகள்; அவர்கள் உணர்வுலகத்துப் படைப்புக்களுக்கு அடையாளங்கள், வாழ்வின் முழுமையை நன்கு உணர்ந்து, உலகிற்கு நெறிகாட்ட அவர்கள் எடுத்துக் கொண்ட முயற்சிக்கு முழுவடிவங்கள். தொல்காப்பியர், இத்தகு இலக்கியத் திறம் எண்ணற்றவைகண்டு, தம் இலக்கண விளக்கை ஏற்றி உலகிற்குநெறி காட்டிய அற்புதத்தை விட ஒரு பேரற்புதம் உண்டா?

### 0.8 பக்தி இலக்கியப் பாங்கு:

சங்கப் பாட்டுக்களின்பின் பத்தி இலக்கியக் காலத்துத் தேவார மூவர் பாடிய திருப்பாட்டுக்களை ஓதும்போதும், ஓதி உணரும்போதும் உணர்ந்து உருகும் போதும், உருகிக்கனியும் போதும், கனிந்து பத்தி நெறியிற் படரும்போதும், படர்ந்து இறையருள் மாண்பினை எண்ணும் போதும், உயர்ந்த இலக்கியம் அருள்நெறியில் ஒன்றாகிப் போன மாயத்தை நன்கு தெளிவாக எண்ண முடிகின்றது. அவர்களது கவிதை படைப்புக்கள் வையக மாந்தர் நல்வாழ்வு ஒன்றே கருதுபவை; தாம் பெற்ற பேரின்ப நுகர்வைப் பெறாதோர் மாட்டும் பதிவிக்கும் பெருந் திறன் வாய்ந்தவை.

### 0.9 கவிதை வரையறை:

இலக்கியம் அல்லது கவிதை என்பதற்கு நல்லோர் உரைக்கும் வரையறைக் கூறுகள் அனைத்தும் பொருந்தி, அவற்றிற்கு அப்பாற் பட்டுநிற்கும் திறன் உடையவையாக இத்திருப்பாட்டுக்கள் திகழ்கின்றன.

பவணந்தி கூறிய செய்யுள் வரையறையும், தொல்காப்பியர்

அவர்க்கு முன்னே உரைத்த இலக்கண அமைப்பும் தேவாரக் கவிதைகளுக்கு நல்ல விளக்கங்களாகவே அமைந்திடக் காண்கின்றோம்;

''பல்வகைத் தாதுவின் உயிர்க்குடல் போற் பல
சொல்லாற் பொருட்கிடனாக உணர்வினின்
வல்லோரணிபெறச் செய்வன செய்யுள்''

என்று நன்னூலாரும்,[11] ''இழுமென் மொழியால் விழுமியது நுவலல்'' என்று தொல்காப்பியரும்[12] கூறியுள்ள செய்திகளை நினைவு கொள்ளல் வேண்டும். இவற்றைவிட இலக்கியக்கலைக்கு வரையறை கூறிவிட முடியாது, ''பொருளுக்கு இடனாகச் சொற்களாலும்' 'இழும்' என்னும் மொழி நடையாலும் உயர்ந்த பொருளை, உணர்வு வல்ல சீரிய மாந்தர்கள் படைப்பதே கவிதை'' — என்ற வரம்பு முழுமை பெற்று விளங்குவதை இனிதுணர்தல் வேண்டும்.

கவிதைக்கு வரையறை வகுக்கப் புகுந்த இலக்கியத் திறனாய்வாளர் ஒவ்வொருவரும் ஓரொரு கூறு பற்றியே சொல்லி முடித்தனரே தவிர, நம் தமிழ்ச் சான்றோர் போன்று முழுமை பெற ஓதினாரிலர். ''அறிவுக்கு ஒத்த நிலையில் உண்மையும் கற்பனையும் இணையுங்கால், உண்டாகும் இன்பத்தினை விளக்கின்ற யாப்பமைதிக்கு உட்பட்ட வெளியீடே என்று கூறினர் சான்சன். மில், ''உணர்ச்சி தானே பொங்கிப் பாய்ந்திடச் சொற்களும் கருத்தும் கூடி விளைவதே கவிதை'' என்று இயம்பினர். ''இல்லாததைக் கற்பனையாக்கிக் கவினுறுத்தும் கலையினையும், வண்ணங்களைக் கொண்டு ஓவியன் தீட்டுமாறு சொற்களைக் கொண்டு சுவைபெறத் தீட்டும் கலையினைத்தான் நாம் கவிதை என்று கருதுகின்றோம்'' என்று மெக்காலே விளம்பினர், கார்லைல் என்பார், ''கவிதையை நாம் பண்ணார்ந்த கருத்து என்று பகரலாம்'' என்று கூறி முடித்தார். செல்லி என்பாரோ, ''கவிதை யாவது கற்பனையின் விளக்கமே'' என்றுரைத்தார். ''கற்பனையும் உணர்வுகளும் இணைந்த ஒரு நடையே கவிதை நடை'' என்றனர் ஆகுலிட்கு என்ற அறிஞர், ''உண்மை காணும் உணர்வின் கூற்று; கற்பனையும், வெறுங்கற்பனையும், அழகும், ஆற்றலும் ததும்பக் கூடியும் விளக்கியும் வேற்றுமைப் பட்ட கூறுகளில் வெளிப்படும் ஒற்றுமை நடை உடையது'' என்றார் லி அன்ட் என்பார். ''கவிதை என்பது அறிவியலுக்கு மாறானது; அதனுடைய மெய்யான பயன் இன்பம் ஊட்டுவது; உண்மை காண்டல் அன்று'' என்றார் கோல்ரிட்ச், த வாழ்வின்சொற்கள், ஒளியை உடையதும், முழுமை உடையது

மான கூற்றினை உடையதாகிக் கவிதைத் தன்மை பெறுகின்றன'' என்பது மாத்யூ அர்னால்டு மதிப்பீடு. ''அழகின் ஒலிநயம் இணைந்த படைப்பே கவிதை'' என்பது எட்கார்-ஆலன்-போ கருத்துரை. ''உயர்வு சான்ற அறநிலையில், உயர்ந்த மெய்ப்பாட்டுணர்வுகளைத் தூண்டு தற்குக் கற்பனையால் தோன்றும் கருத்து வடிவமே கவிதை'' என்பார் ரசுகின். ''நிலைபேறான கலையழகு ததும்பும் வெளியீடும், மனித மனத்தின் உணர்வும் ஒலியொழுங்கும் இணைத்த படைப்பே கவிதை'' என்று கூறுவார் தண்டன்.[13] கற்பனை, உணர்ச்சி, உணர்த்துதல், ஒலிநயம், வடிவம் ஆகிய அனைத்தாலும் கவின் பெற்று விளங்குவதே கவிதை என்று இவற்றான் உணர முடிகின்றது. ஒவ்வொருவரும் தாம் உணர்ந்தவாற்றான் ஒவ்வொரு வகையான் கூறினும், கூடுதல் உண்மையாக இவ்வாறே முடித்துக் கொள்ள வேண்டியிருக்கின்றது.

## 0.10 இந்தியக் கோட்பாட்டின் படிக் கவிதை :

கவிதை பற்றிய இந்தியக் கோட்பாட்டிற்கு முடிமணியாக விளங்குவது தொல்காப்பியம். ''செய்யுளியல்'' என்றே ஓர் இயலை வகுத்து அதன்கண் எண்ணற்ற கவிதைக் கூறுகளை ஆராய்ந்து முடிவு போக்கியுள்ளார் தொல்காப்பியர். கி.மு. ஐந்தாம் நூற்றாண்டில் எழுந்த உயர் தனிச் செந்நூல் தொல்காப்பியம். அதன்கண் எழுந்துள்ள மரபுகளே மூல வரையறை மரபுகள் என்று கொள்ளத் தக்கவை. முழுமை பெற்றவை அவை என்று கொள்ளுதல் தவறாகாது.

## 0.11 உள்ளுணர்வுக் கவிதை :

கவிதைக்குத் தூண்டுதல் 'உள்ளுணர்வு' என்பது அடிப்படை யான கோட்பாடாகக் கொள்ளத்தக்கது. ''உள்ளுணர்வு தூண்ட வெளி வரும் கவிதையில் கற்பனை இழைகிறது; வடிவம் தானே வந்து அமை கிறது; ஒலிநயம் கூடுகின்றது; கவிஞன் தான் உணர்த்த வந்ததை மெல்ல மெல்லப் படிப்போர் நெஞ்சங்களிற் பதித்து விடுகின்றான்.'' என்று கூறும் அரவிந்தர் சொற்களை நாம் மறக்க இயலாது.[14] ''தன்னைப் படிப்பவனை உணர்வுலகத்திற்கு அழைத்துச் செல்லாத வரையில் ஒரு கவிதையைக் கவிதையென்று கூறிட இயலாது'' என்று வரைகின்றார் எல் ஆபர் கிராம்பி.[15]

தேவாரப் பாக்கள் இந்த வரையறைகளுக் கெல்லாம் முழுதும் பொருந்தி நிற்கின்றன. இவ்வுரையில் அது மேலும் விளக்கப்பெறும். இறையருளால், உள்ளுணர்வு பெருக் கெடுக்கப் பொங்கிப் பெருகிய

அமுத வெள்ளமாக விளங்கும் இத்திருநெறிப் பாக்கள், இலக்கியப் பேராழியாகவே திகழ்தல் கண்கூடு.[15A]

## 1. பக்தியில் மலர்ந்த பாமலர்கள் :

சமயநெறியில் மலர்ந்த திருமலர்களே அருளாளர்கள் படைத்துள்ள இந்த இலக்கியங்கள். சமயம் என்பதே மனிதன் தன் ஆன்மிக முன்னேற்றத்திற்குப் பின்பற்ற வேண்டிய பெருநெறி அன்றோ? நம் சமயச் சான்றோர்களாகிய அருளாளர்கள் மனித சமுதாயம் வாழ்வதற்கென்றே தம் அருள் மொழிகளை அருளிச் சென்றனர். அவ்வருளிச் செயல்கள் அனைத்துமே மன்னுயிர்கட்கு நலம் பயப்பனவே. அக முகத்தே இறைவனைக் காணவும், அத் திருவருளிலே தோய்ந்து இன்புறவும், மெய்ப்பொருளைக் கண்டு தோயவும், தொண்டில் இன்பம் காணவும், தூய அன்பிலே இன்பம் காணவும், அவ்வருளிச் செயல்கள் துணைபுரிகின்றன. உலகச் சமயச் சான்றோர் திருமொழிகள் அனைத்துமே இப் பெருநெறி காட்டுகின்றன. தேவார மூவர் திருவாக்குக்களில் இவை வெளிப்படையாகவே விளக்கம் பெற்றுள்ளமை காணலாம்.

### 1.1 மூவர் தேவாரத் தொகை :

மூவர் தேவாரப் பாடல் தொகை பின்வருமாறு அமைத்துள்ளது.

| ஆசிரியர் | | திருமுறை அமைப்பு | | பாடல் |
|---|---|---|---|---|
| திருஞானசம்பந்தர் | — | 1,2,3 ஆம் திருமுறைகள் | — | 4158 |
| திருநாவுக்கரசர் | — | 4,5,6 ஆம் திருமுறைகள் | — | 3067 |
| சுந்தரர் | — | 7 ஆம் திருமுறை | — | 1026 |
| | | கூடுதல் | — | 8251 |

## 2. அகப்பாட்டு நெறி அமைவு :

இறைவனை அருளாளர்கள் உணர்ந்து துய்க்கும் முறைகளில் ஒன்றாக, இறைவனைத் தலைவனாகவும், தம்மைத் தலைவியாகவும் வைத்துக் காணும் முறையும் ஒன்று. இதனை அவர்கள் படைத்த கவிதைகளில் காணலாம். அங்கே கனிந்த உள்ளம், கடவுட் காட்சியாக, அகப்பொருள் கலந்த அருங்காட்சியாக, இலக்கியச்சுவை ததும்பும் காட்சியாக விளங்கக் காணலாம். தலைசிறந்த கற்பனை எழில் கலந்த இன்பக் காட்சிகள் அவை. இது தொல்காப்பியம் கண்ட தொன்முறை; தொல்காப்பியர்,

"காமப்பகுதி கடவுளும் வரையார்
ஏனோற் பாங்கினும் என்மனார் புலவர்"

என்று அருள்வார்.[16] இவ்வாறு கடவுளிடத்து மானிடப் பெண்டிர் நயக்கும் பகுதியை இம்முதலாசிரியர், பாடாண்திணையுள் அடக்குவர். இந்த உணர்வை, "நாயக நாயகி பாவம்" (Bridal mysticism) என்று கூறுவர். இந்த ஆன்மீக உறவினை வைணவ உரைகாரர்கள் தம் உரைப்பகுதியில் விளக்கியுள்ளனர். 'விஷய காமம்' 'பகவத் காமம்' என்ற இரண்டில், 'பகவத் காமமாக' அவர்கள் சுட்டுவது, தெய்வீக நிலையில் உள்ள காதல் உணர்வே ஆகும். இராமாநுச நூற்றந்தாதியில், "கண்ணனுக்கே ஆம் அது காமம்" என்று கூறியிருப்பது ஒப்பிடத்தக்கது.[17] தேவார மூவர் பாடுகின்ற அகப்பொருட் பதிகங்களை இந்தச் 'சிவகாம' அடிப்படையில் சிந்திக்க வேண்டும்.[18]

திருஞானசம்பந்தர் திருவாக்கில் 14 பதிகங்கள் அகப்பொருள் தழுவி வருகின்றன. தனிப்பாடல் ஒன்றும் உள்ளது.[19] திருநாவுக்கரசர் திருவாக்கில் 9 பதிகங்கள் இப்போக்கில் அமைந்து இன்பம் ஊட்டுபவை. ஏனைய பாடற் பகுதிகளாக ஏறத்தாழ 9 காணப்படுகின்றன.[20] சுந்தரர் அருளிய பைந்தமிழ்க் கவிதைகளில் 2 பதிகங்களும், ஒரு தனிப் பாடலும் அகப்பொருட் சுவை பொதிந்து திகழ்கின்றன.[21]

## 2.1 பாலறாவாயர் அகநெறி :

திருஞானசம்பந்தரின் முதற் பதிகமே அகப்பொருள் நெறியில் அமைந்ததுதான். "என் உள்ளம் கவர் கள்வன்" என்று தன் உள்ளம் கவர்ந்து சென்ற தலைவனைத் தலைவி ஒருத்தி அடையாளம் காட்டுவதாக அமைந்த பதிகம் அது,[22]
தொல்காப்பியர்,[23]

"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கில்
காமக் கூட்டம் காணுங்காலை,
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே"

என்று உரைப்பர். "பிறர்க்குரித்தென்று இருமுதுகுரவரால் கொடையெதிர்ந்த தலைவியை அவர் கொடுப்பக் கொள்ளாது, இருவரும் கரந்த உள்ளத்தோடு எதிர்பட்டுக் கலந்த களவு ஆதலின், பிறர்குரிய பொருளை பறையிற் கொள்ளும் களவு அன்று இது" என்பர்

நச்சினார்க்கினியர்.[24] இவ்வாறு எதிர்ப்பட்டு இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்திய பின்னர்ப் பிரிவு தேர்ந்த இடத்து, தலைவி தன் உள்ளம் முதலியவற்றைத் தலைவன் கவர்ந்த வரலாற்றைக் கூறி வருந்துவாள். இவ்வருத்தம் அத்தலைவனுடைய இயல்பு மாட்சிகளைப் பின்னும் நினைந்து இன்புறுதற்கு ஏதுவாகும் அன்றோ?

''என் உள்ளத்தைக் கவர்ந்த கள்வனாகிய சிவபெருமான் பிரமாபுரம் மேவிய பெம்மான்; அவன் தோடு உடைய திருச்செவி யினன்; விடையேறி வந்தனன்; சடையில் தூய வெள்ளிய மதியினைச் சூடியிருந்தனன்; திருநீற்றுப் பூச்சினைத் திருமேனி முழுதும் உடை யவன்; பிரமன் முன்னை நாளில் வழிபட அவனுக்கு அருள் செய்த பெருங் கருணையாளன்'' என்கின்றாள் தலைவி.[25] இவ்வாறே இம் முதற்பதிகம் முழுவதும் தலைவன் பெருமாட்சிகளை எண்ணி உருகு வதாக அமைகின்றது. இப்பதிகத்தின் திருக் கடைக்காப்புத் திருப்பாட் டில், 'ஒரு நெறியமனம் வைத்துணர் ஞானசம்பந்தன் உரை செய்த திரு நெறிய தமிழ்' என்ற தொடரைப் பாலறாவாயர் அமைக்கின்றார். அகப் பொருள் நெறியில், இறைவனை அடைந்து அனுபவிக்கும் உயர் ஞானச் சிவநெறியின் மூலவித்தாக இத்திருப்பதிகம் கருதத் தக்கது. ''திருநெறி'' என்று சிவஞானப்பிள்ளையார் குறித்த திறம் உணர்ந்து மகிழத்தக்கது. ஆன்மநாயகன், உயிர்த் துணைவனாக உள்ள இறைவனை உயிர் கலந்து தினைக்கும் உயர்ந்த இலக்கினை-குறிக்கோளை அடையும் நெறியே ''திருநெறி'' என்ற குறிப்பு மறக்க வியலா மாண்புடையது. ''இலக்கு+இயம் என்று பிரித்து, இலக்கினை இயம்புவதே இலக் கியம்'' எனக் கூறிநிறுவுவர் அறிஞர்.[26]

இவ்வாறு திருஞானசம்பந்தர் அருளிய முதற்பதிகம் தலைவி தலைவன் உள்ளம் கவர்ந்த செய்தியை உரைப்பதாக உள்ளது. தலைவி கூற்றாகவே பாலறாவாயரது அகப்பொருண்மை தழுவிய பதிகங்கள் அமைந்துள்ளன.

தலைவன் உள்ளம் கவர்ந்தான் என்பதுடன், பழந்தமிழ் இலக்கிய நெறியில் தன் எழில் கவர்ந்தான் என்று உருகுவதும் உண்டு.

தன் கோல நீர்மையைக் கவர்ந்தான் என்றும் கூறுவார்; தன் சாயலைப் பறித்துக் கொண்டான் என்றும் கனிவார்; துயிலை

இழந்ததும் அவனாலேயே என்று விளக்குவார்; தன் நலத்தையும், பெண்மையையும் கொண்டான் என்றும் கூறுவார். கலை, வளை, நர்ண் மூன்றும் இழக்குமாறு செய்தனன் என்று உருகுதலும் உண்டு

*''இரவில் புகுந்து என் எழில் கவர்ந்த இறைவர்''*
*''கண்கொண்ட சாயலோடு ஏர் கவர்ந்த கள்வர்''*
*''கள்வர் வெள்ளர் போல உள் வெந்நோய் செய்தார்''*
*''குமிழின் மேனி தந்து கோல நீர்மை யது கொண்டார்''*
*''நாண்முகம் காட்டி நலம் கவர்ந்த நாதர்''*
*''எனதாகம் பொன்னிறம் ஆக்கினார்''*

என்றெல்லாம் வரும் மொழிகள் இலக்கிய நலம் பொதுளியவை.[27]

''இவன் எனது நெஞ்சம் நிறையழித்த கள்வன்'' என்று முத்தொள்ளாயிரமும்,[28] ''யாருமில்லைத் தானே கள்வன்'' என்று குறுந்தொகையும்,[29] கூறும் பொருளார்ந்த வரிகள் இங்கு நினைவில் எழத்தக்கவை.

## 2.2 நாவரசர் அகநெறி :

அப்பர் திருமொழியிலும், அகப்பொருள் நெறிப்பட்ட திருப்-பாட்டுக்களில் தலைவி கூற்றாக வருவன இக்கருத்துக்களோடு ஒத்த ஒட்பம் உடையன.[30]

*''என் சோர் குழல் ஏசலாம் பழி தந்து எழில் கொண்டனர்''*
*''மற்றவனென் தளிர் வண்ணம் கொண்ட நான்*
*தானறிவான் குறிக் கொள்ளா தொழிவானோ''*
*''நிறையும் நெஞ்சமும் நீர்மையும் கொண்டவன்''*
*''நெடுந் தெருவே வந்தெனது நெஞ்சர் கொண்டார்''*
*''நிறை வளையார் பலிபெய்ய நிறையும் கொண்டு''*
*''அங்கோல வளை கவர்ந்தான் . . பழனத்தான்''*
*''வஞ்சித்தென் வளை கவர்ந்தான்''*

தலைவி இழந்தமை பற்றியும், தலைவன் நெஞ்சம் கவர்ந்த கள்வனாதல் பற்றியும் சுந்தரர் தம் பதிகங்களிலும் காணலாம்.[31]

*''என்ன தெழிலும் நிறையும் கவர்வான்''*
*''பந்தும் கிளியும் பயிலும் பாவை சிந்தை கவர்வார்''*

''முழுநீறணி மேனியன் மொய்குழலார்
எழுநீர்மை கொள்வான்''

என்றெல்லாம் திருநாவலூரர் சுவை ததும்பப் பாடுவர்.

### 3.3 காமமிக்க கிளவி :

தலைவி கூற்றுடன், தாய், தோழி ஆகியோர் கூற்றிலும் அப்பர் திருப்பாட்டுக்கள் அமைந்துள்ளன. தலைவியின் கனவு நிகழ்ச்சிகள் அப்பரால் கூறப் பெற்றுள்ளன. காமம் மிக்க கழிபடர் கிளவியாக வரும் அப்பர் அருள்மொழி, இலக்கிய நலம் ததும்புவது:[32]

''நிலைப்பாடே நான் கண்ட தேடீ கேளாய்
நெருநலைநற் பகலில்லோர் அடிகள் வந்து
கலைப்பாகும் கண்மலரும் கலக்க நோக்கிக்
கலந்து பலியிடுவேன் எங்கும் காணேன்
சலப்பாடே இனிஒருநாள் காண்பே னாகில்
தன்னாகத் தென்னாகம் ஒடுங்கும் வண்ணம்
முலைப்பாடே படத்தழுவிப் போகலொட்டேன்
ஒற்றியூர் உறைந்திங்கே திரிவானையே''

### 2.4 கூடலிழைத்தல் :

இனி அப்பர் தேவாரத்தில் மட்டும் காணப்பெறும் மற்றோர் அகப்பொருள் மரபு கூடல் இழைத்தல்; திருஞானசம்பந்தர், சுந்தரர் திருவாக்குகளில் இது காணப் பெறவில்லை.

''கூடற்பெருமானைக் கூடலார் கோமானைக்
கூடப் பெறுவேனேல் கூடென்று — கூடல்
இழைப்பாள் போற் காட்டி இழையா திருக்கும்
பிழைப்பிற் பிழைபாக் கறிந்து''

என்று முத்தொள்ளாயிரத்தில்,[33] தலைவி கூடல் இழைப்பாள் போன்று இழையாதிருந்தமை கூறப்பெறும்; கூடல் இழையா விட்டால் பிழை படுமே என்ற அச்சமே காரணம் என்று நயம் பெற நவிலும் அந்நூல் ஆனால் அப்பரடிகள் வாக்கிலோ தலைவி கூடல் இழைக்கின்றாள்:[34]

''நீடுநெஞ்சுள் நினைந்துகண் ணீர்மல்கும்
ஓடுமாலினோ டொண்கொடி மாதராள்

மாடநீள் மருகற் பெருமான்வரில்
கூடு நீயென்று கூடலிழைக்குமே''
''பாடலாக்கிடும் பண்ணொடு பெண்ணிவள்
கூடலாக்கிடும் குன்றின் மணற்கொடு
கோடல் பூத்தலர் கோழம்பத் துள்மகிழ்ந்து
ஆடுங்கூத்தனுக் கன்புபட் டாளன்றே''

என்னும் இரண்டு திருப்பாட்டுக்களில் (மருகல், கோழம்பம் ஆகிய தலங்களிற் பாடப்பட்டனவை), கூடலிழைக்கும் செயல் குறிக்கப் பட்டமை காணலாம்.

தலைவன் வருகையை அறிதற்குப் பிரிந்திருக்கும் தலைவி கூடல் இழைத்துக் காண்டல் பழந்தமிழ் வழக்கு. ''கூடலாவது வட்டமாகக் கோட்டைக் கீறி அதுக்குள்ளே சுழிசுழியாகச் சுற்றும் சுழித்து, இவ்விரண்டு சுழியாகக் கூட்டினால், இரட்டைப் பட்டாற் கூடுகை; ஒற்றைப் பட்டால் கூடாமை என்று சங்கேதம்'' என்ற நாச்சியார் திருமொழி உரைப்பகுதி கூடலிழைத்தல் இன்னதெனக் குறித்துள்ளமை தெளிவு.[35]

## 2.5. தூது மரபு :

துன்பக்காலத்தும், இன்பக் காலத்தும் தன் அகநெகிழ்ச் சியைத் தூது போக்குவதாக வருவது பழந்தமிழ் மரபு. தொல்காப் பியர் இதற்குத் தரும் வரையறை தெளிவானது :[36]

''நோயும் இன்பமும் இருவகை நிலையிற்
காமங் கண்ணிய மரபிடை தெரிய
எட்டன் பகுதியும் விளங்க, ஒட்டிய
உறுப்புடையதுபோல் உணர்வுடையதுபோல்
மறுத்துரைப்பதுபோல் நெஞ்சொடு புணர்த்தும்,
சொல்லா மரபின் அவற்றொடு கெழீஇச்
செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியும்
அவரவர் உறுபிணி தமபோற் சேர்த்தியும்
அறிவும் புலனும் வேறுபட நிறீஇ
இருபெயர் மூன்றும் உரியவாக
உவமவாயிற் படுத்தலும், உவமம்
ஒன்றிடத் திருவர்க்கும் உரியபாற்கிளவி''.

வார்த்தை சொல்லா முறைமையினவாகிய புள்ளும் மாவும் முதலிய வற்றோடு, அவை வார்த்தை உடயனவையாகப் பொருந்தி நின்று அவை செய்ய வியலாத தொழில்களை அவற்றின் மேலேற்றிக் கூறுவதும் உண்டு என்று இந்நூற்பாவுள் கூறியமைக் கேற்ப மூவர் தேவாரத்தும் தூதுவிடும் இலக்கியச் சுவை தழுவிய பாடல்களைக் காண்கின்றோம்.

அன்றில், அன்னம், கபோதகம், குயில், குருகு, தாரா, நாரை, பூவை, வண்டு, வாரணம் ஆகியவற்றைத் திருஞானசம்பந்தர் தூது-விடுவதாகப் பாடும் பதிகங்கள் இனியன.[37] தலைவியின் துயரத்தைத் தலைவனிடம் சென்று கூறுமாறு வேண்டும் வேண்டுகோள்கள் அழகிய பாடல்களாக உருவெடுத்துள்ளன.

தன் துன்பநிலையை, மெய் வேறுபாட்டை உணர்த்தித் தலைவனிடத்துத் தன் நினைவைத் தோற்றுவிக்க வேண்டுதல்; தலைவனைத் தன்னிடத்தே ஒருமுறை வந்துபோக வேண்டுதல்; தலைவன் திருப்பெயரைக் கூறி மகிழ்விக்க வேண்டுதல் — ஆகிய மூன்று நிலைகளுக்குள் பாலறாவாயர் தூதுச் செய்திகள் அடங்கு-கின்றன.

*''என்நிலைமை பரிந்தொருகாற் பகராயே''*
*''என் பயலை வேதியர்க்கு விளம்பாயே''*
*''உறுபயலை. . .பண்பனுக்கென் பரிசுரைத்தால் பழியாமோ''*
*''என்நிலைமை நிகழ்த்தீரே''*
*''திருவடியே கூறுமா கூறீரே''*
*''அமரர் கோனாரை என்னிடைக் கேவர ஒருகாற் கூவாயே''*
*''திருநாமம் எனக் கொருகாற் பேசாயே''*

என்ற தொடர்களைக் கூர்ந்து நோக்கினாற் புலப்படும் செய்திகள் மேற்கூறப்பட்டவை.[38]

தலைவனைப் பிரிந்து தன் உடம்பும் உயிரும் வாடிய போதும் கூட இவை என்ன வருத்தம் உற்றனகொல் என்று, தனக்கு வருத்தம் இல்லது போலக் கூறினல்லது, தலைவிக்குத் தலைவனைத் தானே சென்று சேர்தல் களவு, கற்பு என்ற இருநெறியிலும் இல்லை என்பது தொல்காப்பியர் கோட்பாடு; இந்த அகப்பொருள் மரபு பின்வரும் நூற்பாவில் காணத்தகும்:[39]

"உடம்பும் உயிரும் வாடியக் காலும்
என்னுற்றன கொல் இவையெனி னல்லது
கிழவோற் சேர்தல் கிழவிக் கில்லை"

"அமரர் கோனாரை என்னிடைக்கே வர" என்ற பாலறாவாயர் தொடர் இந்த மரபை காக்கும் மாட்சிமை உடையதாக விளங்குதல் கூர்ந்து நோக்கி உணரத்தக்கது.

அப்பர் திருவாக்கிலும் தூது மரபு அழகுபெற வருகின்றது. கிளி, குயில், குருகு, தென்றல், நாரை, பூவை, வண்டு ஆகியவற்றை விளித்துத் தூது விடுவதம், தன் குறைறயை முறையிடுவதும் அடிகளாரால் ஓதப் படுகின்றன.[40]

"சொல்மாலை பயில்கின்ற குயிலினங்கள் சொல்லீரே
பொன்மாலை மார்பன் என் புதுநலம் உண்டிகழ்வானோ"
"பூவைகாள் மழலைகாள் போகாத பொழுதுளதே"
"மனைக்காஞ்சி இளங்குருகே மறந்தாயோ"
"நினைக்கின்ற நினைப்பெல்லாம் உரையாயோ நிகழ்-
வண்டே"

அப்பரது திருப்பாட்டில், தலைவி தூது விடுதலைக் கண்டு தோழி (தாய்) உரைப்பதாக ஒரு பாட்டு காணப்படுகின்றது:[41]

"ஓதுபைங்கிளிக் கொண்பால் அமுதூட்டிப்
பாதுகாத்துப் பலப்பல கற்பித்து
மாதுதான் மருகற் பெருமானுக்குத்
தூதுசொல்ல விடத்தான் தொடங்குமே"

சுந்தரர், அன்னப் பெடை, கிளி, குயில், குருகு, கொண்டல், சக்ரவாளப் பறவை, சேவல், பூவை, வண்டு ஆகியவற்றைத் தூது போக்கும் பாட்டுக்களை ஒரு தனிப் பதிகத்தே அமைத்தருள் கின்றார்.[42]

"ஆடும் அம்பொற்கழல் அடிகள் ஆரூரரைப்
பாடுமாறும் பணிந்தேத்துமாறும், கூடிஊடுமாறும்
உணர்த்த வல்லீர்களே"
"வாழுமாறும் வளை கழலுமாறும் என்க் கூறுமாறும் மிவை
உணர்த்த வல்லீர்களே"

என்றெல்லாம் நம்பியாரூரர் தலைவி கூற்றாக நலம் கனியப் பாடு கின்றார். தேவார மூவரது இத்தூதுத் திருப்பாட்டுக்கள் இலக்கியச் சுவை ததும்புவனவாய்ப் பழந்தமிழ்ப் பாடல் மரபுகளை நினைவூட்டு வனவாய் நிற்கின்றமை தெளிவு.

## 2.6 முன்னம் - அமைப்பு :

"ஒரு பாடலைப் படித்ததும், 'இது யார்கூற்று, யாரிடம் கூறியது, என்பதைப் படிப்பவர் உணருமாறு பாடலை எழுதவேண்டும்; பாடலில் அதை உணர்த்துவதற்குரிய 'வழி' குறிப்பாக இருக்க வேண்டும். இவ்வுத்தியை 'முன்னம்' என்பர் தொல்காப்பியர்.[43]

"இவ்விடத்து இம்மொழி இவர் இவர்க்கு உரிய என்று
அவ்விடத்து அவரவர்க்கு உரைப்பதை முன்னம்"

"இடமும் காலமும் உணர்ந்து கேட்போர்க்குத் தக்கவாறு மொழிதலும் செய்யுளுறுப்பாம்" என்ற இளம்பூரணர் கருத்துரை நினைக்கத்தக்கது. இவ்வாறு படைப்பது திணையிலக்கியப் படைப்பாணியின் கடமை" என்று விளக்கும் பேராசிரியர் டாக்டர் தமிழண்ணல் அவர்கள் அரிஸ்டாட்டில் தம் "கவிதை இயல்" (Poetics) என்ற நூலுள் சிறப்பாகத் துன்பியல் நாடகங்களில் அமைய வேண்டிய நாடகவொருமைகளை விளக்கியுள்ளமையைச் சுட்டுகின்றார். 'களவொருமை 'காலவொருமை', 'இடவொருமை'களை இணைத்து மிக நீண்ட நாடகமாயினும், காப்பியமாயினும் ஒருமைப்பாடு உடையதாகப் படைப்பதை வற்புறுத்தியுள்ளமையைக் குறிக்கின்றார்.

"சிறு சிறு பாடல்களாயினும், பத்துப் பாட்டில் வருவன போல் நெடும் பாடல்களாயினும், சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற காவியங்களாயினும், இக்களன், இடம், முன்னம் அனைய உத்திகளைப் பொருந்துமாறு படைக்க வேண்டும் என்ற தொல்காப் பியர் கருத்து முற்கூறிய அரிஸ்டாட்டில் கருத்துடன் ஒப்பிட்டு மேலும் ஆராயத் தக்கதாகும்" என்ற தமிழண்ணலார் உரை, பழந் தமிழ் இலக்கியக் கோட்பாட்டு நெறியை இனிது சுட்டுவதாக உள்ளது.[44] தேவாரத் திருப்பதிகங்களுள் வரும் அகப்பொருள்—அகப் பொருள் துறை தழுவிய பாடல்கள் அனைத்தையும் இக் கோட் பாட்டிற்குத் தக்க எடுத்துக்காட்டுக்களாகக் கொள்ளல் தகும்.

நம் நாயன்மார் மூவரும் பழந்தமிழ் இலக்கியக் கோட்பாடு களின் நெறியில் இலக்கியத் திறம் விளங்கவும் செய்யுள் செய்த சிறப்பினர் என்று கூறுவது மிகையாகாது.

## 2.7 பிச்சைக்கு வந்த பெருந்தகை :

சிவபெருமானாகிய தலைவன் பலிக்கு எழுந்தருளிவந்த கோலத்தை (பிட்சாடனர்)யும், அவர்தம் பேச்சையும், செய்கை யையும் எடுத்துரைப்பனவாகத் திருநாவுக்கரசர் திருப்பாட்டுக்களில் வரும் செய்திகளைத் தொல்காப்பிய நெறியில் ஒப்பிட்டுக் காணும் போது வரும் இன்பம் ஒப்பரியதாகும். தலைவனைக் கண்ட தலைவி அதுபற்றி உரைக்கும் கூற்றுக்கள் நாடகச் சுவை நலம் ததும்பியவை:[45]

*"அண்ணலார் போகின்றார் வந்து காணீர்*
*அழகியரே ஆமாத்தூர் ஐயனாரே"*

*"நென்னலையோர் ஓடேந்திப் பிச்சைக் கென்று*
*வந்தார்க்கு, வந்தேனென்று இல்லம் புக்கேன்*
*அந்நிலையே நிற்கின்றார் ஐயம் கொள்ளார்*
*அருகே வருவார் போல் நோக்குகின்றார்"*

தாய், தோழி கூற்றாக அப்பரடிகளார் பாடும் பகுதிகள் தலைவியின் நிலைமையை இனிது விளக்கிக் கூற்றினிமை தோன்றத் திகழ் கின்றன:[46]

*"அருகு சென்றிலள் ஆவடுதண்டுறை*
*ஒருவன் என்னை உடையவன் என்னுமே"*

*"கழிப்பாலை சேர்வானைக் கண்டாள் கொல்லோ"*

*"இன்னவா றுண்டென்ப தறியேன் இன்று*
*துன்னு கைவளை சோரக் கண்ணீர் மல்கும்*
*மன்னுதென் மருகற் பெருமான் திறம்*
*உன்னி ஒண்டொடி உள்ளம் உருகுமே"*

*"சங்குசோரக் கலையும் சரியவே*
*மங்கைதான் மருகற்பெருமான் வரும்*

அங்கவீதி அருகணையா நிற்கும்
நங்கைமீர்! இதற்கென்செய்வேன்? நானாமே''

''மொண்ணைமா மருதா என்றென் மொய்குழல்
பண்ணை யாயமும் தானும் பயிலுமே''

''வண்ணமும் வடிவும் சென்று கண்டிலள்
எண்ணி நாமங்கள் ஏத்தி நிறைந்திலள்
அண்ணலே அறிவானிவள் தன்மையே''

என்றெல்லாம் வரும் பகுதிகள், தாய், தோழி கூற்றாக வெளிப்பட்டு இலக்கிய நலம் பொருந்தி நிற்பதுடன், அடிகளாரது கவிதை மனத்தின் அருஞ்சிறப்பை வெளிப்படுத்தி நிற்கின்றன.

''காருலாவிய நஞ்சை யுண்டிருள் கண்டர் வெண்டலை
யோடு கொண்டு
ஊரெலாந் திரிந் தென்செய்வீர் பலி ஓரிடத்திலே
கொள்ளும்நீர்''
''செந்தமிழ்த் திறம் வல்லிரோ செங்கண் அரவமுன்கையிலா
டவே
வந்துநிற்குமிதென்கொலோ பலி மாற்ற மாட்டோம்
இடகிலோம்''
''பையவே விடங்காக நின்று பைஞ்ஞீலியேன் என்றீர்
அடிகள் நீர்
ஐயமேற்குமி தென்கொலோ சொலும் ஆரணீய விடங்கரே''

முதலிய சுந்தரர் செந்தமிழ்ப் பாடற்பகுதிகள், முற்கூறிய நெறியில் அமைந்த அற்புதக் கற்பனைகளே.[47] இவற்றை யார் கூற்று என்றுய்த்துணர்ந்து ஓதினால் வரும் கவிதையின்பம் தன்னிகரற்றது.

''அறப்பலி தேர்ந்துழல் வார்க்கென் அலர்கோடல்
அழகியதே''
''சில்பலிக் கென்றொத்தபடி வந்தென் உள்ளம் கொண்ட
ஒருவர்''

முதலிய சம்பந்தர் தேவாரப் பகுதிகள், பலிதேர வந்த இறைவன் ஆகிய தலைவனைக் கண்டு நெஞ்சழிந்த தலைவி கூற்றாக

அமைந்தவையே.[48] இவற்றுள்ளும் கற்பனை இன்பம் பொதுளி நிற்றல் கருத்திற்கு விருந்தாகும்.

## 2.8 ஆருயிர்க் காதல் - அருந்திறன் :

தலைவனைக் காதலித்துத் தன்வயமிழந்த தலைவி ஒருத்தியின் தூய காதல் உணர்வை இனிய கவிதை ஓவியமாக அப்பரடிகளார் வடித்துள்ளார்; அதனுள் அகப்பொருள் நலம் துலங்குவதுடன் பழந் தமிழ் இலக்கியக் கோட்பாடு பளிச்சிடவும் காண்கின்றோம். படிப்படி யாக அன்பு அரும்பிப் போதாகி மலர்வதை இந்த அழகிய திருப் பாட்டில் காணலாம்:[49]

"முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்
தன்னை மறந்தாள் தன் னாமம் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே"

திருவாரூர்ப் பெருமானுடைய திருப்பெயரைக் கேட்டவுடனேயே வசமி ழந்த தலையன்புடையவளாகிய தலைவி ஒருத்தியின் தன்மையை அவ ளது ஆருயிர்த் தோழி விளங்க உரைத்ததாக இப்பாட்டு அமைந்துள் ளது. சத்திநிபாதத்து உத்தமர்கள் நிலையை இப்பாட்டுக் குறிப்பாக உய்த்துணர வைக்கின்றது என்பர் வல்லோர். நாமம் கேட்டல் முதலிய நான்கினையும், கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடல் என்னும் நான்குமாகவும், பின்னர் உள்ளவற்றை அணைந்தோர் தன்மையாகவும் கொள்ளுமாறு இப்பாட்டு அமைந்துள்ளது. நாமம் கேட்டல் முதலிய நான்கினையும் சமயம், விசேடம், திருவாணம் என்னும் தீக்கைவழி, சரியை, கிரியை யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களில் நிற்கும் நிலைகளை உணர்த்தியவாறாகக் கொள்ளும் கருத்தும் உள்ளது. திரோதான சத்தியாகிய அன்னை; தடத்த சிவனாகிய அத்தன்; தன்முனைப்பில் நின்று வினைகளை ஈட்டியும் நுகர்ந்தும் பிறப் பிறப்புக்களில் உழலாகிய 'அகலிடத்தார் ஆசாரம்'. தானொரு பொருள் உண்மையையும் உண்டாகி அறிந்து நிற்றலையும் மறந்து முதல்வன் ஒருவனையே அறிந்து நிற்றலாகிய

'தன்னை மறத்தல்'. முதல்வனது உண்மை இயல்பாகிய — இன்ப வடிவேயாகிய நிலை — 'தான்'.[50]

இவ்வாறு உய்த்துணர்ந்து நோக்குங்கால் பிறிதொரு விழுமிய பொருள் தோன்ற அடிகளார் உரைத்த கவித்திறனுக்கு இணையும் உண்டோ?

''சிலபாடல்கள் உய்த்துணருங்கால் ஒன்றுக்கு மேற்பட்ட பிறிதொரு கருத்தையும் உணர்த்தலாம். வெளிப்படையாகக் கூறாமல் இங்ஙனம் மறைத்துக் குறிப்பாகக் கூறுவதிலேதான் கலைத்திறமை இருக்கிறது; அதனை முயன்று உய்த்துணர்வதிலேதான் இலக்கிய இன்பமும் உள்ளது'' — என்று சங்க இலக்கியப் பாடலின் ஆழ்பொருள் நோக்கிப் பேராசிரியர் தமிழண்ணலார் உரைக்கும் கருத்து, இத் தேவாரத் திருப்பாட்டிற்கும் பொருத்திப் பார்த்து இன்புறத் தக்கதாக உள்ளது.[51] நவில்தொறும் நூல் நயமாகி இன்பம் பயக்க உதவும் இத்திறன் கவிதையின் கவிஞர் திறங்களுள் சிறப்பானது என்று கூறுவது மிகையாகாது.

## 2.9 அறத்தொடு நிலை அருமை :

'இடந்தலைப்பாடு' என்ற குறிப்பினை உடையதாய் வரும் திருஞானசம்பந்தர் திருமொழி ஒன்றும் இங்கு நினைக்கத் தக்கது.[52]

''அன்றியூர் தமக்குள்ளன அறிகிலோம் வலஞ்சுழி யரனார் பால்
சென்றவூர்தனில் தலைப்படலாம் என்று சேயிழை தளர் வாமே''

தலைவி தன்பால் தலைவன் வந்து கூடி இன்புறுவித்ததை எடுத்துரைக்கும் தேவாரச் செய்திகள் அறத்தொடு நிற்கும் அருந்திறம் உடையவை எனலாம். தலைவனை எளியவனாக — உயர்ந்தவனாக — வேட்கை மிக்கவனாகக் கூறும் மூவர் திருவாக்குகள் தொல்காப்பிய நெறியில் வரும் 'அறத்தொடு நிலைப்' பகுதிகளில் அடங்குதல், கற்றறிந்தோர்க்குக் களிப்பூட்டுவது.

''எளியல் ஏத்தல் வேட்கை உரைத்தல்
கூறுதல் உசாதல் ஏதீடு தலைப்பாடு
உண்மை செப்பும் கிளவியொடு தொகைஇ

அவ்வெழு வகைய என்மனார் புலவர்''
என்ற தொல்காப்பிய நூற்பாவிற்குத் தக்க எடுத்துக்காட்டுக்களாக இவற்றைக் கருதுவது பொருந்தும்.[53]

''எந்தைதான் எனை ஏன்று கொளும் கொலோ''
எனவரும் பாலறாவாயர் பர்டற்பகுதி தலைவனை 'எந்தை' என்று குறிப்பது தொல்காப்பியரது பின்வரும் மரபு பேணுவதே என்பதை நுட்பமாக நோக்கி இன்புறலாம்.[54]

''அன்னை 'என்னை' என்றலும் உளவே
தொன்னெறி முறைமை சொல்லினும் எழுத்தினும்
தோன்றா மரபின என்மனார் புலவர்''

நச்சினார்க்கினியர் இந்நூற்பாவின் உரையில், 'உம்மையாற் பிறவும் உள என்பது பெறுதலின், எந்தை தன்னுள்ளம் குறைபடாவாறு என்றார் போல்வன பிறவும் கொள்க'' என்று எழுதுவர்;[55] 'எந்தை' என்ற சொல்லால், தலைவனைத் தலைவி சுட்டும் பழந்தமிழ்மரபு இங்குப் பாட்டில் பயின்றுள்ளமை தெளிவு.

## 3.0 வடிவம்-வரலாற்று நோக்கு :

இலக்கியம் வடிவத்தாலும் சிறப்பெய்தும். வடிவத்தைப் பற்றிய இலக்கிய ஆசிரியன் கவலைப்படுவதில்லை என்றாலும், அவனது உணர்ச்சி கவிதை வடிவம் எய்தும்போதே முழுமை பெறுகின்றது. தொல்காப்பியர் வடிவம் பற்றி ஆராய்ந்து ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலி என்ற நான்குவகைப் பாக்களைக் குறிப்பிட்டுள்ளார். இவற்றுள் அவர் தலைமை தருவது ஆசிரியம், வெண்பா என்ற இரண்டிற்கு மட்டுமே. வஞ்சி, கலி என்பனவற்றை இவ்விரண்டினுள்ளும் அடக்கு கின்றார். பேராசிரியர் தமிழண்ணல் விளக்குகின்றவாறு, கலிப்பா, பரிபாடல், வரிப்பாடல் ஆகிய மூன்றும் தொன்மை மிக்கனவாகத் தோன்றுகின்றன; வஞ்சி, வெண்பா, ஆசிரியம் என்பன படிப்படியே கிளைத்த வடிவங்களாகவும் தோன்றுகின்றன.[56]

ஆசிரியம் என்ற ஒரே பாவடிவமே சங்க காலத்துப் பெரும் பான்மை பெற்று வழங்கிற்று. அதிலும் நேரிசை ஆசிரியப்பாவே செல் வாக்குப் பெற்று விளங்கிற்று என்று எண்ணத் தோன்றுகின்றது. ஆசிரியப்பா என்ற ஒரே வகையை வைத்தே வேறுபட்ட உணர்வுகளை வெளிப்படுத்தும் திறன் சங்கப் புலவர்களுக்குக் கைவந்த கலை

யாக இருந்தது. பத்தி இலக்கியக் காலத்தில், தேவாரம் தழைத்த இடைக்காலத்தில், கலிப்பா செல்வாக்குப் பெறத் தொடங்கி விட்டது போலும். பெரும்பான்மையான தேவாரப் பாக்கள் கலியோசை தழுவிய விருத்தப் பாக்களின் வேறுவேறு வடிவங்களே என்று கூறல் தகும். கருத்திற்கு ஏற்ற வடிவம் அமைதலே தமிழர்தம் இலக்கியக் கொள்கை என்பர் வல்லோர். ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு வடிவம் தமிழ் இலக்கிய வரலாற்றில் மேலோங்கி நின்றதென்று பேரறிஞர் முடிவு போக்குவதும் இங்கு நினைக்கத் தக்கது.

## 3.1 கொச்சகவொருபோகுகள் :

முத்தமிழ் விரகராகிய திருஞானசம்பந்தர் பழைய மரபு தழுவிய விருத்தங்களில், பல்வேறு சந்த அமைப்புக்கள் விரவத் தம் திருப் பாட்டுக்களை வெளிப்படுத்தியுள்ளார். ஆதலின், 'சந்தமலி செந் தமிழ்கள்' என்று தம் பதிகங்களை அவ்வருளாளர் குறித்துக் கொள்வது பெரிதும் பொருந்துவதாகவே உள்ளது.[57] தெய்வம் சுட்டி வரும் வாரப் பாடலாகத் தேவாரத்தைக் கொள்ளலாம்.

தொல்காப்பியர், தம் செய்யுளியலில் பின்வரும் நூற்பாவில் 'கொச்சக ஒருபோகு' பற்றி விளக்கியுள்ளார்.[58]

"தரவின் றாகித் தாழிசை பெற்றும்
தாழிசை யின்றித் தரவுடைத் தாகியும்
எண்ணிடை யிட்டுச் சின்னம் குன்றியும்
அடக்கியலின்றி அடிநிமிர்ந் தொழுகியும்
யாப்பினும் பொருளினும் வேற்றுமை உடையது
கொச்சக ஒருபோ காகு மென்ப"

"இனிப் பத்தும், பதினொன்றும், பன்னிரண்டும் ஆகி ஒருபொருள் மேல்வரும் பதிகப் பாட்டு நான்கடியின் ஏறாது வருதலும்" என்று எழுதிய நச்சினார்க்கினியர், "பதிகப் பாட்டிற்கு ஈண்டுக் கூறிய வேறுபாடுகள் திருவாய் மொழி, திருப்பாட்டு, திருவாசகம் என்கின்ற கொச்சக ஒருபோகுகளிற் காண்க. அவை உலக வழக்கன்மையிற் காட்டாமாயினாம்" என்று முடித்துள்ளார்.[59] 'பதிகப்பாட்டு' 'திருப் பாட்டு' என்பன தேவாரப் பாட்டுக்களே ஆம். தொல்காப்பிய நெறிப்படி இவற்றைக் 'கொச்சக ஒருபோகு' என்ற வகையில் அடக்கலாம் "உலக நூல் வழக்கு ஒன்றினையே உணர்த்தும் ஏனைச் செய்யுட்களைப் போன்று, இலக்கண நூல்களில் வெறும்

யாப்பியல் அமைதிக்கு உதாரணச் செய்யுட்களாக எடுத்துக் காட்டுதல் மரபன்று'' என்பதே, நச்சினார்க்கினியர் எழுதிய, 'உலக வழக்கன்மையிற் காட்டாமாயினாம்'' என்றதன் கருத்து என்பர் பேராசிரியர் க. வெள்ளைவாரணனார்.[60]

இத்தேவாரப் பதிகங்களின் ஒலி வேற்றுமை, சீர் குறைந்தும் மிகுந்தும் வருதல் ஆகிய அனைத்தையும் கொண்டு கலிப்பாவின் வேறுபட்ட வகைகளாகவே இவற்றின் வடிவ அமைப்பைக் கருத வேண்டும். திருஞானசம்பந்தரும்,[61]

''அந்தண்பூங் கச்சியேகம்பனை அம்மானைக்
கந்தண்பூங் காழியூரன் கலிக்கோவையால்
சந்தமே பாடவல்ல தமிழ் ஞானசம்
பந்தன் சொற் பாடியாடக் கெடும்பாவமே''

என்று பாடியுள்ளமையை இங்குக் குறிப்பிட வேண்டும்.

இவ்வாறே அப்பரடிகளும் சந்த விருத்தங்களும், விருத்த வகைகளும், கலிவிருத்தங்களும், கட்டளைக் கலித்துறைகளும் ஆகியவற்றுடன், தாண்டகம் என்ற புதிய பாவகையையும் மேற்கொண்டுள்ளார். தாண்டகம் என்ற பா வகையை அடிகள் கையாண்டு வெற்றி பெற்றமையாலேயே ''தாண்டகச்சதுரர்'' ''தாண்டக வேந்தர்'' என்ற சிறப்புப் பெற்றனர்.[62] இப்பெருஞ்சிறப்பு அடிகளாரின் தனித்தன்மையை இலக்கிய வரலாற்றில் எடுத்துக்காட்டுவதாக அமைகின்றது.

### 3.2 யாப்பு நிலைகள் :

சேக்கிழார் திருப்பாட்டு ஒன்று அடிகளார் யாப்பு வகைகளைச் சுட்டுவதாக உள்ளது; அது பின்வருமாறு:[63]

''விளங்கு பெருந் திருமூன்றில் மேவு திருப்பணி செய்தே
உளங்கொள் திருவிருத்தங்கள், ஓங்குதிருக் குறுந்தொகைகள்
களங்கொள் திரு நேரிசைகள் பலபாடிக் கைதொழுது
வளங்கொள் திருப் பதியதனில் பலநாள்கள் வைகினார்''

திருநேரிசை, 'நேரிசைக் கொல்லி' எனவும், திருவிருத்தம் 'விருத்தக் கொல்லி' எனவும் கொல்லிப் பண்ணில் அடக்கப் பெறும்.

திருநேரிசை கூவிளம் + புளிமா + தேமா + கூவிளம் + புளிமா + தேமா

எனவரும் கட்டளைபடி உடைய செய்யுள் என்றும், அறுசீர்களால் இயன்ற இக்கட்டளையடியில் முதற்சீரும் நான்காம்சீரும் ஒரோவழிக் 'கருவிளம்' ஆதலும், இரண்டாம் சீரும் ஐந்தாம் சீரும் ஒரோவழித் 'தேமா' ஆதலும், மூன்றாம் சீரும் ஆறாம் சீரும் எப்பொழுதும் 'தேமா'ஆகவே நிற்பன என்றும் இந்த வடிவ அமைப்பை யாழ்நூலாசிரியர் விபுலானந்த அடிகளார் விளக்கியுள்ளார்.[64] திருவிருத்தம் கட்டளைக் கலித்துறை என்ற வகையைச் சார்ந்தது. திருக்குறுந் தொகை, நாற்சீர் நாலடியாய், அடிதோறும் தேமா, புளிமா என்பவற்றுள் ஒன்று முதற்சீராகவும், கருவிளம், கூவிளம் என்பவற்றுள் ஒன்று நான்காம் சீராகவும், இடையிருசீர்கள் பெரும் பாலும் விளச்சீர்களாகவும், சிறுபான்மை மாச்சீர்களாகவும் அமையும் செய்யுள் வகை சிலப்பதிகார வேட்டுவ வரியில் இவ்வமைப்பை உடைய பாடல்கள் உள்ளன. ஆதலால் இளங்கோ அடிகள் காலத்திலேயே (கி. பி. 2ஆம் நூற்றாண்டு) இந்த யாப்புப் பெருகி யிருந்தது என்பர் அறிஞர். பிற்காலக் கலிவிருத்தத்தை இது சார்ந்தது எனலாம். அடிகளாரது 'தாண்டகம்' என்ற வடிவச் செய்யுள் தமிழ் யாப்பே என்பதை முதற்கண் குறிப்பிட்டாக வேண்டும். இருபத்தே ழெழுத்து முதலாக உயர்ந்த எழுத்தடியினவாய் எழுத்தும், குருவும், லகுவும் ஒத்து வருவன 'அளவியல் தாண்டகம்' என்றும், எழுத் தொவ்வாதும் எழுத்தலகு ஒவ்வாதும் வருவன 'அளவழித் தாண் டகம்' என்றும் பெயர் பெறும் என்பது யாப்பருங்கல விருத்தியு ரையிற் கண்ட விளக்கம். அப்பரடிகள் அருளிய தாண்டக அமைப்பு, ஒற்றும் குற்றியலுகரமும் நீக்கி எழுத்தெண்ணி வகுக்கப்பட்ட ஐவகை அடிகளுள், கழிநெடிலடிக்கு மேலெல்லையாகிய இருபதெழுத்தென் னும் அளவினைக் கடந்து இருபத்தேழெழுத்திற்கு உட்பட்டு வரு வதாகும். ஆனால் யாப்பருங்கல விருத்தி கூறுவது இதனின் வேறு பட்டது, "எனவே தமிழ்ச் செய்யுள் இலக்கணத்தை அடியொற்றி அமைந்த திருத்தாண்டகப்பாவும், வடமொழித் தாண்டக அமைப்பை அடியொற்றிப் புதியன புனைந்த யாப்பருங்கல விருத்தி உதாரணச் செய்யுட்களும் இலக்கண வகையால் தம்முள் வேறுபட்டன என்று ணர்தல் வேண்டும்" என்ற பன்னிரு திரு முறை வரலாற்றாசிரியர் கட்டளை ஏற்றுப் போற்ற வேண்டிய திறனுடையது.[65]

## 3.3 பாலறாவாயர் மூல இலக்கியங்கள்:

திருஞானசம்பந்தரும் தம் திருப்பதிகங்களில் முன் குறிப்பிட்ட

பிடி கலிக் கோவையாகப் பலவற்றைப் படைத்ததுடன், புதிய படைப்புக்கள் பலவற்றையும் — வடிவ அமைப்பில் கண்டுள்ளனர்; இவை தமிழிலக்கிய வரலாற்றில், பாலறாவாயரே முதன் முதலாகக் கண்ட திறன் உடையவை ஆதலின், இவற்றை "மூல இலக்கியம்" என்று சேக்கிழார் மொழிவது பெரிதும் பொருந்துவதேயாகும்;

"செந்தமிழ் மாலை விகற்பச் செய்யுட்களான் மொழி மாற்றும்
வந்த சொற்சீர் மாலை மாற்றும், வழிமொழி, எல்லா மடக்கும்
சந்த வியமகம், ஏகபாதம், தமிழ் இருக்குக் குறள் சார்த்தி
எந்தைக் கெழுகூற்றிருக்கை, ஈரடி, ஈரடி, மேல் வைப்பு"
"நாலடி மேல் வைப்பு, மேன்மை நடையின் முடுகும் இராகம்
சால்பினில் சக்கரம் ஆதி விகற்பங்கள் சாற்றும் பதிக
மூல இலக்கியமாக எல்லாப் பொருள்களும் முற்ற
ஞாலத்துயர் காழியாரைப் பாடினார் ஞானசம்பந்தர்"

என்ற இரண்டு திருப்பாட்டுகளைக் கூர்ந்து நோக்கினால் இந்த உண்மை இனிது புலப்படுவதாகும்.[66]

திருஞானசம்பந்தர் புதிதாகக் கண்ட இந்த வறவ வகைகள் பிற்காலத்தே பெருகி வளர்லாயின் என்பது, அணி நூலாய்வாளர் அறிந்த உண்மையாகும். வழிமொழி, திருவேகபாதம், திருவெழுகூற்றிருக்கை, மாலைமாற்று, இயமகம், திருச்சக்கர மாற்று, மாவின் பாச்சல், திருத்தாளச்சதி முதலிய அனைத்தும் அரிய பொருளாழம் பொதிந்த புதுவகை வடிவங்கள்.

### 3.3.1 வழிமொழி :

வழியெதுகைகள் அமையப் பாடிய பதிகம் இப்பெயர் பெற்றுள்ளது:[67]

"சுரருலகு நரகர்கள் பயில் முரணழிய அரணம்தில்"
"தாணுமிகு வாணிசைகொள் தாணுவியர் பேணுமது காணு
மளவில்"
"பகலொளிசெய் நகமணியை முகைமலரை நிகழ்சரண வகவு
முனிவர்
"வாளவரி கோளபுரி கீளதுரி தாளின்மிசை நாளுமகிழ்வர்"
"புற்றரவு பற்றியகை நெற்றியது மற்றொருகண் ஒற்றை
விடையன்"

என்றெலாம் வரும் இப்பதிகப் பாட்டுக்களை வாய்விட்டுப்பாடி இன்புற வேண்டும். அப்போதுதான் ஒலி ஒழுங்குமுறை, சொல்வளம், சொல் வன்மை ஆகியவற்றை இனிதுணர முடியும்.

### 3.3.2 திருவேகபாதம் :

ஓரடியே பொருள் வேறுபாட்டுடன் நான்குமுறை மடித்து வந்து ஒருபாடலாக அமையும் புதிய வடிவம் இது.[68]

(ஏகம்—ஒன்று; பாதம்—அடி) இப்பதிகத்துள் முதற்பத்துப் பாடல்கள், பன்னிரண்டாம் பாடல் நாற்சீரடிகளால் ஆகியவை; பதினோராம் பாடல் மட்டும் ஐஞ்சீரடிகளால் ஆயது.

''பிரமபுரத்துறை பெம்மான் எம்மான்
பிரமபுரத்துறை பெம்மான் எம்மான்
பிரமபுரத்துறை பெம்மான் எம்மான்
பிரமபுரத்துறை பெம்மான் எம்மான்''

இதன் பொருள் நுட்பத்தை அறிஞர்கள் புலப்படுத்தியுள்ளனர்.

### 3.3.3 திருவெழு கூற்றிருக்கை :

ஒன்று, இரண்டு, ஒன்று; ஒன்று, இரண்டு, மூன்று; இரண்டு, ஒன்று —என இவ்வாறு ஒன்றுமுதல் ஏழு முடியப் படிப்படியாக ஒவ்வொன்று எற்றியும் இறக்கியும் இவ்வாறு ஏழு கூறுகளிலும் எண்கள் இருக்க இயற்றப்படும் இப்புதிய வடிவம் ஆளுடைய பிள்ளையார் கண்டது.[69] இக்கவிதைக்கு மூல இலக்கியம் இதுவே, திருமங்கையாழ்வார் இதனைப் பின் பற்றிப் பாடியுள்ளனர். நக்கீர தேவர் பாடியுள்ள திருவெழு கூற்றிருக்கையைத் திருஞானசம்பந்தர் பாவகைக்குப் பிற்பட்டதாகவே சேக்கிழார் கருதியுள்ளனர்.

### 3.3.4 மாலை மாற்று :

ஒரு மாலைக்கு அமைந்த இரண்டு தலைப்புக்களில், எதனை முதலாகக் கொண்டு நோக்கினும் அம்மாலை ஒரே தன்மை உடைய தாய்த் தோன்றுமாறு போல, ஒரு பாடலை முதலிலிருந்து தொடங்கி னாலும், முடிவிலிருந்து தொடங்கினாலும் அதே பாடலாக அமையும் படி எழுத்துக்களைப் பொருளொழுங்கு பிழையா வண்ணம் பாடுவது இது;[70] சிவஞானப் பிள்ளையார் பாடிய இப்பதிகமும் தமிழ் இலக்கிய

வரலாற்றில் முதல் இடம் பெறுவதே.

''யாமாமாநீ யாமாமா யாழீகாமா காணாகா
காணாகாமா காழீயா மாமாயாநீ மாமாயா''

கௌசிகப் பண்ணியில் கவுணியர்கோன் பாடியுள்ள இப்பதிகப் பொருள் நோக்கின் நுட்பம் கற்று வல்லாரால் இனிதுணரப்பட்டதே.

### 3.3.5 இயமகம் :

ஓரடியுள் முன்வந்த சொல்லோ தொடரோ வேறொரு பொருள் பட மீண்டும் அதே அடியில் மடக்கிவரும் அமைப்பு.[71] 'மடக்கு' என்பது தமிழ்வழக்கு. 'இயமகம்' என்று தமிழ்ப்படுத்தி வழங்கியுள் ளார் சேக்கிழாரடிகள்.

### 3.3.6 திருச்சக்கர மாற்று :

பிரமபுரம் என்ற சீர்காழிக் கமைந்த பதிகம் இம்முறையில் அமைந்துள்ளது.[72] சீர்காழியின் பன்னிரண்டு திருப்பெயர்கள் சக்கர அமைப்பில் வருகின்றன; வேறுவகையான சக்கரம் ஒன்றும் ஒரு பதி கத்துப் பின்பற்றப்பட்டுள்ளது. இப்படைப்புகளும் புதிய வடிவங்களே.

### 3.3.7 மாவின் பாச்சல் :

பசு நடக்கும் போது சிறுநீர் விட்டால், அந்நீர் ஒழுகிய தாரை நெளிந்த வடிவம் உடையதாயிருத்தல் போன்று, முதற்பாட்டில் சொல்லப்பட்ட பெயர்கள் ஒரு வரிசைப் படாது பின்னுள்ள பாட்டில் வரும். ஆனால் ஒவ்வொரு பாட்டிலும் இறுதியாகக் கூறப்பட்ட தலம் அடுத்த பாட்டில் முதலாவதாகவரும். 'கோமூத்திரி' என்ற பெயர் மாற் றத்துடன் பிற்கால உலகு இதனைத் தழுவிக் கொண்டது.[73]

### 3.3.8 திருத்தாளச்சதி :

ஆடுகின்ற அரங்குகளில், மகளிர் பாடிக் கொண்டு ஆடுதற்கான தாளச் சொற்கட்டுக்களைத் தன்னகத்தே உடைய இசைப்பா வகை யில் படைக்கப்பட்ட புதிய வடிவம் இது.[74]

''தந்தத்தா தந்தத்தா தனந்தனந்த தந்தனத்
தானா தானா தானானா தனதன தனனதனா''

என்றபடி வரும் இச்சொற்கட்டு. வியாழக் குறிஞ்சியில் அமைந்த

இப்பதிகம், இசைநுட்பம் உடையது. இவ்வொரு திருப்பதிகமே இருபத்தொரு பண்முறைக்கு ஏற்றபடித் தாளவகையால் மாற்றிய மைத்துப் பாடத்தக்கதோ என்ற குறிப்பு இப்பதிகத்தின் திருக்கடைக் காப்புச் செய்யுளால் விளங்கும்.

## 3.4. நம்பியாரூரர் நவில்வனவற்றில் :

சுந்தரர் தேவாரமும் இவ்வாறே பல்வேறு சந்த விருத்தங்களின் தொகுப்பாக விளங்குகின்றது. மாத்திரை அளவும் எழுத்தியல் நிலையும் பற்றிச் செய்யுட்களில் அமைந்த ஓசைவேறுபாடாகிய கட்டளை அமைப்பு இப்பதிகங்களுக்கும் செய்யப்பட்டுள்ளது.

ஆற்றுப்படை என்ற சிற்றிலக்கிய அமைப்புடன் ஒரு பதிகமும் சுந்தரர் திருப்பாட்டிற் காணப் பெறுகின்றது.[75]

அடுக்குச் சொற்கள் பலவற்றை அமைத்துப் பர்டப்பெற்ற பதிகம் ஒன்றும் வியத்தகு மதி நுட்பம் பொலிய விளங்குகின்றது.[76]

## 3.5 இயல்பிலே அமைதல் :

இவ்வாறு தேவாரப் பாக்களின் வடிவ அமைப்பைப் பற்றி விரி வாகவும் முறையாகவும் ஆராயுங்கால் ஓர் உண்மை புலன் ஆகின்றது. திருவருள் வயப்பட்டுத் தம்மை மறந்து பாடிய தெய்வப் பர்டல்கள் இவையாதலின், இவற்றில் வரும் வடிவங்கள் இயல்பாக வந்து பொருந்தியவை என்பதே அது. அகவற்பாப் போல அமைந்துள்ள பதிகங்களும், பாடல்களும் சம்பந்தர் வாக்கிற் காணப்பட்டுள்ளன.[77] கட்டளைக் கலித்துறைகளாகவும், அவ்வகை சார்ந்தனவாகவும் பல பாடல்கள் காணப்படுகின்றன.[78] கரந்துறை பாடல் வடிவங்களைக் கூடத் தணிகைமணி வ. சு. செங்கல்வராயனாரவர்கள் சம்பந்தர் திரு வாக்கிற் காட்டுகின்றார்.[79]

இலக்கியத்தின் சிறப்பு வடிவத்தாற் பின்னும் சிறக்கும் எனின், தேவாரப் பாடல் வடிவங்கள் சிறந்த இலக்கிய ஓவியங்களாக விளங்கு கின்றன என்பது இனிது விளங்கும்.

## 4.0 இலக்கிய அணிகள்: 4.1. உவமைகள்

இலக்கிய அழகு விளங்கும் அணிகளில் தொன்மை மரபு உடையது உவமையே ஆகும்; தொல்காப்பியர் பேசிய அணி உவமையே. சங்க

கால இலக்கியத்தில் பெரும்பான்மையாக விளங்குவது உவமை ஒன்றே. பத்தி இலக்கியங்களான தேவாரத்திலும் இடம் பெற்றுள்ள பெரும்பான்மை அணி உவமை ஒன்றுதான். ஏனைய அணிகள் சிறுபான்மை இடங்களே பெற்றுள்ளன. எனவே அணி பற்றிய பாடற்போக்கில் தேவார இலக்கியங்கள் சங்கநூல்களை ஒட்டியே நிற்கின்றன என்று கொள்ளுவது தவறாகாது; இந்த உவமைகளும் வினை, பயன், மெய், உரு என்ற பழமையான மரபிற் பாகுபாடு செய்யப்படத்தக்கன.

புலன் அல்லாதவற்றைப் புலனாக்குதற்கும், அலங்காரமாகிக் கேட்டார்க்கு இன்பம் பயத்தற்குமே உவமைகள் தோன்றின என்பது இளம்பூரணர் கருத்து.[80] ஆகவே இலக்கியங்களில், ஒரு பொருளை விளக்குவதற்கும், அழகுபெறக் கூறுவதற்குமே உவமைகள் கையாளப் படுகின்றன. தேவார உவமைகள் இவ்விரண்டு திறத்திலும் அமைகின்றன.

சங்க இலக்கிய உவமைகள் போன்றே இந்த உவமைகளும் திட்ப நுட்பம் உடையனவாக ஒளிர்கின்றன. மூன்று சொற்களிலும் முப்பது சொற்களிலும், முந்நூறு சொற்களிலும் கூட உவமைகள் அமையலாம் என்றும், ஒப்பிடுவதற்கு மிக எளிமையான உறுப்பு உவமையே என்றும் இக்காலத் திறனாய்வாளர் கூறுவதே இங்கு நினைக்கத் தோன்றுகின்றது. சின்னஞ்சிறிய அளவிலும், சிறுதொடர் அளவிலும் உவமைகளை இங்குக் காண்கின்றோம். அரை வரியிலும், ஒருவரியிலும், ஒரு பாடலின் செம்பாதியிலும் கூட உவமைகள் இங்குக் காணப்படுகின்றன.

*''காம்படு தோள்''*
*''மானடைந்த நோக்கி''*
*''வேயடைந்த தோளி''*
*''தழலதுருவத்தான்''*
*''பாலது வண்ணர்''*
*''பாகமர் மொழி''*
*''அன்னமன்ன நடை''*
*''அந்தியன்னதொர் மேனி''*
*''தோகை மாமயிலனைய துடியிடை''*
*''குயிலாகும் மென்மொழி''*

"கவணெறி கற்போல"
"காசைமலர் போல் திருமிடற்றார்"
"முகில்போல் வருவதொரு மதகரி"
"வேணுவார்கொடி விண்ணோர் தமை விளிப்ப போல் ஓங்கு மிழலை"
"சிவனதாள் சிந்தியாப் பேதைமார் போல"
"விண்ணுறு மால்வரை போல் விடை"
"இன்ன வண்ண மலரும் கிளர்தாமரை"

என்றெலாம் வரும் ஆளுடைய பிள்ளையார் உவமைகள் எடுத்துக் காட்டுக்களாக உரைத்தக்கன.[81] சிவபிரானது திருவுருவ அழகில் ஈடுபட்டு அதனை விளக்கும் உவமைகளே பல. 'பவளநன்மணி', 'பவளம்', 'பால்', 'பொன்' 'மின்னல்', 'பவளத்திரன்' என்றெல்லாம் சிவபிரானது சிவந்த மேனிக்கு உவமைகள் பல உரைப்பர்.[82] சிவபிரானின் திருநீல கண்டமோ, 'காயா' மலராக, 'மேகமாக', 'கருமணியாக' இவர்க்குத் தோன்றும்.[83] பெருமானின் திருவடிகளோ 'தாமரைகள்'. 'நுண்துகில்', 'பஞ்சி', என்பார்; பொதுப்படப் பூ என்றும் கூறி மகிழ்வார்.[84] அந்திச் செவ்வானம், சங்கின் வெண்மை, தழலின் செம்மை, வெள்ளி மால்வரையின் தூய்மை ஆகிய அனைத்தும் உவமைப் படுத்தப்படும் இடங்களும் உள்ளன.[85] பெண்களின் பேரழகை உவமைகளால் அழகு செய்யும் இடங்கள் பல.[86]

அப்பரடிகளாரின் உவமைகளும் இத்திறத்திலேயே திகழ்ந்திடக் காணலாம்.

"பஞ்சடுத்த மெல்விரலாள்"
"ஊழித்தீயன்ன ஒளி"
"மொய்பவளக் கொடியனையசடை"
"கங்குலிற் கறுத்த கண்டன்"
"கட்டித்தேன் கலந்தன்ன கெடில வீரட்டனார்"
"அரவிந்தம் ஒக்கும் ஐயாறன் அடித்தலமே"
"கெய்ந்நின்றெரியும் விளக்கொத்த நீலமணி மிற்றான்"
"செந்தீ அரும் பொத்தனைய அழல் மழுவா";
"கெண்டை போல் நயனத்திமவான்மகள்"

என்றெல்லாம் வரும் அடிகளார் உவமைகள் சுருக்கமும், தெளிவும் உடையவை. தம் உள்ளத்துக் கண்ட சிவனருட் காட்சியை இனிது விளக்கும் ஏற்றம் உடையவை[87]

சுந்தரரின் உவமைகளும் எளிய போக்கின; இனிய பொருள் அமைதியின. சிறியதும், பெரியதுமான வடிவம் கொண்ட இயல்பின. வேறுபட்ட உவமை உருபுகளைக் கையாளும் சிறப்புடையவர் சுந்தரர்.[88]

"கனல்சேர் ஒளியன்னதோர் பேரகலத்தங்கையவன்"
"செஞ்சேலன்ன கண்"
"காற்றனைய கடும்பரிமா"
"குரவம் அரவின் எயிரேற்று அரும்ப"
"மலைக்கு நிகரொப்பன வன்திரைகள்"
"பனிக்குத் தாரை பவள வெற்பிற் குளிக்கும்போல் நூற்கோமான்"
"கழித்தலைப்பட்ட நாயது போல"
"சுழித்தலைப்பட்ட நீரது போல"
"மானைப் புரையும் மடமென் னோக்கி"

என்றெலாம் வரும் சுந்தரர் உவமைகள் எடுத்துக்காட்டுக்கள்; கூர்ந்து நோக்கும் போது மூவர் தேவார உவமைகளும் ஒருநெறிப்பட்டு இயங்குகின்றமை தெளிவு.

### 4.1.1 உவமைத் தொகை :

திருஞானசம்பந்தர், சுந்தரர் திருப்பாட்டுக்களில் காணப்பெறும் உவமைகள் பரவலாக வருகின்றன ஆனால் அப்பரடிகள் திருப்பாட்டுக்களில் வருவனவற்றுள், நான்காம் திருமுறையில் மிகுதியாகவும், ஐந்தாம் திருமுறையில் அதனினும் குறைவாகவும், ஆறாம் திருமுறையில் அதனினும் குறைவாகவும் அமைகின்றன. அடிகளார் பாட்டுக்களில் வரும் உவமைகள் 274; அவற்றுள் 10.3% நான்காம் திருமுறையிலும் (111) 8.3% ஐந்தாம் திருமுறையிலும், (85) 8% ஆறாம் திருமுறையிலும் (78) வருகின்றன என்று கணக்கிட்டுக் காட்டல் தகும்[89]

### 4.1.2 உறுகயிறூசல் :

கயிற்றிற் கட்டப்பட்ட ஊசலைத் தம் நிலைமைக்கு உவமையாக்குகின்றார் அடிகளார். நெஞ்சு ஒன்றுவிட்டு ஒன்றைப் பற்றும் இயல்புடையது; பற்றியதை விட்டு நீங்கும், சென்று பற்றுதலும், பற்றியதை விட்டு நீங்கலும் நெஞ்சின் இயல்புகள் தன்னிடத்தை விட்டுப் பிறிதொன்றைச் சென்று பற்றுவது 'உறுகயிறூசல்', மீண்டும் தன்

### 4.1.3 பழமொழி உவமைகள்:

சைவசமயம் விட்டுச் சமண சமயம் சார்ந்தமைக்காக இரங்கும் அடிகளார், பல பழமொழிகளையே உவமையாக்கியுள்ளார்:[91]

"கொய்யுலா மலர்ச்சோலைக் குயில்கூவ மயிலாலும்
ஆரூரரைக்
கையினால் தொழாதொழிந்து கனியிருப்பக் காய்
கவர்ந்த கள்வனேனே"
"முன்பிருக்கும் விதியின்றி
முயல்விட்டுக் காக்கைப்பின் போனவாறே"
"அருகிருக்கும் விதியின்றி
அறமிருக்க மறம்விலைக்குக் கொண்டவாறே"
"பண்டெலாமறியாதே
பனிநீராற் பாவை செயப் பாவித்தேனே"
"என்னாகத் திருத்தாதே
ஏதன்போர்க்குஆதனால் அகப்பட்டேனே"
"எப்போதும் நினையாதே இருட்டறையின் மலடுகறந்து
எய்த்தவாறே"
"விதியின்றி மதியிலியேன்
விளக்கிருக்க மின்மினித்தீக் காய்ந்தவாறே"
"பாவியேன் அறியாதே
பாழூரிற் பயிக்கம்புக் கெய்த்தவாறே"
"தட்டானைச் சாராதே
தவமிருக்க அவம்செய்து தருக்கினேனே"
"கறுத்தானைக் கருதாதே
கரும்பிருக்க இரும்புகடித்து எய்த்தவாறே"

இப்பதிகத்துள் வரும் உவமைகள் நினைக்க நினைக்க நலம் ஊறும் கருத்தாழம் உடையவை.

### 4.1.4 ஐந்தெழுத்துவமைகள்:

திருவைந்தெழுத்துப் பதிகத்தில் சீரிய உவமைகள் பல பொருந்தித் திகழ்கின்றன.[92] பூவினிற் சிறந்த தாமரை போன்றும் அரனுக்குரிய ஐந்து திருமஞ்சனப் பொருள்களைத் தரும் பசுப்போன்றும், கோட்டமில்லாத கோவினைப் போன்றும், நாவினுக்கு அருங்கலமாகத் திகழ்வது நமச்சிவாய என்னும் திருவைந்தெழுத்து என்பார்; விண்ணளவு குவிக்கப்பட்ட விறகுக் குவியல் இடையே தழல் புகுந்தால் ஒன்று

மின்றிச் சாம்பராவதைப் போல, பாவத்தின் குவியலை நீறாக்குவது திருவைந்தெழுத்தே என்று விளக்குவார். அகத்திருளைக் கடியும் அக விளக்கு என்று போற்றுவார்; சொல்லின்கண் விளக்கும் சோதி விளக்கு, உயிர்களின் அகந்தோறும் விளங்கும் ஒளிபெருக்கும் விளக்கு, அறிவிற்கு அறிவாய் விளங்கும் நல்லக விளக்கு என்றெல்லாம் கூறித் திருவைந்தெழுத்தின் திறம் விளக்குவார்.

### 4.1.5 துயர விளக்கங்கள் :

தாம் அடைந்து வருந்துதற்குக் காரணமான துயரங்களை எண்ணி எண்ணிக் கனிகின்றார் பல இடங்களில்:93

''மன்றத்துப் புன்னை போல மரம்படு துயரம் எய்தி''
''அழிவுடைத்தாய வாழ்க்கை ஐவரால் அலைக்கப்பட்டுக்
கழியிடைத் தோணி போன்றேன்''
''சித்தத்துள் ஐவர்தீய செய்வினை பலவும் செய்ய
மத்துறு தயிரே போல மறுகுமென் உள்ளம்தானும்''
''இருதலை மின்னுகின்ற
கொள்ளிமேல் எறும்பென் னுள்ளம்''
''திளைத்து நின்றாடுகின்ற ஆமைபோல் தெளிவிலாதேன்''
''மோத்தையைக் கண்ட காக்கைபோல்''

என்ற உவமைகள் மறக்கவியலாத் தரம் உடையவை; உருக்கம் உண் டாக்கும் திறன் உடையவை.

### 4.1.6 எள்ளல் உவமை:

கிணற்றில் வாழும் ஓர் ஆமை, கடலில் வாழும் ஆமை ஒன்றைக் கண்டு, 'இக்கிணற்றின் அளவை விடப் பெரியதோ உன்கடல்' என்று கேட்பதுபோல், ஞானத்தால் தொழுவார்க்கன்றிப் பாவகாரிகளாக உள்ளவர்க்குப் பார்த்தற்கரியவன் சிவபிரான் என்று பாடும் பாட்டு, எள்ளல் உவமைக்கு எடுத்துக் காட்டாக உள்ளது:94

''கூவலாமை குரைகடல் ஆமையைக்
கூவலோ டொக்குமோ கடல் என்றல் போல்
பாவகாரிகள் பார்ப்பரி தென்பரால்
தேவதேவன் சிவன்பெருந் தன்மையே''

### 4.1.7 பிற அமைப்புக்களில்:

'நினைப்பென்னும் நெடுங்கிணறு' என்று உவமைகாட்டி உரைக்கும் சம்பந்தர் திருப்பாட்டு மறக்கவியலாத ஒன்று:[95]

> "நினைப்பெனும் நெடுங்கிணற்றை நின்றுநின்றயராதே
> மனத்தினை வலித்தொழிந்தேன்"

சுந்தரர் உவமைகளில் தம் இழிவும் பெருமானின் பெருமையும் தோன்றப் பேசுவனவே மிகுதி இடம் பெறுகின்றன:[96]

> "கழுதைகுங்குமம் தான் சுமந்து எய்த்தாற் கைப்பர்
> பாழ்புக மற்றதுபோல"
> "புன்னுனிப் பனி வெங்கதிர் கண்டாற்
> போலும் வாழ்க்கை"

"நெற்கதிரைக்கண்ட பெரும்பசியாளன் போலக் காவிரிப் பெருக்கால், அக்கரைக்கு வர இயலாத யான் தொலைவில் உம்மைக்கண்டு மகிழ இயலுகின்றதேயன்றி அண்மையில் வந்து இன்பம் ஆர்ந்திருக்கும் நிலையைப் பெற்றிலேனே" என்று தம்நிலை சுட்டிப் படைக்கும் புதிய உவமை ஒன்றை நாவலூரார் நற்றமிழில் கண்டு இன்புறலாம்:[97]

> "கதிர்கொள் பசியே யொத்தே நான்
> கண்டேன் உம்மைக் காணாதேன்
> எதிர்த்து நீந்த மாட்டேன் நான்
> எம்மான் தம்மான் தம்மானே"

"கன்றுகள் முட்டித்தான் பசுக்களின் மடிப்பால் சுரக்கும். அக்கன்றுகளும் இனிது பருகும். அதுபோல் அடியார்கள் நும்திருமுன்பு நாள்தோறும் வந்து வாழ்த்தி வணங்கியே பயன்பெற வேண்டும்" என்று கூறும் நம்பியாரூரர் உவமை நலம் சான்றது:[98]

> "கன்று முட்டி உண்ணச் சுரந்த காலியவைபோல"

"பஞ்சையடைத்தற்குரிய குடுக்கையில் பஞ்சைக் கொஞ்சம் மிகுதியாக அடைப்பினும் அது உடைந்துவிடாது. அதைப்போல் உயிர்களை ஆட்கொள்ளுதற்குரிய நீர் என்னையும் ஆட்கொண்டால் உமக்குப் பளு கூடிவிடாது" என்பார்;[99]

"பஞ்சியிடப் புட்டில் கீறுமோ பணியீர் அருள்
முஞ்சியிடைச் சங்கம் ஆர்க்கும் முதுகுன்றரே"

இளமை மீதூர இன்பம் துய்த்தவர் அவ்விளமை கழிந்த பிறகும் அச்சிற்றின்பத்தைத் துய்க்க எண்ணுவராயின் அஃது இயலாது. முதற் குலை பழுத்த வாழையிடத்து பின்னும் குலையீன்று பழுக்கும் என்று எண்ணுதல் பிழை; அது போன்றதே என்று விளக்குவார்:[100]

"ஏழை மானுட இன்பினை நோக்கி
இளையவர் வலைப்பட்டிருந்து இன்னம்
வாழைதான் பழுக்கும் நமக்கென்று
வஞ்சவல்வினை உள்வலைப் பட்டு"

கண்ணிழந்த தம் துன்பத்திற்கு, "கழித்தலைப்பட்ட நாயது போல" என்றும், "மகத்திற் புக்கதோர் சனியெனக்கு ஆனாய்' என்றும், "சுழித்தலைப்பட்ட நீரதுபோல" என்றும் கூறும் உவமைகள் சுந்தரர் நயத்திற்குச் சொந்தமான தனித்தன்மை வாய்ந்தவை.[101]

காய்ந்த இரும்பின் மீது நீர் பட்டால், உடனே அது உள்ளே சுவறிப் போகும்; அதுபோன்று இறைவனது திருவருள் உயிரின் அகத்துப் பதிந்து விட்டால் அதன் தன்மை உள்ளே சுவறிவிடும். இத் தூய உவமையை,[102]

"ஏதிலென் மனத்துக்கு ஓர் இரும்பு உண்ட நீரை"

என்ற பகுதியில் நாவலூரரர் விளக்குவது, 'சத்திநிபாதம்' என்ற அருள் வீழ்ச்சியை நுட்பமாகக் காட்டும் இடம் ஆகும்.

இங்ஙனம், தனித்தன்மை வாய்ந்த பல்வேறு விழுமிய உவமை நலங்களைத் தேவார மூவர் திருவாக்குக்களில் கண்டு இன்புறலாகும்.

### 4.2.0 உருவகங்களின் திறன்:

கற்பனை வளம் கனிந்த உருவக நுட்பங்களை மூவர் தமிழிலும் பரக்கக் காணலாம். உவமையின் முறுகிய வடிவங்களாகிய உருவக அமைப்புடைய அப்பகுதிகள் சுந்தரரினும் இருவர் தமிழில் மிகுதியாக அமைந்திருத்தல் நோக்கத்தக்கது.

## 4.2.1 பாலறாவாயர் படைத்தவை :

சீர்காழியில் தழைத் தோங்கி நிற்கும் கமுக மரங்கள் திருஞானப் பிள்ளையார் கண்களிற் படுகின்றன. அவற்றின் சிறிய பிஞ்சுகள் முத்துக்களாக — காய்கள் மரகதமாக — பழங்கள் பவளமாகவே தோன்றுகின்றன:103

*''எண்ணார் முத்தம் ஈன்று மரகதம் போற் காய்த்துக்*
*கண்ணாற் கமுகு பவளம் பழுக்கும் கடற்காழி''*

திருவீழிமிழலைப் பொய்கையை அடுத்து வயல்கள்; மலர்ந்த தாமரைப்பீடங்கள்; இலைக்குடைகள்; செந்நெற்கதிர் வெண்சாமரங்கள் இளஅன்ன அரசாட்சி இப்படி நடக்கிறதாம்; சிவஞானபிள்ளையார் உருவகம் இது:104

*''செறியிதழ்த் தாமரைத் தவிசில்*
*திகழ்ந்தோங்கும் இலைக்குடைக் கீழ்ச் செய்யார்செந்நெல்*
*வெறிகதிர்ச் சாமரை யிரட்ட*
*இளஅன்னம் வீற்றிருக்கும் மிழலை''*

முத்துக்கள் பல் காட்ட — தாமரைகள் முகம் காட்ட — கயல் மீன்கள் விழிகாட்ட — பவளம் வாய்காட்ட அந்த உருவகக் காட்சியை நமக்குக் காட்டும் திருஞானசம்பந்தர் வரிகள் இவை:105

*''கொழுந்தரளம் நகைகாட்டக் கோகநதம் முகம் காட்டக்*
*குதித்து நீர்மேல்*
*விழுந்தகயல் விழிகாட்ட விற்பவளம் வாய்காட்டும்*
*மிழலையாமே''*

மாதவிக் கொடிகள்மீது வண்டுகள் சுற்றிவந்து பாடுகின்றன; அண்மையில் மயில்கள் ஆடுகின்றன. பக்கத்துப் புன்னைமரங்கள் தம் மலர்களைச் சொரிவது, இந்தக் கலைநிகழ்ச்சிக்குப் பரிசு தருவதாக அமைகிறது. கற்பனை வளம் கனிந்த இந்த உருவகம் பின்வருவது:106

*''மாதவிமேய வண்டிசைபாட மயிலாடப்*
*போதலர் செம்பொன் புன்னை கொடுக்கும் புறவம்மே''*

"வரைசேரும் முகில் முழவ மயில்கள்பல நடமாட வண்டுபாட
விரைசேர்பொன் இதழிதர மென்காந்தள் கையேற்கும்
மிழலை"

என்பது முற்கூறியதோடு ஒத்த ஒரு பகுதி.[107]

"மான்பாய வயலருகே மரமேறி மந்திபாய் மடுக்கள்தோறும்
தேன்பாய மீன்பாயச் செழுங்கமல மொட்டலரும்"

என்பர் பிறிதோரிடத்து.[108]

### 4.2.2 அப்பர் உருவகங்கள்:

அப்பரடிகளாரது உருவகங்கள் எளிமையானவை; பொருள் தெளிவு கொண்டவை. "மெய்ம்மை யெனும் உழவினால் சிறந்து, விருப்பம் என்னும் வித்தை ஊன்றி, பொய்மை என்ற களையை நீக்கி, பொறையுடைமை என்ற நீரைப் பாய்ச்சித் தகவென்னும் வேலியை இட்டால் சிவகதி என்ற பயிர் விளையும்'' என்ற உருவகம் உலகத்தார்க்கு அறிவுரை தரும் உயர்வுடையது.[109] "காயக் கோயிலில் மனமே அடிமையாக,வாய்மையே தூய்மையாக, நேயமே நெய்யும் பாலுமாகச்" செய்யும் அகப்பூசையை உருவகப்படுத்தும் திறன் இனியது.[110] "அடியவர்க்கு முத்தி காட்டும் ஏணியாக—இடர்க்கடலினின்றும் அக்கரை செல்ல உதவும் தோணியாக–சுடர்ப் பொற் காசின் ஆணியாக" இறைவனைக் காண்பார் பிறிதோரிடத்து.[111] 'நீற்றுத் தண்டத்தராய் நினைவார்க் கெலாம் ஊற்றுத்தண்டு' என்பார்;[112] 'பத்தர் நெஞ்சுள் தித்திக்கும் தேனும் அமுதும்' என்பார்;[113] 'மாலையெழுந்த மதி; காலை முளைத்த கதிர்' என்பார்;[114] "மாசில் வீணையும், மாலைமதியமும், வீசுதென்றலும் வீங்கிள வேனிலும், மூசு வண்டறை பொய்கையும்" 'ஆக ஈசன் எந்தை இணையடி நீழல் விளங்கும்' என்பார்.[115] 'முடி வண்ணம் வான மின் வண்ணம்; தம் ஆர மார்பின்; பொற வண்ணம் தம் புகழூர்தியின் வண்ணம்; படிவண்ணம் பாற்கடல் வண்ணம்; செஞ் ஞாயிறு அடிவண்ணம் ஆரூர் அரநெறியார்க்கே' என்பார்.[116]

தம்முடைய உடல் தரும் துன்பத்தை உருவகங்களால் இனிய கவிப்படுத்துவர் அடிகளார்.[117] 'கால்கொடுத்து இருகையேற்றிக் கழி நிறைத்து இறைச்சி மேய்ந்து தோல்பருத்து, உதிர நீராற் சுவரெடுத்து, இரண்டு வாசல் வைத்து, ஏழுசாலேகம் பண்ணி' என்று உடலை விவரிப்பார்.

'ஒரு முழம் உள்ள குட்டம்; ஒன்பது துறை உடைத்தாய் அரை முழம் அதன் அகலம்; அதனுள்ளே வாழும் முதலைகளோ

ஐந்து?- என்று உடலையும் ஐம்பொறிகளையும் விதந்து உருகும் விதமும் உண்டு.[118] 'மனமே தோணி; மதியே ஓடக்கோல்; சினமே ஏற்றப்பட்ட சரக்கு; பிறவியே கடல்; மதன் எனும் பாறை தாக்க மறிந்து விழும் தோணி எப்போது விழும் என்று சொல்ல இயலாது' என்று வாழ்க்கைப் பயணத்தை வகைப்படுத்துவார்.[119] 'மெய்யுளே விளக்கை ஏற்றி, உயரத் தூண்டி உய்வதோர் உபாயம் பற்றி உவப் படைவேனைத் தடுத்து அணைக்கும் ஐவரை அகத்தே வைத்தீர்' என்று தம் துயரம் பேசிக் கனிவார்.[120] அடிகள் ஏற்றும் அக விளக்குப் பற்றிய அழகிய உருவகம் எண்ணுதற்கினிய செந்தமிழ்க் கவிதை:[121]

''உடம்பெனும் மனையகத்துள் உள்ளமே தகளியாக
மடம்படும் உணர்நெய் யட்டி உயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத் தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி காணலாமே''

இவ்வாறே திலகவதியார் முதலிய பெருமக்களின் அறிவுரைகளை யெல்லாம் இகழ்ந்து தாம் சமண சமயம் புகுந்து, மீளும் வகையின்றி இடர்ப்பட்டவர் அடிகளார், நீர்நிலை ஒன்றைக் காவல் செய்வோரைப் பொருட்படுத்தாமல், நீர்நிலைக் கரைக்கண் நின்றவர் 'அந்நீர்நிலையின் ஆழம் யாதென்று' வினவ, 'நீரே இறங்கிக் கண்டு கொள்வீராக' என்று கூறிவிடவும் இறங்கு துறையிலேயே மூழ்கித் தவிக்கும் நிலை தம் நிலைக்கு ஒத்திருப்பதை உணர்கின்றார்; உணர்ந்து தம் முதற்பதிகத் திருப்பாட்டொன்றில் இதனைப் புலப்படுத்துகின்றார்; பிறிதுமொழிதலாகவும், உருவகமாகவும் கொள்ளலாம்படி இப்பகுதி அமைந்துள்ளது. அடிகளாரது வாழ்விற்கு இதைவிடச் சிறந்த உவமை ஒன்று இருக்க முடியுமா?[122]

''காத்தாள்பவர் காவல் இகழ்ந்தமையால்
கரைநின்றவர் 'கண்டுகொள்' என்றுசொல்லி
நீத்தாய கயம்புக நூக்கியிட
நிலைக் கொள்ளும் வழித்துறை ஒன்றறியேன்''

உவமை, உருவகம் பெற்றுள்ள இடங்களை வேறு அணிகள் பெறவில்லை என்றே தேவாரப்பாக்களை அணியியல் நோக்கில் பார்க்கும் போது கூறத் தோன்றுகின்றது. உருவகத்தினும் உவமை

களே மிக்க இடம் பெற்றுள்ளன. சங்ககால இலக்கியப் போக்கே இவ்விடைக்கால இலக்கியத்தும் காணப்படுகின்றது. தன்மை நவிற்சியே அருளாளர்கள் கூற்றில் காணப்படுவது இயல்பு. அணிகள் தம்மியல்பில் வந்து பொருந்துகின்றன என்பது முதற்கண்ணும் மொழியப்பட்டது.

## 5.0 கற்பனைத்திறன்:

கற்பனையே கவிதை வெளியீட்டிற்கு அடித்தளம். கவிஞர்கள் கற்பனைக் காட்சியையே கவிதைக் காட்சியாக வெளிப்படுத்துகின்றனர். கற்பனை கலவாத கவிதையே இருக்க இயலாது; கற்பனை உயிரூட்டச்சத்தியாய் நின்று கவிதையை இயக்குகின்றது. மேலைநாட்டுத் திறனாய்வாளர்கள், ஆக்கக் கற்பனை என்றும் நினைவுக் கற்பனை என்றும் இரு வகையாகப் பாகுபாடு செய்து கற்பனையை விளக்குகின்றனர்.[123] ஆக்கக்கற்பனையே இவ்விரண்டுள் மிக விரிவும் ஆழமும் உடையதாகும். பொருளைக் கண்டவுடன் அதன் புறத்தோற்றம் முதலியவற்றில் ஈடுபடாமல் அதன் அகத்தை ஊடுருவியும், உட்கருத்தை அறிந்தும் விளைவது ஆக்கக் கற்பனை. இத்துடன் நில்லாமல், இக்கற்பனை ஆக்கல் தொழிலிலும் ஈடுபடுகின்றது. கவிதைக்கு வலிவையும், பொலிவையும் தருவன வடிவம், கற்பனை, உணர்ச்சி ஆகிய மூன்றுமே என்பர் திறனாய்வாளர்.[124]

கவிதைக்கும் உரைநடைக்கும் உள்ள வேறுபாட்டினைக் கூர்ந்து நோக்கினால், உரைநடை ஒரு மனிதனின் அறிவுக்கூற்றிற்குப் பாதிப்பை உண்டாக்குகின்றது; கவிதையோ மனிதனை முழுமையாகப் பாதிக்கிறது. மனிதனின் கற்பனை, உணர்வுகளைத் தூண்டிவிடும் சிறப்புக் கவிதைக்கே உள்ளது.[125] இதனாலேயே கவிதையை ஒருவகையில் 'கற்பனையின் வெளியீடு' என்று பொதுப் போக்கில் கூற நேரிடுகின்றது எனலாம்.[126]

தேவார மூவர் இறையருட்காட்சியில் திளைத்த திருவருளாளர்கள்; அப்பெரியோரது கற்பனையும் இறையருள் அநுபவத்தினை உடையதேதவிர, உலகியல் நிலை பற்றியதன்று. அவ்வாறு உலகியல் நிலை பற்றி ஒரோவழி எழுந்ததேனும் கடவுட்காட்சியோடு குழைந்தே வருமேயன்றித் தனித்து மலர்வதன்று. எடுத்துக்காட்டுகள் சிலவற்றைச் சுட்டுதல் தகும்.

## 5.1 பிள்ளையார் படைப்புக்களில்:

வேதங்களை வல்லவர்கள் நாள்தோறும் பயின்று ஓதுகின்ற ஓசை கேட்டுக் கேட்டுச் சோலைகளில் உள்ள கிளிகள் தாமும் பழகி வேதங்கட்குப் பொருள் கூறுகின்றன என்று கூறும் திருஞான சம்பந்தர் கற்பனை அழகியது:127

*''பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும் பயின்றோதும் ஓசைகேட்டு*
*வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள் பொருட்சொல்லும்''*

கிளிகள் கூறியதைக் கூறும் திறன் உடையன. ஆனால் வேதங்களுக்குப் பொருள் கூறுவதாக அமைக்கும் புதுமை இனியது' அதனுடன் 'சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுதல். வேண்டும் என்ற அருட்கவிஞர் குறிப்பு இவ்விடத்து உள்ளது என்றும் உணரலாம். மக்களுக்கு அறிவுறுத்தும் பொறுப்பு மிகவும் உள்ள அருளாளர்கள் நேரம் நேரும் போதெல்லாம் பயன்படுத்திக் கொள்வார்கள் என்பது தெளிவு.

மற்றொரு பகுதி, ஒரு படி மேலும் உயர்கிறது. பிழையாக யாரேனும் வேதங்களை ஓதினால், அப்பிழையைத் திருத்தியும் சொற்பணி செய்கின்றதாம் பசுங்கிளி: 128

*''மறை கிளைஞரோதப் பிழை கேட்டலாற் கருது*
*கிள்ளைக் குலம் தெரிந்து தீர்க்கும்''*

பிழையோடு உயர்ந்த நூல்களை ஓதலாகாது என்பதும், பிழைபட ஓதுபவர் ஓதக்கேட்டு, உணர்ந்த நல்லோர் அப்பிழையைத் திருத்தாமல் வாளா நிற்றல் குற்றம் என்பதும், ஆகிய இரண்டு குறிப்புக்களை அறிவுறுத்துவதே இவ்விடத்து ஆளுடைய பிள்ளையார் திருவுள்ளம் என்று கூறலாம்.

திருஞானசம்பந்தரது கற்பனை மேலும் விரிந்து ஒரு பேருண்மையை விளக்குவதாக மற்றோரிடத்து விளங்குகின்றது. பயிற்சியாலே இவ்வாறு கேட்டுத் தெளிந்த கிளிகள், அம்மறை மொழிகளைப் பக்கத்தில் உலவும் விடை ஏறுகட்கும் கற்பிக்கின்றன என்று கற்பனை செய்யும் திறனைப் பாலறாவாயர் திருப்பாட்டிற் பார்க்கின்றோம்:129

"படித்த நான்மறை கேட்டிருந்த பைங்கிளிகள்
பதங்களை ஓதப் பாடிருந்த விடைக்குலம் பயிற்றும்"

கற்றுத் தெளிந்தவர்கள் தாம் கற்ற கல்வியினைப் பயன்படுத்த வேண்டும் என்பதும், கல்லாதவர்க்குத் தாம் பெற்ற பேரின்பப் பயனை எடுத்து ஓதி அவர்களையும் நுகருமாறு செய்யவேண்டும் என்பதும், இவ்விடத்து இவ்வஃறிணை உயிர்களைக் கருவியாக வைத்துப் பிள்ளையார் உணர்த்த விழைந்த செய்திகள் என்றுகருதலாம்.

"தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்"

என்ற திருக்குறட் கருத்தும் இதுவேயன்றோ?[130] அவரவர் நிலைக்கு ஏற்ப அறிவுப் பணி செய்தலே அறிவுடையார்க்கு அழகு என்ற பேருண்மையை இக்கற்பனைப் பகுதிகள் எத்துணைத் தெளிவாக உணர்த்தி விடுகின்றன!

வெள்ளிய மலர்கள் பூத்துக் குலுங்கும் தாழைப் புதர் ஒன்று; நீர் நிலையில் உள்ள கெண்டை மீன்கள் அத்தாழை மலர்களைத் தம்மைப் பிடிக்க வந்த நாரைகள் என்று பிறழ உணர்ந்து அஞ்சுகின்றனவாம். தாமரை மலர்களின் புறத்தே சென்று ஒடுங்கிக் கொள்கின்றனவாம். இப்பியிலிருந்து வெளிவந்த முத்து ஒன்று இவ்வீணான அச்சத்தைக் கண்டு நகைப்பது போல் உள்ளதாம்; அருட்புலவராக விளங்கும் ஆளுடைய பிள்ளையாரின் அழகிய கற்பனை இது; இறைவனைப் பற்றிய திருப்பாட்டில் முக்காற்பகுதியை இக்கற்பனைக் காட்சி இடம்பிடித்துக் கொள்ளக் காற்பகுதிதான் கடவுளுக்குப் போய்ச் சேருகிறது என்று வேடிக்கையாக எண்ணத் தோன்றுகிறதல்லவா?

"தண்புறவின் மடல்விண்ட முடத்தாழை மலர்நிழலைக்
குருகென்று
தடமண்டு துறைக்கெண்டை தாமரையின் பூமறையக்
கடல்விண்ட கதிர்முத்தம் நகைகாட்டும் காட்சியதே"

கைவல்லானொரு ஓவியன் கவின்பெறத் தீட்டலாம்படி இப்பகுதி அமைந்துள்ளது.[131]

வேடர்கள் வழிபாடு செய்கின்ற செயலைக் கண்டு, — முல்லை மலர்கள் இயல்பாக மலர்ந்து நின்றவற்றை — அதுகண்டு மகிழ்ந்து நகைமுகம் கொண்டதாகக் கருதிக் கவிசெய்வர் பிறிதோரிடத்து:[132].

''கொல்லை வேடர் கூடிநின்று கும்பிட
முல்லை அயலே முறுவல் செய்யும்''

தென்னையிலிருந்து இளநீர்கள் உதிர்ந்தன; அடுத்திருந்த கமுக மரத்தின்மீது உதிர்ந்ததால், கமுகங்காய்கள் உதிர்ந்தன. அடுத்திருந்த வாழை மரங்களின்மீது உதிர்ந்ததால் வாழைத் தாறுகள் சிதறின; அக் கனிகளை உதிர்த்த பிறகு கீழே வயல்களில் வந்து வீழ்ந்தன. இவ்வாறு வயல்கள் சேறாக்கப் பட்டனவாம்.[133]

''தாழையிளநீர் முதிய காய்கமுகின் வீழநிரை தாறுசிதறி
வாழையுதிர் வீழ்கனிகள் ஊறி வயல் சேறுசெயும்''

பிற்காலத்துச் சிந்தாமணி இக்கற்பனையை ஏற்றுப் போற்றித் தழுவிக் கொண்டமை அறியத் தக்கது.[134]

திருக்குற்றாலத்தில் சளிறும் பிடியும் குற்றாலநாதரை வணங்கின என்று பாடுவார்; திருவீழிமிழலையில் வயல்களில் ஒரு திருமணக் காட்சியைக் காட்டுவார்:[135]

''ததவுடைநீர் மணித்தலத்துச் சங்குள வர்க்கம் திகழச்
சலசத்தீயில்
மிகவுடைய புன்குமலர்ப் பொரியட்ட மணம் செய்யும்
மிழலையாமே''

தாமரையே திருமணக் கூடத்தில் வேள்விக் குண்டம்; புன்க மரத்திலிருந்து உதிரும் மலர்களே வேள்வித்தீயிற் சொரியும் பொரிகள். சுற்றத்தார் கூட்டமே சங்குகள். நல்ல கற்பனை; மறை வழிப்பட்ட திருமண முறை அக்காலத்திலிருந்தது என்பதை இக்கற்பனை இனிது விளக்கும்.

## 5.2 திருநாவுக்கரசர் கற்பனைகள் :

அப்பரடிகளாரின் கற்பனைக் காட்சிகள் திருஞானசம்பந்தருடையதைப் போன்று இயற்கை வழிப்பட்ட காட்சிகள் அல்ல; கடவுள் தொடர்புடையவை மட்டுமே. சிவபிரான் திருமுடியிற் பாம்பும், பிறையும் உள்ளன; கரத்தில் நகுகின்ற வெண்டலை உள்ளது; அம்மையொரு பாகத்தில் உள்ளாள். பாம்பைக் கண்டு அஞ்சுகின்றாளாம் அம்மை; மயிலோ என்று அம்மையைக் கண்டு அரவம் அஞ்சுகின்ற

தாம். பிறையோ அழகிய நெற்றியைக் கண்டு தனக்கு இல்லையே இத்துணை அழகு என்று ஏங்குகின்றதாம்; கபாலம் இதைக் கண்டு நகுகின்றதாம். அச்சம், ஐயம், ஏக்கம், நகைப்பு ஆகிய உணர்வுகளைப் பின்னலாக்கி இவ்வாறு கற்பனை செய்கின்றார் அடிகளார்: 136

*"கிடந்தபாம் பருகுகண் டரிவை பேதுறக்*
*கிடந்தபாம் பவளையோர் மயிலென் றையுறக்*
*கிடந்தநீர்ச் சடைமிசைப் பிறையும் ஏங்கவே*
*கிடந்துதான் நகுதலைக் கெடில வாணரே"*

ஓர் அருமையான கவிதை நமக்குக் கிடைத்து விடுகின்றது! உலகெலாம் படைத்தளிக்கும் அன்னை ஒரு சிறு அரவத்திற்கு அஞ்சுவாள் என்பது நம் அறிவுக் கண்ணிற்குப் பொருந்தாத காட்சிதான்; ஆனால் உணர்வு வழிப்பட்ட கலைக் கண்ணுக்கு அக்கற்பனை விருந்தாகிறது அன்றோ?

இதே கற்பனை இன்னும் சிறிய மாற்றத்தோடு, நாகம் திங்களை மின்னலென்று கருதி அடங்கி ஒடுங்கும் என்ற பிற்சேர்க்கையோடு, மற்றொரு காட்சியாக விரிவதும் அடிகளார் திருப்பாட்டுக்களிற் கண்டதே: 137

*"நாகத்தை நங்கை அஞ்ச*
*நங்கையை மஞ்ஞை என்று*
*வேகத்தைத் தவிர நாகம்*
*வேழத்தின் உரிவை போர்த்தும்*
*பாகத்தின் நிமித்தல் செய்யாத்*
*திங்களை மின்னென் றஞ்சி*
*ஆகத்திற் கிடந்த நாகம்*
*அடங்கும் ஆரூர னார்க்கே"*

ஏதோ வினவுவான் போல வந்த சிவபெருமான், அடிகள் உள்ளத்தில் அவரறியாமற் புகுந்து ஒளிந்து கொண்டு விட்டான். அடிகள் வினாவிற்கு விடையிறுப்பதற்காகப் புறத்தே தேடி நின்று அலுத்துப் போனார்; பிறகு அவன் உள்ளே புகுந்து கொண்டதை மெள்ள உணர்ந்து, "கள்ளரோ நீர்? என்னையறியாமல் என் உள்ளத்திற் புகுந்து கொண்டீரே" என்று கேட்க, இறைவன் மலர்ந்து நகைத்த

படியே ''நாம் வெள்ளரோம்'' (வெளிப்படையான தன்மை உடையேம்) என்று வெளிப்பட்டுத் திருக்காட்சி வழங்கி நின்றான். இப்படி ஒரு கற்பனை அழகிய பாட்டாகி வெளிவருகிறது:138

''வெள்ளநீர்ச் சடையனார்தாம்
வினவுவார் போல வந்துஎன்
உள்ளமே புகுந்து நின்றார்க்கு
உறங்குநான் புடைகள் போந்து,
'கள்ளரோ புகுந்தீர்' என்னக்
கலந்துதான் நோக்கி நக்கு
'வெள்ளரோம்' என்று நின்றார்
விளங்கினம் பிறையனாரே''

உள்ளும் புறமும் கடவுட் காட்சியாகக் கண்டு திளைத்த இவ்வருட் கவிஞர் பெற்ற அனுபவங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பாட்டுத் தான்!

மற்றொரு முறை, இறைவன் தம்மோடு ஒன்றாய் நின்றாலும், மூச்சுக் காற்றோடு மூச்சுக் காற்றாய் உடன் நின்றாலும், அவனைக் காண முடியாமல் உருகுகின்றார்; அது ஒருநிலை அனுபவம்:139

''உள்ளத்தே நிற்றியேனும்
உயிர்ப்புளே வருதியேனும்
கள்ளத்தே நிற்றியம்மா
எங்ஙனம் காணுமாறே''

'அம்மா'! என்ற வியப்பிடைச் சொல், இங்கு ஏக்கத்தை உணர்த்தும் புதுப்பொலிவுடன் நிற்கின்றதன்றோ?

திருவொற்றியூர்ச் சிவபிரான் திருமுடி கொன்றை மலர்களைச் சூடியிருப்பதால் முல்லை; கபாலம் இருப்பதால் சுடலைக்காடு; கங்கை சங்கமமாவதால் நெய்தல்; அரவு இருப்பதால் முற்று; இளம்பிறை இருப்பதனால் வானம் என்று பாடி மகிழும் அடிகளார், நகைச்சுவை ததும்பப் ''பெருமானே! கங்கையைச் சடையுள் மறைத்து வைத்திருக்கின்றாய்; அந்தக் கள்ளத்தை உமை நங்கை அறியில் பொல்லாது' என்று எச்சரிக்கை செய்வது போல இன்கவி இசைத்தலும் உண்டு;140.

''வங்கமலி கடல்நாகைக் காரோணத்தெம் வானவனே
எங்கள் பெருமானோர் விண்ணப்பம் உண்டது கேட்டருளீர்;
கங்கை சடையுட் கரந்தாய் அக்கள்ளத்தை மெள்ளஉமை
நங்கை அறியிற் பொல்லாது கண்டாய் எங்கள் நாயகனே''

இவ்வாறே சிவபெருமானை ''ஒன்றரைக் கண்ணன்'' என்று கற்பனை செய்வதும் உண்டு.[141] கீழ்க்கணக்குப் பதிவேடு ஒன்று வைத்துள்ளான் பெருமான் என்றும், வழிபாடு செய்யும் தூய அடியார்களையும், பொழுதுபோக்கிப் புறக்கணிப்பவர்களையும் அதில் எழுதிக் கொள்வான் என்றும் பாடும் பகுதியும் உண்டு.[142]

## 5.3 தம்பிரான் தோழரின் தமிழில்:

சுந்தரர் கற்பனைக் காட்சிகளும் பெரும்பான்மையும், சம்பந்தருடையதைப் போன்று இயற்கை தழுவிய திறம் கொண்டனவே. திருக்கேதார மலையை ஓர் இன்னிசைக் கூடமாக்கிக் காட்டுகின்றார். பண்சுமந்த தமிழ்ப் பாடல்களின் இசை ஒரு மருங்கு; அதற்கேற்பக் குழலும் முழவும் ஒலிக்கின்றன. அருகில் உள்ள வேழங்கள் செம்மணிகளை வாரி வாரி இறைக்கின்றன. சுனைகளில் உள்ள அலைகள் வைரங்களை வாரி இறைக்கின்றன. இவ்வாறு ஒலி, ஒளிக் காட்சி பெற்று விளங்குவது திருக்கேதாரம் என்பார் ஒரு திருப்பாட்டில்.[143]

''பண்ணின் தமிழ் இசைபாடலின் பழவேய் முழவதிரக்
கண்ணின்னொளி கனகச்சுனை வயிரம்மவை சொரிய
மண்ணின்றன மதவேழங்கள் மணிவாரிக் கொண்டெறியக்
கிண்ணென்றிசை முரலுந்திருக் கேதார மெனீரே''

திருக்கேதாரத்தில் இன்னொரு கற்பனைக் காட்சி. பெண் யானைகள் தமக்குரிய ஆண் யானைகளுக்கு மூங்கிலைப் பறித்துக் கொடுத்து உண்பிக்கின்றனவாம்; அன்பான மொழிகளை முகமனாகக் கூறுகின்றனவாம் அப்பிடிகள். மனமகிழ்ந்த வேழங்கள் சுனை நீரை முகந்து மழைபோலத் தூவின; அதனால் நனைந்த நிலத்தை மயில்களும் பெண்மான்களும் கீறுகின்றனவாம்; கீறிய அளவிலே மாணிக்கங்கள் கீழிருந்து தெறித்துப் புறப்பட்டு ஒளி வீசுகின்றனவாம். இப்படி மற்றொரு பாட்டில் எழுதிக்காட்டும் ஓவியமும் உண்டு:[144]

''முளைக்கைப் பிடி முகமன்சொலி முதுவேய்களை இறுத்துத்
துளைக்கைக் களிற் றினமாய் நின்று சுனைநீர்களைத் தூவி
வளைக்கைப் பொலி மழை கூர்தர மயில் மான்பிணை நிலத்தைக்
கிளைக்க மணி சிந்தும் திருக் கேதாரம் எனீரே''

மனையறம் வழுவாத மகளிர் போன்று பிடிகளைக் கற்பித்தல், அறிவுறுத்தும் திறம் கொண்டது எனல் மிகையாகாது.

திருப்பருப்பதத் திருப்பதிகத்தை அன்பு வழுவாத ஆனைக் கூட்டத்தினைக் காட்டுகின்ற நம்பியாரூரர் ஓர் ஊடற்காட்சியையும் ஓவியம் ஆக்குகின்றார். ஓர் ஆண் யானை, தன்பிடி வேறோர் வேழத்தின் பாற்பட்டு அன்புமாறி வந்ததாகக் கருதுகின்றதாம்; சினம் அடைந்து தன் துதிக்கையை உயர்த்தி, இரு கண்களில் கனல் தெறிக்க, மத நீரைப்பொழிந்து, முகத்தைச் சுழிக்கின்றதாம்; ஆனால் அப்பிடியோ, தவறு செய்யாத இயல்புடையது; ஆதலால், 'நீ இவ்வாறு தகாத பழியைச் சுமத்தினால் யான் உயிர் தரிக்ககில்லேன்' என்று கூறி எல்லோரும் அறியச் சூள் உரைக்கின்ற தாம். மக்களின் கற்புடைமையை விலங்குகளுக்கேற்றி உரைக்கும் இக்கற்பனை பண்பு நெறி வழுவாக் காதல் மாண்பினை உணர்த்தும் அன்றோ? பாட்டு முழுமையும் இக்காட்சியே, இத்தகைய சீபர்ப்பதம் இறைவனுக்கு உரிய திருமலை என்று எச்சத்தாற் பெற வைக் கின்றார் நம்பியாரூரர். ஓர் அருமையான கவிதையை இலக்கிய உலகம் பெற இக் கற்பனை துணை செய்துள்ளது:145

''மாற்றுக் களி றடைந்தாய் என்று மதவேழம் கையெடுத்து
மூற்றித் தழல் உமிழ்ந்தும் மதம் பொழிந்தும் முகம் சுழியத்
தூற்றத் தரிக்கிலேன் என்று சொல்லி அயல் அறியத்
தேற்றிச் சென்று பிடி சூளுறும் சீபர்ப்பத மலையே''

திருப்பருப்பத மலையில், ஆண் யானைகளும் பெண் யானை களும் பிரிந்து காட்டுப் பகுதியில் திரியலாயினவாம்; ஆண் யானைகள் பெருங்குரல் எடுத்துப் பிளிறித் தம் பெண் யானைகளைத்

தம்முடன் கூட்டப் பெரு முயற்சி செய்தும் பயன்இல்லையாம்; பெண் யானைகள் அலமந்து வருந்தித் தம் துணையைப் பிரிந்து வருந்தினவாம். மலை வாழ் வேடர்கள் கருணையும், இரக்கமும் கொண்டவராய், இலைகளால் 'கல்லை' செய்து தேனைப் பிழிந்து அவற்றிற்கு ஊட்டி வருத்தம் தவிர்த்தனராம். கொலைத் தொழிலன்றிப் பிறிதறியா வேடர்கள் உள்ளத்திலும் கருணைக் கசிவு உண்டு என்று காட்டுதற்குத் தம்பிரான் தோழர் இக்காட்சியைப் புனைந்தனர் என்று கருதலாம். அன்றிச் சிவபிரானது தண்ணளி ததும்பிய திருமலை ஆதலின், அதனில் வாழும் வேடர்க்கும் அவ்வியல்பு வாய்த்தது என்று சுட்டுதற்கு இதனை வரைந்தனர் என்றும் கருதலாம்:146

''மானக் குற அடல்வேடர்கள் இலையாற் கலை கோலித்
தேனைப் பிழிந்து இனிதூட்டிடும் சீபர்ப்பத மலையே''

ஆன்மாக்கள் படும் துயரம் பொறாது, இறைவன் ஆகிய தலைவன், அவ்வவற்றின் பண்பாட்டிற்கும் பக்குவத்திற்கும் ஏற்பத் தன் திருவருளை ஊட்டி இன்பூட்டும் அறக் கருணையை இவ்வாறு குறியீட்டு வகையில் (Symbolism) சுந்தரர் குறித்தனர் என்று கொள்ளுவதற்கும் இடம் உள்ளது. 147

திருப்பருப்பத மலைவாழ் குறப் பெண்களின் கருணை உணர்வை ஒரு பாட்டில் விளக்குகின்றார் சுந்தரர்:148

''அப்போது வந் துண்டீர்களுக் கழையாதுமுன் னிருந்தேன்
எப்போதும் வந் துண்டால் எமை எமர்கள் சுழியாரோ?
இப்போதுமக் கிதுவே தொழில் என்னோடி அக் கிளியைச்
செம்பேந்திள முலையாள் எறி சீபர்ப்பத மலையே''.

'சிற்றுயிராயிற்றே; வயிற்றிற்கு உண்ணட்டும்' என்று முன்னே வாளா இருந்தவள், அக்கிளிகள் பின்னும் பின்னும் வந்து கவர்ந்து தேக்கெறியவும், தம்மவர்கள் கடமை தவறியவளாகத் தன்னைக் கருதாமை நோக்கி அக்கிளிகளை ஓட்ட முற்பட்டனர் என்கின்றது பாட்டு, கல்வியறிவில்லாத மலைவாழ் மக்களுக்கு இருக்கும் பண்பாடு சிறந்து நிற்றலைச் சந்திக்க வைக்கின்றார் தம் சிறப்பான கற்பனைத் திறத்தால்.

காவிரியாறு இருமருங்கிலும் மணிகளை வாரி வீசிக்கொண்டு வருகிறதாம்; கரைச்சிற்றூர்களில் வாழும் இளம்பிள்ளைகள் விளையாடுதற்காக அம்மணிகளைத் தெருக்களிலும், முற்றங்களிலும், திண்ணைகளிலும் குவிக்கின்றனராம் 149

''பெருகு பொன்னி வந்துவந்து பன்பணியைப்
பிள்ளைப் பல்கணம் பண்ணையுள் நண்ணித்
தெருவும் தெற்றியும் முற்றமும் பற்றித்
திரட்டும் தென்திரு நின்றியூரானே''

அரிசில், கங்கை. காவிரி, கெடிலம், கொள்ளிடம், கோதாவிரி, சிற்றாறு, நிவா, பாலாவி, பாலாறு, பெண்ணை, மண்ணி, முத்தாறு ஆகிய ஆற்று வருணனைப் பகுதிகள் ஆங்காங்குப் பல கற்பனை வளங்களுடன் சுந்தரர் செந்தமிழில் காணப்படுகின்றன. இவ்வாறே ஏனைய இருவர் தேவாரப் பகுதிகளிலும் வரும் ஆற்று வருணனைப் பகுதிகள் கருத்திற்கு விருந்தாக அமைந்துள்ளன என்பதும் குறிப்பிடத் தக்கது.

## 5.4 இயற்கை இறந்த கற்பனைகள் :

உள்ளதை உள்ளபடியே புனையும் கற்பனையுடன், உள்ளதைச் சிறிது எல்லை கடந்து புனையும் இயற்கையிறந்த கற்பனைப் பகுதிகளும் மூவர் தேவாரங்களுள் இல்லாமல் இல்லை; இவற்றை 'அபூதக் கற்பனைகள்' என்று வகைப்படுத்தல் தகும்.150 யாதேனும் ஒரு சீரிய காரணம் பற்றியே இவ்வகை கற்பனைகள் எழும்; உயர்வு நவிற்சி அணியாக இவற்றைக் குறிப்பர்; உலகியற்கை கடவாத பல்வேறு கற்பனை காட்சிகளுக்கிடையில், இவ்வகை கற்பனைக் காட்சிகளும் காணப்படுகின்றன. எடுத்துக்காட்டாகச் சிலவற்றைக் காட்டல் பொருந்தும்.

காஞ்சி மாநகரில் மிக உயர்ந்த மாடமாளிகைகள் உள்ளன; குன்றுகளைப் போன்ற அவற்றின் உச்சி மீது வெண்துகிற் கொடிகள் பறக்கின்றன. மின்னல்களோடு கூடிய முகிற் கூட்டத்தொடு தோய்கின்றன அக்கொடிகள் என்று உயரத்தை மிகைபடுத்துகின்றது பாலறாவாயர் பைந்தமிழ்;151

''குன்றேய்க்கு நெடுவெண் கொடி கூட்டிப்போய்
மின்றேய்க்கு முகில்கள் தோயும் வியன்கச்சி''

திருவீழிமிழலையில், அழகிய பெண்கள் தம் குழந்தையரைப் பாராட்டி மகிழ்கின்றார்கள்; அழகொழுகும் தமிழில் தாலாட்டுப் பாடல் களைப் பாடுகின்றார்கள் அத்தாலாட்டின் இனிய ஓசை விண்ணுல கிற்குச் சென்று எட்டுகின்றது. தேவர்கள் அதுகேட்டு வியப்பெய்து கின்றனராம். அத்தமிழ் இசைக்கு உளம் குழைந்து தம் விமானங் களோடு அத்தலத்திற்கு இறங்கி வருகின்றார்களாம். செந்தமிழ் கலந்த பண்ணிசை - தமிழகத்துத் தாய்மார்களின் தாலாட்டிசை விண்ணவர் களையே மண்ணுலகிற்கு இறங்கி வருமாறு ஈர்க்கின்றது என்ற கற் பனை, ஆய்ந்து நோக்கினால் அபூதக் கற்பனையே என்றாலும், தமிழின் உயர்வைத் தெளிவு படுத்தும் வகையில் இனிது அமைந்துள்ளது அன்றோ?[152]

*''பண்ணமரும் மென்மொழியார்*
*பாலகரைப் பாராட்டும் ஓசைகேட்டு*
*விண்ணவர்கள் வியப்பெய்தி*
*விமானத்தோ டிழியும் மிழலையாமே''*

திருவீழிமிழலையில் ஆடும் கொடிகள், விண்ணோரை நோக்கி, 'எல்லா உலகங்களும் நிலைபேறு கொள்ளுமாறு செய்தவனும், மேலான உண்மை வடிவினனும், நல்லவனும் ஆகிநின்ற இறைவனை வணங் குவீராக' என்று விளித்துக் கூறுவன போன்று இருந்தன என்ற கற் பனையழகு உணர்தற்குரியது:[153]

*'தாணுவாய் நின்றபர தத்துவனை உத்தமனை*
*இறைஞ்சீர்என்று*
*வேணுவார்கொடி விண்ணோர்தமை விளிப்ப போல்*
*ஓங்கும் மிழலையாமே''*

## 6.0 இயற்கைப்புனைவு-பாடுபொருளாதல் :

அப்பரடிகளார் திருவாக்கில் இயற்கைப் புனைவு மிகக்குறைவு; உள்ளது புனையும் கற்பனையே மிகுதி; இல்லது புனைதல் இங்குச் சிறிதும் இல்லை.

*''செய்யினின் நீலமணம் கமழும் திருவேதிகுடி''*
*''செய்த்தலை வாளைகள் பாய்ந்துகளும் திருவேதிகுடி''*
*''செய்யகமல மணம் கமழும் திருவேதிகுடி''*
*''அள்ளலம்புனல் ஆறை வடதளி''*

என்பன போன்று உள்ளன புனையும் திறமே அடிகளார் வாக்கிற் காணப்பெறும்.[154]

இலக்கியங்களில் இயற்கைப் புனைவு காணப்படுதல் இயற்கையே ஏனெனில் இயற்கையழகு உள்ளத்தை ஈர்க்கும் பெற்றியது; இயற்கையழகில் ஈடுபடாத மனிதர் இருக்க இயலாது. பரந்து விரிந்த நீலக் கடலையும், பச்சைப் பசேரென்று பசுங்கம்பளம் விரிந்தாற் போன்ற கழனிகளையும், விண்ணை யளாவிய மலைகளையும், வானைத் தழுவி வளர்ந்து நிற்கும் அடர்ந்த கானகத்தையும், கோல மதியையும், குளிர்நிலவையும் நெஞ்சு பறிகொடுக்காதோர் யாரே உள்ளனர்? இயல்பான மனிதர்க்கே இவ்வாறாயின் அறிவு முதிர்ந்து அருள்பெருகி, அருள் முருகி உலகின் தட்ப வெப்ப நிலைகளுக்கு மாறாத உள்ளம் படைத்து, எங்கும் எதிலும் இன்பம் கண்டு துய்க்கும் தனித்திறம் வாமந்த கவிஞர்க்கு இயற்கை என்றால் கொண்டாட்டம் தானே! இயற்கையிலே இறைவனைக்கண்டு துய்க்கும் தெய்வமாக் கவிஞர்கள் நம் தீந்தமிழ் நாட்டுப் பாவலர்கள். சங்ககாலத்து இயற்கைப் புனைவுத் தனித்திறம் வாய்ந்தது; இடைக்காலத்தே - இயற்கையின் நடுவே இறையொளிகாணும் அருட்பண்பு செழித்த காலத்தே திருமுறையாசிரியர்கள் திகழ்ந்தனர். தமிழ்நாட்டின் நானிலப் பாகுபாட்டில் அமைந்த சிவத்தலங்களைக் கால்நடையாகச் சென்று கண்ணாரக் களித்து வாயாரப் பாடிய வாய்மையாளர்கள் தேவார மூவர். ஆங்காங்குப் பொலிந்த இயற்கை வளங்கள் அவர்கள் திருப்பார்வை நெறிக்குத் தப்பவில்லை; இறைக்காட்சியைத் தமிழ்க் கவிதை ஆக்கியதுடன் இயற்கைக் காட்சியையும் கவியமுதூடே கலந்து பாடினர்.

இயற்கையில் இறையொளியைக் கண்டு வழிபடுவது ஒரு தனி நெறி. இயற்கை இறைவன் திருவீற்றிருக்கும் பெருமைசால் பீடமாகப் பிறங்குவது. இயற்கை உடல் எனின் இறைவன் உயிர்; இயற்கையின் இயக்கமே இறையொளி இயக்கம்.

ஆங்கிலக் கவிஞர் வேர்ட்ஸ்வொர்த்து இயற்கைக் கடவுள் நெறியில் தோய்ந்தவர்; அவருடைய கவிதைகள் அவர்தம் இயற்கை வழிபாட்டை — இயற்கையில் கலந்து அவர் பெற்ற பேரின்பத்தை எடுத்து வழங்கும் அநுபவப் பிழிவாக விளங்குகின்றன.[155] தென்னிசனும் இயற்கைப் பெருங்கவிஞரே; மலர் ஒன்றைக் கண்டு வியந்துரைக்கும் அவ்வருட்பாவலர், கடவுள், மனித இயல்புகளை அம்மலர்

கொண்டு உணர்ந்து நினைக்கின்றார், அவ்வாறே எழுதிய அவர்தம் கவிதைகள் ஆங்கில இலக்கியத்தில் சிறப்பிடம் பெற்றுத்திகழ் கின்றன.[156]

தேவார மூவரில் திருஞானசம்பந்தர் இயற்கைக் காட்சிகளைப் பெரிதும் புனைந்தவர் என்பது முன்னும் கூறப்பட்டது; சுந்தரர் அடுத்த இடம் பெறுகின்றார். அப்பரடிகள் இவ்வகையில் மூன்றாம் நிலையில் நிற்கின்றார். இதை வேறுவகையாகக் கூறினால், இயற்கைப் புனைவு பெருமழையாகத் திருஞானசம்பந்தர் திருப்பாட்டுள்ளும், மழையாகச் சுந்தரர் திருவாக்குள்ளும், தூறலும் தூவானமுமாக அப்பர் கவிதை யுள்ளும் உள்ளது என்று கூறல் தகும்.

சங்கப்புலவர்களின் இயற்கைப்புனைவை ஆராய்ந்த டாக்டர் மு. வரதராசனார், ''ஒரோவொரு திணையை—இயற்கை வளத்தைச் சிறப்புற எழுதும் சங்ககாலக் கவிஞர்கள் மனிதவாழ்வையும் இணைத்தே எழுதிக் களித்தனர். வாழ்வின் இருபகுதிகளாகிய போரும் காதலும் அவர்களுடைய இயற்கைக் கவிதைகளுடன் இனைந்தே வருகின்றன'' என்று எழுதுகின்றனர்.[157] தேவார மூவர் திருப்பாட்டுக்களிலோ இயற்கை வளத்தை இறையருள் வளத்துடன் இணைத்துச் செல்லும் இனிய போக்கினைக் காண்கின்றோம்; இதுவே வேறுபாடு. இவ்வாறே மேலைநாட்டுக் கீழைநாட்டு இயற்கை நெறிகளை ஒப்பிட்டு ஆராய்ந் தோர், திருஞானசம்பந்தர், வால்மீகி, காளிதாசர் முதலிய கீழை நாட்டுச் சான்றோர் இறைவன்பால் ஈடுபட்டு 'எல்லாம் அவனே' என்ற எண்ணம் கொண்டிருந்ததுடன், இறைவனே எல்லாவற்றையும் ஆட்டுவிக்கின்றான் என்பதிலே அசையாத நம்பிக்கை கொண்டிருந் தனர் என்றும், மேலைநாட்டவரோ இயற்கையளவிலேயே நின்றனர் என்றும் கூறுகின்றனர்.[158]

உலகக் கவிஞர்கள் உணர்ந்துரைக்கும் துறைகள், இயற்கையு லகும், மனித உலகும் ஆகிய இரண்டே என்பர் ஆங்கிலத் திறனாய் வாளரும்.

## 6.1 இயற்கைப்புனைவு - சிவஞானப்பின்னையார் :

திருஞானசம்பந்தரது இயற்கைப் புனைவு நான்கு திணைவகை யிலும் வருகின்றது. சங்ககாலத் திணை இலக்கியம் போல இப்புனைவு தனித்திறன் பெற்று விளங்குகின்றது. ஒரோவழித் திணைமயக்கமும்

உள்ளது. நானிலம் சார்ந்த தலங்களுக்கும் சென்று வழிபட்டவராதலின் அவ்வத்தலம் பற்றிய திருப்பாட்டுக்களில் அவ்வத்திணைப் புனைவு பொலிதல் இயல்பேயன்றோ?

மரக்கிளைகளில் தாவுகின்ற குரங்குகள் ஒன்று விட்டு ஒன்று பற்றுங்கால், இனிய மாம்பழத்தைப் பறித்து கொண்டு ஒருகிளையை வேகமாக விட்டுப் பிறிதொரு மரத்திற்கு தாவுகின்றதாம்; மாங் கொம்பு விரைவுடன் சென்று சூல்கொண்ட முகிலைத் தாக்குகின்றது, மழைத்துளிகள் பொலபொல என்று உதிர்கின்றன, அதற்கு அஞ்சிக் காட்டுப் பெண்மான்கள் சோலைகளில் ஓடிப்பாய்கின்றனவாம்; இது திருவண்ணாமலையில் ஒரு காட்சி:159

'தேமாங்கனி கடுவன்கொள விடுகொம்பொடு தீண்டித்
தூமாமழை துறுகல்மிசை சிறுநுண் துளி சிதற
ஆமாம்பிணை அணையும்பொழில் அண்ணாமலை
அண்ணல்'

பெண்யானையைப் பிரிந்த ஆண்யானைக் காலையெல்லாம் ஒலிக்கப் பிளறி அழைத்துப் பார்த்து, வரக் காணாமல் அப்படியே சாரலில் அயர்ந்து உறங்குகின்றதாம். அழுது இளைத்த சிறுகுழந்தைகள் அந்த வருத்தத்தில் உறங்கிவிடுவது உலகியல் அன்றோ?160

''பிழைத்த பிடியைக் காணாதோடிப் பெருங்கைமதவேழம்
அழைத்துத் திரிந்தங்குறங்கும் சாரல் அண்ணாமலையாரே''

ஆயன் ஒருவன் மேய்க்க ஓட்டிவந்த எருமைகளில் ஒன்றைக் காணவில்லை; வேய்ங்குழலை எடுத்து ஊதுகின்றான். அந்த இனிய இசைக் கேட்டவுடனே எல்லா மாடுகளும் வந்து திரள்கின்றனவாம். எருமைகளுக்கும் கூட இசையுணர்வு உண்டு; அதற்கு ஈடுபடும் நெஞ்சம் உண்டு என்ற உண்மையைச் சுட்டுவதற்காகவோ இந்நிகழ்ச்சியினைப் புனைந்து மகிழ்கின்றார் புகலிவேந்தர்?161

''கனைத்த மேதி காணாதாயன் கைமேற்குழலூத
அனைத்தும் சென்று திரளும் சாரல்''

திருக்காளத்திமலையில், கருமந்தியின் ஆட்டத்தினையும், கன்றினொடு விளையாடும் பெண்யானையின் விளையாடலையும் கண்டு

இன்புற்ற சிவஞான பிள்ளையார் அவற்றையும் தம் திருப்பாட்டுக் களில் இணைக்கின்ற அழகே தனி:[162]

''கல்லதிர நின்று கருமந்தி விளையாடு காளத்திமலையே''
''கன்றினொடு சென்றுபிடி நின்று விளையாடு காளத்தி
மலையே''

கடுவனோடு ஊடல் கொண்ட செம்முக மந்தி தன்னுடைய கைச்சிறுமகவினோடு வரைபாய்ந்து உயிர்நீக்க வரைமீது ஏறுகின்ற தாம்; சிராப்பள்ளிக் கற்பனை இது'.[163]

''கைம்மகவேந்திக் கடுவனொடு ஊடிக் கழை பாய்வான்
செம்முகமந்தி கருவரையேறும் சிராப்பள்ளி''

மலைமீது ஏறுகின்ற மந்திகள், ஊடல் கொண்டவை என்றும், உணர்த்த உணரா ஊடல் தீராதனவாய் உயிர் துறக்க முடிவு செய்தவை என்றும் இணைக்கின்ற திறம் இங்குக் காணலாம்.

செங்கழுநீர்ப்பூக்களைச் சூழ்ந்து பறந்து வந்த வண்டுகள் மகரந்தத்தில் மூழ்கி உருமாறி விட்டனவாம். செவ்வழிப் பண்ணை பாடிக்கொண்டே பறந்து செல்கின்றனவாம் அவை. திருவீழிமிழலைத் திருத்தலத்துக் காட்சிகளுள் ஒன்று இது:[164]

''சேறாடு செங்கழுநீர்த் தாதாடி மதுவுண்டு சிவந்தவண்டு
வேறாய உருவாகிச் செவ்வழிநற் பண்பாடும் மிழலையாமே''

இறைவனுடைய திருவடித் தாமரையிலே ஒன்றாகி இன்புற்றுத் தன்வயமிழந்த உயிர் எய்தும் 'ஆனந்த பரவச' நிலையையே இவ்வி யற்கைப் புனைவு குறியீடுகளால் உணர்த்துகின்றது என்று கொள்ள இடம் உள்ளது.

முகில்கள் முழவுகள்; நடமாடும் பெண்கள் மயில்கள்; பாடும் பின்னணி இசை வண்டிசை. இதனைக் கண்டு கொன்றை தன் மலர்களைப் — பொற்காசுகளைப் பரிசாக வழங்குகின்றதாம்; காந்தள் கையேந்திக் களிக்கின்றதாம்; இப்படி ஒரு கொடைக் காட்சி மிழலை யில்:[165]

'வரைசேரும் முகில் முழவ
மயில்கள்பல நடமாட வண்டுபாட
விரைசேர் பொன்னிதழிதர
மென்காந்தள் கையேற்கும் மிழலையாமே''

குருக்கத்திக் கொடிகளில், வண்டுகள் இசைபாட, மயில்கள் புறத்தே நடமாடப் புன்னை மரங்கள் பூக்களைப் பரிசுதரும் என்றும் பாடும் கற்பனை உண்டு:166

''மாதவி மேய வண்டிசை பாட மயிலாடப்
போதலர்செம்பொன் புன்னை கொடுக்கும் புறவம்மே''

''மானேறு கொல்லை மயிலேறி வந்து
குயிலேறு சோலை மருவிற்
தேனேறி மாவின் வளமேறியாடு
திருமுல்லை வாயில் இதுவே''

''மாதர் வண்டுதன் காதல்வண்டாடிய புன்னைத்
தாதுகண்டு பொழிலூடு மறைந்தூடு சாய்க்காடே''

''ஏழைவெண் குருகயலே இளம்பெடை தனதெனக் கருதித்
தாழைவெண் மடற்புல்கும் தண்மறைக்காடு''

''வங்கமேவு கடல்வாழ் பரதர் மனைக்கே நுனைமூக்கின்
சங்கம்ஏறி முத்தம் ஈனும் சண்பைநகராரே''

முதலிய புனைவுகள் உள்ளம் கவர்பவை.

## 6.2. அடிகளார் புனைவுகள்:

அப்பரடிகளார் திருவாக்கில், அரிசில், காவிரி, கெடிலம் முதலிய ஆறுகளைப் பற்றிய குறிப்புக்கள் வருமேனும் அவை புனைந்துரை வகையாற் சிறப்பித்துப் பாடப் பெறவில்லை; இயற்கைக் காட்சிகளைத் தம் திருப்பாட்டிற் பெரிதும் சேர்க்க அடிகளார் திருவுள்ளம் இடம் கொடுக்கவில்லை என்றே எண்ண வேண்டியிருக்கின்றது 167

''கோடல் கோங்கம் புறவணி முல்லைமேல்
பாடல் வண்டிசை கேட்கும் பைஞ்ஞீலியார்''

*"தழலும் தாமரையான்"*

*"மடையிடையே வாளை உகளும்"*

முதலிய அடிகளார் புனைவுகள், உவமைகள் முதலியவற்றின் அடிப் படையில் எளிய நடையினவாக உள்ளன.[168]

*"மடுக்களில் வாளைபாய வண்டினம் இரிந்த பொய்கைப்*
*பிடிக்களிறென்னத் தம்மிற் பிணைபயின் றணை வரால்கள்"*

*"செங்கயல் சேல்கள் பாய்ந்து தேம்பழ மினிய நாடித்*
*தங்கயம் துறந்து போந்து தடம்பொய்கை அடைந்து*
*நின்று"*

*"அருகெலாம் குவளைசெந்நெல் அகவிலை ஆம்பல்நெய்தல்*
*தெருவெலாம் தெங்கும் மாவும் பழம்விழும் படப்பை எல்லாம்*
*குருகினம் கூடி ஆங்கே கும்மலித் திறகுலர்த்தி*
*மருவலாம் இடங்கள் காட்டும் வலம்புரத் தடிகளாரே"*

*"பைங்கால் தவளை பறைகொட்டப் பாசிலை நீர்ப்படுகர்*
*அங்காற் குவளைமேல் ஆவி உயிர்ப்ப அருகுலவும்*
*செங்காற் குருகிவை சேரும் செறிகெடிலக் கரைத்தே"*

*"மாடேறி முத்தீனும் கானல் வேலி*
*மறைக்காட்டு மாமணிகாண் வளங்கொள் மேதி*
*சேடேறி மடுப்படியும் திருபுத்தூரில்"*

*"பொன்காட்ட கடிக்கொன்றை மருங்கே நின்ற*
*புனற்காந்தள் கைகாட்டக் கண்டு வண்டு*
*தென்காட்டும் செழும்புறவிற் திருப்புத்தூரில்"*

என்ற புனைவுகளைத் தவிர வேறு குறிப்பிட்டுச் சொல்லும்படியான விரிவான அமைப்புடையன இல்லை; இங்கு இறுதியிற் காட்டப்பெற்ற திருப்புத்தூர் இயற்கைப் புனைவு, தருமிக்குப் பொற்கிழி தந்த திரு விளையாடலைக் குறிப்பாக உணர்த்துவதாக உள்ளது. வண்டு பாடக் காந்தளுக்குக் கொன்றை பொன் வழக்கிற்று என்ற குறிப்பு, சிவபி ரான் திருப்பாட்டிற்குத் தருமி பரிசுபெற்ற திறத்தை அடிப்படையாகக் கொண்டதெனக் கருத இடமுள்ளதன்றோ?[168a]

## 6.3. நம்பியாரூரர் புனைவுகள்:

சுந்தரரது இயற்கைப் புனைவுகளும் பொதுநெறியில் இயங்குவன எனினும் சுட்டிச் சொல்லத்தக்க பகுதிகளும் உண்டு. எடுத்துக் காட்டுக்களாகச் சிலவற்றைக் காட்டலாம்:

பொழில்களில் ஆண் வண்டுகள் இசை கூட்டுகின்றன; பெண் வண்டுகள் அதற்கேற்பப் பண்களைப் பாடுகின்றன. இப்பின்னணி இசைக்கேற்ப மயில்கள் நடனம் ஆடுகின்றன. கரும்பின் அருகே கண் வளரும் குவளை மலர்கள் இவற்றைக் கண்டு களிக்கின்றன. தாமரைகள் முகமலர்கின்றன. கலயநல்லூர்க் கவிதையில் சுந்தரர் காட்டும் காட்சியின்பம் இது:[169]

"அரும்பருகே சுரும்பருவ அறுபதம் பண்பாட
அணிமயில்கள் நடமாடும் அணிபொழில்சூழ் அயலில்
கரும்பருகே கருங்குவளை கண்வளரும் கழனி
கமலங்கள் முகமலரும் கலயநல்லூர் காணே"

இவ்வாறே,

"சோலைமலி குயில்கூவக் கோலமயில் ஆலச்
சுரும்பொடு வண்டிசை முரலப்பசுங்கிளி சொல் துதிக்கக்
காலையிலும் மாலையிலும் கடவுளடி பணிந்து
கசிந்தமனத் தவர்பயிலும் கலயநல்லூர் காணே"

என்றும் பாடுவர்.[170]

"கரும்புனை வெண்முத்தரும்பி, பொன்மலர்ந்து, பவளக்
கவின்காட்டும் கடிபொழில்சூழ் கலயநல்லூர் காணே"

என்ற கவின்மிகு பகுதியும் கருத இனியது.[171]

திருப்புறம்பய வயல்களில் பூத்திருக்கும் தாமரை மலர்களின் மீது நண்டுகள் பள்ளி கொள்கின்றனவாம்; வாளைமீன்கள் அங்கும் மிங்கும் வயல்களில் பாய்ந்து திரிகின்றனவாம்;[172]

"துள்ளிவெள்ளின வாளை பாய்வயல்
தோன்று தாமரைப் பூக்கள்மேல்
புள்ளி நள்ளிகள் பள்ளி கொள்ளும்
புறம்பயம் தொழப் போதுமே"

சள்ளை என்னும் ஒருவகை மீன் வள்ளைக் கொடியில் பூத்திருத்த வெண்மையான மலரைக் குருகு என்று தவறாகக் கருதி அஞ்சியது; துள்ளியது; அத்துள்ளலால், வேறொரு வாளைமீன் வாயில் வீழ்ந்தது; வாழ்வை இழந்தது. இப்படி ஒரு காட்சியைத் திருவாஞ்சியத் திருப்பாட்டொன்றில் தீட்டுகின்றார் தம்பிரான்தோழர்:173

*''சள்ளை வள்ளையங்குருகு தானதுவாமெனக் கருதி*
*வள்ளை வெண்மலரஞ்சி மறுகிழர் வாளையின் வாயில்*
*துள்ளு தெள்ளுநீர்ப் பொய்கைத்துறைமல்கு*
*வாஞ்சியத்தடிகள்*
*வெள்ளை நுண்பொடிப் பூசும் விகிர்தம்*
*ஒன்றொழிகிலர்தாமே''*

உயிர்களின் உலகியல் மயக்கம் ஒன்றைப் பிறிதொன்றாகக் கருதி மயங்கும் மயக்கமாதலை இப்பாட்டில் குறிக்கின்றனரோ என்று எண்ணத் தோன்றுகிறது. 'பொருளல்லவற்றைப் பொருள் என்றுணரும், மருளானாம் மாணாப் பிறப்பு' என்பது குறள். இந்த மருள் உடைய உயிர்களின் நிலையைக் 'குறியீட்டு' வகையிற் சுட்டுவது இப்புனைவு என்று கொள்ளல் பொருத்தமாகப்படுகின்றது அன்றோ?174 எனவே அருளாளர்களின் புனைவு ஆழ்பொருள் நுட்பம் உடையது என்ற உண்மையும் புலப்படுகின்றது.

திரு வாஞ்சியப் பதிகத்தின் மற்றொரு பாட்டில், வண்டுகள் ஆசிரியர்களாகவும் குயில்கள் மாணாக்கர்களாகவும் உருவகம் பெற்றுச் சிறக்கின்றன. வயல்களில் பூத்திருக்கும் தேனை வண்டுகள் உண்டு விண்ணளவும் எட்ட இன்னிசைப் பண் ஒலிக்கின்றனவாம். அருகே உள்ள ஆழ நிழலில் உள்ள குயில்கள் அவைபோன்று தாமும் பயிலக் கற்கின்றனவாம். பழங்காலக் கல்வி முறை குருவும் சீடருமாக இசை பயின்ற இசைக் கல்வி நிலை இதன் வாயிலாக உணர்த்தப்படுகின்றமை தெளிவு:175

*''களங்க ளார்தரு கழனி அளிதரக் களிதரு வண்டு*
*உளங்களார் கலிப்பாடல் உம்பரில் ஒலித்திடுங் காட்சி*
*குளங்களால் நிழல்கீழ்நற் குயில்பயில் வாஞ்சியத் தடிகள்*
*விளங்கு தாமரைப்பாதம் நினைப்பவர் வினைநலிவிலரே''*

கல்லால் நிழற்கீழ் சனகாதி முனிவர் நால்வருக்குத் தென்முகக் கடவு

ளாய் நின்றவன் சிவபிரான்; அப்பிரானது தாமரைப்பாதம் நினைப்ப வராகிய சுந்தரர்க்கு இந்நெறியில் கற்பனை சென்றது இயல்பே யன்றோ?

எண்ணற்ற இயற்கைப் புனைவுகள் சுந்தரர் செந்தமிழில் திகழ்கின்றனவேனும், சிற்சிலவே இங்குச் சுட்டப்பட்டன. இயற்கைப் புனைவும், அகப்பொருள் நலமும் இணைந்த கவிதைகளும் பல உள்ளன; திணைவழியே மேற்கொள்ளும் விரிவான ஆய்விற்கு இவை இடம் தருவன. சோலையில் தலைவனைக் கண்டு மகிழும் தலைவி ஒருத்தியின் கூற்றாக வரும் ஒற்றியூர்ப் பாட்டுடன் இச்சிந்தனையை நிறுத்தித் தொடர்வோம்:[176]

"என்ன தெழிலும் நிறையும் கவர்வான்
புன்னை மலரும் புறவில் திகழும்
தன்னை முன்னம் நினைக்கத் தருவான்
உன்னப் படுவான் ஒற்றியூரே"

## 7.0. ஒலிநயம் - பண்ணமைதி :

"கவிதை என்பது இசை போன்றே கேட்கத்தகுந்த பெற்றி உடையததாதல் வேண்டும். செவிகட்குத் தக்க விருந்தாக அது அமைதல் வேண்டும். ஆதலின் கவிதையை மதிப்பிடும்போது செவிகட்கு இன்பியமையாமை தருவதே தக்கது அவ்வாறு நோக்கினால் கவிதை உரத்துப் படிக்கப் பெறல் வேண்டும். அங்ஙனம் படிக்கப் பெறுங்கால் இனிய உணர்வினை நெஞ்சில் விளைப்பது எதுவோ அதுவே உயர்கவிதை" என்று பி. எச். பி. இலபான் கருதுவர்.[177] தேவார மூவர் திருப்பாடல்கள் அனைத்தும் இசை நயம் உடையவை; தாள அறுதிக்கேற்ற யாப்பமைந்து சிறக்கும் திறம் உடையவை. பல்வேறு சந்த அமைப்புடன் கூடிய கலிவிருத்தங்கள் பெரும்பான்மையானவை; பல்வேறு சீர்களின் அமைப்பில் திகழ்பவை.

## 7.1. இசையும் இறைமையும்:

இசை இறைவனோடு ஒப்பிடத்தக்க 'இறைமை' உடையது. என்பது தேவார அருட்புலவர் மூவரின் கோட்பாடு என்பதற்கு எண்ணற்ற சான்றுகள் அவர்தம் பாட்டுக்களிலேயே விரவியுள்ளனர்;[178]

"பண்ணும் பதமேழும்பல வோசைத் தமிழவையும்
உண்ணின்றதொர் சுவையும் முறு தாளத்தொலி பலவும்

*மண்ணும் புனலுயிரும் வருகாற்றும் சுடர் மூன்றும்*
*விண்ணும் முழுதானானிடம் வீழிம்மிழலையே''*

*''கந்திருவம் பாட்டிசையிற் காட்டுகின்ற*
*பண்ணவன்காண் பண்ணவற்றின் திறலானான்காண்''*

*''எழிசையாய் இசைப்பயனாய்''*
*''பாட்டகத்து இசையாகி நின்றானை''*

இறைவன் இசை விருப்பினன்; பண்ணுடன் கூடிய பாடல்களை விரும்புவான் என்பதும் இம்மூவர் கொள்கை:[179]

*''பண்ணின் இன்மொழி கேட்கும் பரமன்''*
*''பண்ணிற் பாடல்கள் பத்திசெய் வித்தகர்க்கு*
*அண்ணித்தாகும் அமுது''*
*''பாட்டுக்கும் ஆட்டுக்கும் பண்பா போற்றி''*

இத்திருப்பாட்டுக்களைத் தாமே இசையுடன் பொருத்திப் பாடிப் பிறர்க்கும் வழிகாட்டினர் இப்பெருமக்கள். வாயாரப் பாடி இப்பதிகங்களைத் தொழுதலே தக்கது என்பது இவர்கள் கருத்து. இவற்றை எழுதியும், சொல்லியும், கேட்டும், கற்றும் தொண்டர்கள் எய்தும் பயன்களை ஆங்காங்குத் தெளிவாக்கியுள்ளனர். சம்பந்தரும் சுந்தரருமே இவ்வகையில் பேருண்மைகளைப் புலப்படுத்துகின்றனர்.[180]

## 7.2. தேவாரப் பண்கள்:

தமிழ்ப் பண்கள் நூற்று மூன்றில், தேவாரத் திருப்பதிகங்களில் இருபத்து மூன்று பண்கள் அமைந்துள்ளன:
(1) செவ்வழி (2) தக்கராகம் (3) நேர்திறம்-புறநீர்மை (4) பஞ்சமம் (5) காந்தாரம் (6) நட்டபாடை (7) அந்தாளிக்குறிஞ்சி (8) பழம் பஞ்சுரம் (9) மேகராகக் குறிஞ்சி (10) கொல்லிக்கௌவாணம் (11) பழந்தக்கராகம் (12) குறிஞ்சி (13) நட்டராகம் (14) வியாழக் குறிஞ்சி (15) செந்திறம்-செந்துருத்தி (16) தக்கேசி (17) கொல்லி (18) இந்தளம் (19) காந்தாரபஞ்சமம் (20) கௌசிகம் (21) பியந்தை (22) சீகாமரம் (23) சாதாரி. நேரிசை, நந்திசை, பிறழ் - என்பன நூற்றுமூன்று பண்களில் அடங்காதனவாய்த் தேவாரத் திருமுறைகளில் காணப்படுபவை.

### 7.2.1; தேவாரப்பண்கள் மூவர் வழிப்பாகுபாடு:

இவற்றுள் திருஞானசம்பந்தர் 23 பண்களும், சுந்தரர் 17 பண்களும், அப்பர் 10 பண்களும் அமைத்துப் பதிகப் பாட்டுக்களை யாத்துள்ளனர். தம்முடைய பதிகங்களைப் 'பாடல்' என்றே பெரும்பாலும் குறிக்கின்றனர்.[181]

''அடிகள்தம் அருளை முறைமையாற்சொன்ன பாடல்''
''ஆய்ந்த பாடல்''
''இசை பாடல்''
''இசையொடு பாடல்''
''இன்னிசையெனப் பரவு பாடல்''
''ஈசன் கழல்சேர் பாடல்''
''ஒலி பாடல்''
''குறிகலந்த இசை பாடல்''
''சந்த மலி பாடல்''
''பாமாலைப் பாடல்''

என்றெலாம் வரும் சம்பந்தர் தொடர்கள் இவ்வாறு சிந்திக்க வைக்கின்றன.

''வன்றொண்டன் வாய்மொழி பாடல் பத்து உன்னி
இன்னிசை பாடுவார்''
''பாடல் தங்கையாற்றொழுது தம்நாவின்மேற் கொள்வார்''
''ஊரன் தமிழ்மாலை செம்மாந்து இருந்து திருவாய்
திறப்பார்''
''நற்றமிழ்மாலை சொல்லியவே சொல்லி ஏத்துகப்பானை''
''பத்தும் இவை பத்திசெய்து நித்தம் பாடவல்லார்''
''நன்மாலை பாடுமின் பத்தருளீரே''
''ஊரன் சந்தம் இசையொடு வல்லார்''

என்பன முதலிய சுந்தரர் தொடர்களும் ஒப்பிடற்குரியன.[182]

இறைவனுடைய காட்சியிலும், காட்சியின்பத்திலும் திளைத்த பொழுதெல்லாம் எல்லையற்றுப் பெருக்கெடுத்த இன்ப வெள்ளமே பண்ணோடு பொருந்திப் பைந்தமிழாக வெளிப்பட்டது. ''கவிதை என்பது, சிறந்த பேரின்பம் பொருந்திய உள்ளங்களின், சிறந்த பேரின்பப் பதிவுதான்'' என்று செல்லி என்ற பெருங்கவிஞர் கூறுவது

நம் அருளாளர்களின் பண்கலந்த பாடற்குப் பெரிதும் பொருந்து கின்றன.[183]

## 8.0. உணர்வுகளின் பின்னல்:

கவிதைக்கு அடிப்படை உணர்வே என்பர். பேச்சு வடிவத் தில் ஆற்றல் வாய்ந்ததாக உள்ளது கவிதையே என்றும், அதன் பிறி வாக உள்ளது பேச்சு அன்று உணர்வே (emotion) என்றும் ஆங்கில கவிதை இயல்பை ஆழ்ந்து ஆராய்ந்த எல். எஸ். ஆரிசு என்ற அறி ஞர் கூறுவது மெய்மையே ஆகும்.[184] ஆழ்ந்த உணர்வு பீறிட்டெ ழும் பொதே அழகிய கவிதைகள் பிறக்கின்றன. கவிஞன் அறிவு நிலையிலிருந்து உணர்வு நிலைக்கு வரும்போது எண்ணற்ற கவிதை மலர்களைப் பூக்க வைக்கின்றான். தேவார மூவர் பத்தி உணர்வின் வயப்பட்டே தம் கவிதைச் செல்வங்களை வாரிவழங்கினர். சேக்கிழா ரது பெரிய புராணத்தில் இதற்கு எண்ணற்ற இடங்களைச் சான்றுக ளாகக் காட்டலாம்.

தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் கூறும் நகை முதலிய மெய்ப்பாடுகள் இப்பெருமக்கள் திருப்பாட்டுக்களில் ஆங்காங்குக் காணப்படுகின்றன.

மெய்யுணர்விலே தோய்ந்திருந்த மேலோராகிய மூவர் என் பதைச் சுவையுணர்விலேயும் திளைத்துத் தம் அருங்கவிதைகளை அருளியுள்ளனர் என்பது அவர்கட்குக் குறைவாகிவிடாது. 'எந்நா ளும் தானாக விளங்கிய கடவுளைத் தானாக அறிவதே மெய்யுணர்வு; எந்நாளும் நம்முன்னே பதிந்து கிடந்த சுவையினை உள்ளுக்குள்ளே ஒளிர்வதாக உணர்வதே சுவையுணர்வு'' என்பர் என் மதிப்பிற்குரிய பேராசிரியரும், இப்பல்கலைக்கழக முதல் துணை வேந்தருமாகிய டாக்டர். தெ.பொ.மீனாட்சிசுந்தரனார்.[184A]

*''உணர்வினின் வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்''* என்ற பவணந்தியார் வரையறை நினைக்கத்தக்கது. இறையுணர்வு ததும்பிய இவ்வருளாளர்கள் திருப்பாட்டுக்களில் சுவையுணர்விற்கும், விருந்திற்கும் பஞ்சமில்லை.

## 8.1. நகைப்பு:

முக்கண்ணனாகிய சிவபிரான், செம்பாதியை உமையம்மைக்கு

கொடுத்து விட்டமையால், ஒன்றரைக்கண்ணன் ஆயினான் என்று அப்பரடிகளார் பாடும்போது நகைச்சுவை தோன்றுகின்றதன்றோ?[185]

''இன்றரைக் கண்ணுடையார்
எங்குமில்லை இமயமென்னும்
குன்றரைக் கண்ணன் குலமகட்
பாவைக்குக் கூறிட்ட நாள்
அன்றரைக் கண்ணும் கொடுத்து
உமையாளையும் பாகம் வைத்த
ஒன்றரைக் கண்ணன் கண்டீர்
ஒற்றியூர் உறை உத்தமனே''

''கங்கையைச் சடையுட் கரந்த கண்ணுதற் பெருமானே! அக் கள்ளத்தை உமை நங்கை அறியிற் பொல்லாது காண்'' என்று அடிகளார் நயமுடன் நவில்வது நகைச்சுவை தழுவிய நற்கவி அன்றோ?[186]

''வலம்வந்த மடவார்கள் நடமாட முழவதிர, மழையென் றஞ்சிச் சிலமந்தி அலமந்து மரமேறி முகில்பார்க்கும் திருவையாறே'' என்ற கவிதைப் பகுதியில், குரங்கின் செயல் கண்டு குறுமுறுவல் எய்திக் குறும்பு கொப்புளிக்கப் பாடிய சிவஞானப் பிள்ளையாரின் சிரிப்புநலம் தெளிவாகின்ற தன்றோ?[187]

''கைம்மகவேந்திக் கடுவனோடு ஊடிக் கழைபாய்வான் செம் முகமந்தி கருவரையேறும் சிராப்பள்ளி'' என்பதும், மந்தி செயல் காட்டி நகைமுகம் காட்டும் ஞானசம்பந்தர் நன்மொழியாகும்.[188]

சுந்தரர், தோழராதலின் இறைவனுடன் நேருக்குநேர் நகைச் சுவை ததும்ப உரையாடும் நற்றிறம் பெற்றவர். மூவரில் நகை உணர்வு மிகுதியாகக் காணப்படுவது சுந்தரர் செந்தமிழிலேயே ஆகும்[189]

''ஒற்றியூரென் றூனத்தினால்து தானோ
அற்றப்பட ஆரூரதென் றகன்றாயோ
எற்றால் தனியே யிருந்தாய் எம்பிரானே''

''திருக்கைகளால், பிடிப்பது பாம்பன்றி இல்லையோ
எம்பிரானுக்கே''

''கூடினாய் மலைமங்கையை; நினையாய் கங்கை ஆயிரமுகம்
உடையாளைச்
சூடினாய் என்று சொல்லிய புக்கால் தொழும்பனேனுக்கும்
சொல்லலுமாமே''

''கூறையும் சோறும் தந்தாளகில்லீர்
உமக்கு ஆட்செய அஞ்சுதுமே''

''சொல்லுவதென் னுனைநான் தொண்டை வாய்உமை
நங்கையை நீ புல்கி இடத்தில் வைத்தாய்க் கொரு
பூசல் செய்தாருளரோ''

''பாரூர் அறிய என்கண் கொண்டீர் நீயே பழிப்பட்டீர்''

''மகத்திற் புக்கதோர் சனி எனக் கானாய்''

''மாதர் நல்லார் வருத்தம் அது நீயும் அறிதியன்றே''

''மானைத்தோலொன்றை உடுத்துப் புலித்தோல் பியற்குமிட்டு
யானைத்தோல் போர்ப்ப தறிந்தோமேல் நாமிவர்க்
காட்படோமே''

''முடவரலீர் இடரிலீர் முருகன் பூண்டி மாநகர்வாய்
இடவம் ஏறியும் போவதாகில் நீர், எத்துக்கிங்கிருந்தீர்
எம்பிரானீரே''

''எல்லைக் காப்பதொன் றில்லையாகில்
எத்துக்கிங்கிருந்தீர் எம்பிரானிரே''

''வாளாங்கிருப்பீர் திருவாரூரீர் வாழ்ந்து போதீரே''

''கங்கையாளேல் வாய்திறவாள் கணபதியேல் வயிறுதாரி
அங்கை வேலோன் குமரன்பிள்ளை, தேவியார் கோற்றட்டி
யாளார்
உங்களுக்காட் செய்யமாட்டோம் ஓணகாந்தன் தளியுளீரே''

என வரும் சுந்தரரது பாடற்பகுதிகள், உரையாடல் முறையில் ஆருயிர்த்தோழருடன் நகைச்சுவை ததும்பப்பேசி மகிழும் பாங்கில் அமைந்துள்ளமை காணலாம். 11 பதிகங்களே முழுமையும் ஏறத்தாழ இத்தகு குறிப்புக்களுடன் விளங்குவது தம்பிரான் தோழர் தமிழின் புதுமை என்று கூறலாம் 190

## 8.2. அழுகை:

அழுகை என்ற மெய்ப்பாடு அப்பரடிகள் திருப்பாட்டுக்களிலேயே மிகவும் காணப்படுகின்றது சமணசமயத்தில் சென்று பின் மீண்டவராதலின் தம்முடைய சிறுமைக்கு இரங்கிக் கசிந்து கசிந்துருகும் திறம் எப்போதும் காணலாம். தொடக்கப் பதிகமே சூலைநோயால் அழுது புலம்பும் திறம் உடையது 191

அப்பரடிகள் திருவுருவைச் சேக்கிழார் படம் பிடிப்பது போன்று காட்டும் பாடல்களில், கண்ணீர் வாரத் திகழும் வண்ணத்தையே விளக்கினர்:192

''தூய வெண்ணீறு துதைந்தபொன் மேனியும் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவருசிந்தையும், நைந்துருகிப்
பாய்வதுபோல்அன்பு நீர்பொழிகண்ணும், பதிகச்செஞ்சொல்
மேயசெவ்வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே''

என்பது சேக்கிழார் தீட்டிய சொல்லோவியம். சிவஞானமுனிவர் விளக்கமும் இவ்வாறே அமைந்துள்ளமை ஒப்பிடத்தக்கது.193

''இடையறாப் பேரன்பும், மழைவாரும் இணைவிழியும்,
உழவாரத்திண்
படையறாத் திருக்கரமும், சிவபெருமான் திருவடிக்கே
பதித்த நெஞ்சும்
நடையறாப் பெருந்துறவும், வாகீசப் பெருந்தகைதன்
ஞானப்பாடல்
தொடையறாச் செவ்வாயும், திருவேடப் பொலிவழகும்
துதித்து வாழ்வாம்''

''பழியுடை யாக்கைதன்னில் பாழுக்கே நீரிறைத்து
வழியிடை வாழமாட்டேன் மாயமும் தெளியகில்லேன்

அழிவுடைத் தாயவாழ்க்கை ஐவரால் அலைக்கப்பட்டுக்
கழியிடைத் தோணிபோன்றேன் கடவூர்வீரட்டனீரே''

''கால்கொடுத் தெலும்பு மூட்டிக் கதிர்நரம் பாக்கையார்த்துக்
தோலுடுத்துதிரமட்டித் தொகுமயிர் மேய்ந்தகூரை
ஓலெடுத் துழைஞர் கூடி ஒளிப்பதற் கஞ்சுகின்றேன்''

''நின்றன் நாமம் உரையாதுயிர் போகப் பெறுவேனாகில்
உறுநோய் வந் தெத்தனையும் உற்றாலென்னே''

''பித்தனேன் பேதையேன் பேயேன் நாயேன்
பிழைத்தனகள் எத்தனையும் பொறுத்தா யன்றே
இத்தனையும் எம்பரமோ ஐய, ஐயோ!
எம்பெருமான் திருக்கருணை இருந்தவாறே''

''குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும்பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன்''

முதலிய அடிகளார் திருப்பாடற் பகுதிகளை, அழுகை வெளிப்பாடுகள் என்றே உரைத்திடலாம்.[194]

திருஞானசம்பந்தர் திருப்பாட்டுக்களில் அடியார்களது பத்தி கனிந்த வழிபாடு பற்றிய பகுதிகளில் 'அழுகை' விளங்குகின்றது. உலக நிலையாமை குறித்த திருப்பாட்டுக்களில் கனித்த நெஞ்சம் தெளிவாகின்றது.

சுந்தரர் செந்தமிழில், கண்ணை இழந்து பாடும் பதிகங்கள் அனைத்தும் அழுகை ததும்பியவையாக உள்ளன.[195]

''அடியேன் படுதுயர் களையாய் பாசுபதா பரஞ்சுடரே''

''உற்றநோய் உறுபிணி தவிர்த்தருளாய்
ஒற்றியூர் எனும் ஊர் உறைவானே''

''எனை அஞ்சல் என்றருளாய்
ஆரெனக்குறவு அமரர்கள் ஏறே''

''ஒருவன் கோல்பற்றிக் கறகற இழுக்கை ஒழித்துநீ
அருளாயின செய்யாய்''

''மூன்றுகண் உடையாய் அடியேன் கண்கொள்வதே
கணக்கு வழக்காகில்
ஊன்றுகோல் எனக் காவதொன் றருளாய்''

'அகத்திற் பெண்டுகள் நானொன்று சொன்னால்,
அழையேல் போ குருடா' எனத்தரியேன்
முகத்திற் கண்ணிழந் தெங்ஙனம் வாழ்கேன்
முக்கணா! முறையோ? மறையோதீ!''

''நாய்தான் போல நடுவே திரிந்தும்
உமக்காட் பட்டார்க்கு
வாய்தான் திறவீர் திருவாரூரீர் வாழ்ந்து போதீரே''
''எற்றுக் கடிகேள் என்கண் கொண்டீர் நீரேபழிப்பட்டீர்''

### 8.3. பெருமிதம்:

பெருமிதம் என்ற வீரச்சுவை ததும்பும் பாடல்கள் மூவர் திருப்பதிகங்களிலும் காணப்படுகின்றன. அப்பரடிகளின் பதிகங்களில், அழுகை, பெருமிதம் என்ற இரண்டு உணர்வுகளே மிகுந்து தோன்றுகின்றன. சம்பந்தர் பதிகங்களில், பெருமிதம், உவகை, பத்தி ஆகியவை பேரிடம் பெறுகின்றன சுந்தரர் பதிகங்களில், நகை, அழுகை, பெருமிதம் ஆகியவை பேரிடம் பெறுகின்றன. இத்திருப்பதிகங்களை ஒப்பிடும் போது இவ்வாறு முடிவு போக்கத் தோன்றுகின்றது. சமண பௌத்தர்களை இழிவு படுத்தி உரைக்கும் பகுதிகளும், அவற்றிற் காணப் பெறும் புனைவுகளும் இளிவரலுக்கு எடுத்துக் காட்டுக்களாக நிற்கின்றன. மூவரும் இறையருள் இன்பத்தை வியந்தேத்தும் எல்லாப் பாட்டுகளிலும் உவகைச் சுவையே உள்ளீடாகி நிற்கின்றது.

அப்பரடிகளது மறுமாற்றத் திருத்தாண்டகம், இறைவன் மெய்யடியார்களுக்கு இருக்கும் பெருமிதம், மன்னவனையும் கூட மதிக்காத பேராண்மையை அடிப்படையாகக் கொண்டது:196

''நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை யில்லோம்

*ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்*
*இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை"*

*"என்றும்யாம் யாவர்க்கும் இடைவோ மல்லோம்*
*இருநிலத்தில் எமக்கெதிரா ஆரும் இல்லை*
*சென்றுநாம் சிறுதெய்வம் சேர்வோ மல்லோம்*
*சிவபெருமான் திருவடியே சேரப்பெற்றோம்"*

இறைவனது மெய்யடியாராகிவிட்ட அடிகளாரது இரண்டாம் பதிகம் இதுவாகும். பெருமிதம் ததும்பும் வீர முழக்கமாகவே இது விளங்குகின்றது. சேக்கிழார் திருக்கூட்டச் சிறப்பில், அப்பருடைய ஆன்மீக வீரத்தை எண்ணியே பின்வரும் இரு பாடல்களைப் பாடியிருக்க வேண்டும் என்று கருதலாம்:[197]

*"ஆரம் கண்டிகை ஆடையும் கந்தையே*
*பாரம் ஈசன் பணியலது ஒன்றிலார்*
*ஈர நெஞ்சினர் யாதும் குறைவிலார்*
*வீரம் என்னால் விளம்பும் தகையதோ"*

*"பூதம் ஐந்து நிலையிற் கலங்கினும்*
*மாதொர் பாகன் மலர்த்தாள் மறப்பிலார்*
*ஓது காதல் உறைப்பின் நெறிநின்றார்*
*கோதிலாத குணப்பெருங் குன்றனார்"*

அடிகளாரது ஞானவீரம் இத்தகைய பெருமித அடிப்படையில் பிற பாடற்பகுதிகளிலும் இனிது விளங்கும்:[198]

*"உடையார் ஒருவர் தமர் நாம்*
*அஞ்சுவதியாதொன்றும் இல்லை அஞ்சவருவதும் இல்லை"*

*"மண்பாதலம் புக்கு மால்கடல் மூடி வற்றேழுலகும்*
*விண்பால் திசைகெட்டு இருசுடர் வீழினும் அஞ்சல்நெஞ்சே'*

*"வானம் துளங்கிலென் மண் கம்பமாகில் என்"*

*"தப்பிவானம் தரணி கம்பிக்கிலென்*
*அப்பனார்உளர் அஞ்சுவ தென்னுக்கே"*

திருஞானப்பிள்ளையார் தம்முடைய உறுதி தோன்ற உரைக்கும் கீழ்க்கண்ட பாடற்பகுதிகளில் பெருமிதம் நுட்பமாக விளங்கிடக் காண லாம்:[199]

*''வாழினும் சாவினும் வருந்தினும் போய்*
*வீழினும் உன்கழல் விடுவே னல்லேன்''*

*''தும்மலோ டருந்துயர் தோன்றிடினும்*
*அம்மலரடியலால் அரற்றா தென்நா''*

*''உண்ணினும் பசிப்பினும் உறங்கினும் நின்*
*ஒண்மலரடியலால் உரையாது என்நா''*

*''திருந்தடி உளங்குளிர்ந்த போதெல்லாம்*
*உகந்துகந் துரைப்பனே''*

**8.4. வெகுளி:**

வெகுளிச்சுவை தேவாரப்பதிகங்களில் உண்டு; இடித்துரைக்கும் பண்பு உயர் கவிஞரிடத்தே என்றும் உண்டு. சமுதாயத்திற்கு வழி காட்ட வேண்டிய பொறுப்பு உள்ளவர்கள் உயர் பெருமக்கள். திருவள்ளுவர், 'அவியினும் வாழினும் என்', 'வையத்து அலகையா வைக்கப்படும்', 'செத்தாரின் வேறல்லர்', 'செத்தாருள் வைக்கப்படும்' என்றெல்லாம் கூறுமிடங்கள், 'குணமென்னும் குன்றேறி நின்றார்க்கும் வெகுளி' வரும் என்பதற்குச் சான்றுகள்.[200]

சம்பந்தர். 'ஒப்பில்லாக் கள்ளத்தார்', 'கலதிகள்', 'கள்ளமார் மனத்துக் கலதிகள்', 'நீசர்', 'பாவியர்', 'மாபாவிகள், 'பேதையர்', 'பேய்கள்', 'மூடர்' என்றெல்லாம் சமணர்களை வெகுளி தோன்ற உரைக்கும் பகுதிகள் அவர் திருவாக்கிற் காணப்படுவன. அப்பரடிகள், 'கடையர்', 'கல்லாத வன்மூடர்', 'சமண்நீசர்', 'சமண்பிரட்டர்', 'நீசர்கள்', 'பாவகாரிகள்', 'மொட்டர்', 'மொண்ணர்' முதலிய சொற் களாலும் தொடர்களாலும் சுட்டும் குறிப்புக்கள் வெகுளி அடிப்படை யில் விளைந்தவையே. சுந்தரர், 'குண்டரைக் கூறையின்றித் திரியும் சமண் சாக்கியப் பேய்', 'குண்டிகைப் படப்பினில் விடக்கை ஒழித்த வர்', 'நன்மை ஒன்றிலாத்தேரர்', என்றெல்லாம் பாடும் தொடர்கள் புறச்சமயத்தினர் மீது கொண்ட வெகுளிச் சீறல்களே.

ஒன்பான் சுவைகளும் மூவர் திருப்பாட்டுக்களிலும் ஆங்காங்கு விரவினவேனும், அனைத்திற்கும் ஊடுகருவியாக இழைவது பத்திச் சுவையே என்பது மறக்க வியலாதது.

## ௯.0. சொல்லாட்சித் திறன்:

ஓர் இலக்கியத்தை அளவிடும் இன்றியமையாத கருவியாக இருப்பது அதன் சொல்லாட்சி. இலக்கியம் ஒரு மனத்திலிருந்து மற்றொரு மனத்திற்குச் செல்லுவதற்குத் தக்க கருவியாக இருப்பது சொல்லாக இருத்தலின், சொற்கோவையை ஆயும்பகுதி நடைபற்றி ஆய்வதற்கு அடித்தளமாக அமைவது என்பர் எடித் ரிக்கர். சொற்கோவை ஆய்வு பல உண்மைகளைத் தெரிந்து கொள்ளுவதற்குத் துணை புரியும்:

(1) அரிய சொற்கள் (2) அரிய பொருளில் கையாளப்பட்ட சொற்கள் (3) புதிதாகப் படைக்கப்பட்ட சொற்கள் (4) தனித்தன்மையுடன் கையாளப்பட்ட சொற்கள் (5) அயல்மொழிகளினின்றும் கடனாகப் பெறப்பட்ட சொற்கள் (6) இலக்கியங்களில் அதுவரை பயன்படுத்தப் படாத சொற்கள் (7) வட்டாரச் சொற்கள் (Rare words, words used in rare senses, coined words, words used in a unique sense, words borrowed from foreign languages, slang and other words not before used in Literature, Dialect words and forms) முதலியவற்றைத் தெளிவுபடுத்துவதற்குச் சொற்களே துணை புரிகின்றன.[202]

மூவர் தேவாரச் சொற்கோவை ஆய்வில் புலனாகும் எல்லா உண்மைகளையும் சுட்டுவதற்கு இவ்வுரை இடமுமன்று; சிறப்பியல்புகள் சிலவற்றையே நடைநலம் காணக் குறிப்பிடல்தகும்.

## ௯.1. ஞானவேந்தர் சொற்கோவையில்:

திருஞானசம்பந்தர் கையாண்டுள்ள அருஞ்சொற்கள் எண்ணற்றவை:[203] அநாயம், அயம். ஆய்த்து, ஆயோ, இசங்கும், இழக்கோ, உகவை, உறைப்பு, ஊனிகள், ஓவுளார், கயன், கல்லவடம், கில்லா, குந்தளம், சரக்கு, சாவம், சும்மை, செடிச்சியர், செதுமதி, தவந்த, துவனி, தெள்ள, நயங்கு, படுதம், புரோதாயம், மறுக்கு, முட்டிக்கை, மேதகம், வேழ்வி முதலியவற்றைக் குறிப்பிடலாம். அசைச் சொற்கள் பலவும் காணப்படுகின்றன. பழந்தமிழ் இலக்கியச் சொற்கள் பலவற்றையும்

காணலாம் இமையா முக்கண், மழலைமுடிவு, விழவார்மறுகு பெரியோர் ஏத்தும் பெருமான், அரவிரிகோடல், பறைக்கடபேய், கையதோர் சுரந்தையான், ஒருதோழந்தேவர், குடையும் பிச்சமும், பிச்சக்குடை நீழற் சமணர், செம்பைச்சேர் இஞ்சி, கண்டல்வேலி, அகரமுதலானை —முதலிய சொற்றொடர்கள் பழந்தமிழ் இலக்கிய வளம் கொண்டவை.

அத்தர், உடன் தோன்றினர், கணவன், தந்தை, தம்பி, தாதையார், தாரம், தேவி, பிள்ளை, புத்திரர், மகள், மகன், மருகன், மருமான், மாமடி, முதலிய உறவுமுறை அரியசொற்கள் குறிப்பிடத் தக்கவை.

வடசொற்கள் பெரும்பான்மையும் தமிழ்வடிவம் கொண்டே ஆளப்படுகின்றன; ஒரோவழி அவ்வாறே ஆளப்படுதலும் உண்டு. அர்த்த நாரீசுவரர் – ஈரெழிற்கோலம் என ஒருபுடைமொழி பெயர்ப்பு ஆட்சியும் உண்டு. பழிபாவம், மாடமாளிகை, நரைதிரை, மருந்து மந்திரம், முதலிய பேச்சுவழக்குத் தொடர்கள் காணப்பெறும்.

செய்யிய என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம் ஆளப்பெற் றுள்ளது. அத்தர்-அச்சர், நத்தி-நச்சி, நித்தம்-நிச்சம், மொய்த்த மொய்ச்ச, அணைத்த-அணைச்ச, வைத்த-வச்ச —முதலிய தகர சகர மொழிமாற்றப் பேச்சுவழக்குச் (Palatization) சொற்கள் காணப் பெறு கின்றன. மைந்தன்-மைஞ்சன், மஞ்சன் மாற்றமும் உண்டு. உரைப் பனகன், சிறுமிமார்கள், பலர்கள் முதலிய விகுதி மேல் விகுதிச் சொற் கள் உள்ளன. வேள்வி-வேழ்வி பேச்சுவழக்குச் சொல்லாட்சியும் பிள்ளையார் வாக்கில் உள்ளது. (கேள்வி-கேழ்வி இன்னும் பேச்சு வழக்கில் உள்ளது ஒப்பிடத்தக்கது) பைய' என்ற வட்டாரச்சொல் (மெல்ல என்ற பொருளில் பாண்டி நாட்டில் வழங்குவது) வழக்கும் உண்டு. 'ஒன்றுதல்' என்பதற்கு எதிர்மறைச் சொல்லாக 'அன்றுதல்' படைக்கப்பட்டது. நன்னுலகு, நீணுதல் (நீளுதல்) துறவி இறவி, முதலிய புதிய புணர்ச்சி வேறுபாடுகளும் இடம்பெறுகின்றன.

## 9.2.சொல்வேந்தர் சொற்கோவையில்:

அப்பரடிகள் திருவாக்கில் வரும் அருஞ்சொற்களும் பல:[204] அகம்படி, அரட்டு, அருக்கம், அல்லகண்டம், ஆமனம், இடைக்கலம், இரண்டாட்டம், இறுவாய், எழுவாய், என்னன், ஏமாப்பு, ஏழி, ஓரோதம், ஓலக்கச் சூளைகள், கரோடி, களேபரம், காறை, கும்மலி

குமண்டை, கொண்டி, கொய், கொன்னை, சங்காத்தி, சூட்சியம், தங்கன், தடுகுட்டம், தமிழன், துச்சு, தொட்டிமை, (தோட்டிமை) நிதனம், நோதங்கம், பப்பு, பரமாணு, பரமாகாசம், பாவன், பாழிமை, புரோதாயம், மருக்கம், நீராவி, மாத்தன், முனகு, மூவன், மேகாசம், மோழைமை, வட்டணை, வசி, வரிமுரி, வெள்ளடை, வேளி முதலிய வற்றைக் குறிப்பிடல் தகும் அடிகளார் பயன்படுத்திய சொற்களில் பெரும்பாலானவை தேர்ந்த தமிழ்ச்சொற்களே; வடசொல்லாட்சி மிகக் குறைவு. வடசொல்லாக்க விதிகளைப் பின்பற்றி — தொல்காப்பிய நெறியில் தமிழ்ப்படுத்தியே ஆளுகின்றார். 'மொழித்தூய்மை' அடிக ளார் விழைந்த ஒன்று.

வேதக் கருத்துக்களைத் தம் பாட்டுக்களில் ஆங்காங்கு ஆண் டுள்ள சிறப்பு அடிகளார்க்கு உண்டு. 'தமிழ்மொழித் தலைவர்', 'கோதில் மொழிக் கொற்றவனார்'—என்று சேக்கிழார் அடிகளைப் பாராட்டி உரைக்கும் தொடர்கள் புனைந்துரை வகையான் அமைந் தவையல்ல, மெய்ம்மையானவையே என்பது அடிகளாருடைய சொற் கோவையைக் கூர்ந்து நோக்கினாற் புலப்படும் உண்மை.

அகண்டன், அப்பர், அப்பாலைக்கப்பாலான், அமலன். அருந் துணை, அன்னன், அறவன், ஆரியன், ஆவன், எண்குணத்தார், குற்றமில்லி, கருத்தான், கருவன், ஐயன், ஒருவன், நாவலன், நித்த மணாளன், நடுதறி, கண்ணியன், மணவன், மணவாள நம்பி, பொது வின் நாயகன், பழம், புவன், மன்மணி, மிக்கான், மிகைச்சுடர், வையன் விழுமியான், விழுப்பொருள்—முதலிய பலதொடர்கள், சொற்களில் அடிகளார் புதுவது புனைந்த பல இருப்பதை உணர்வோர் அறிவர்.

அடிகளாரது மொழிநடை இலக்கணக் கூறுகள் தனித் தன்மை பெற்றவை; தனி ஆய்வுக் களம் காண ஏற்றவை.

பொருள் நோக்கம் ஒன்றே கருதுவர்; எதுகை முதலியவற்றை இவ்வுண்மை நோக்கிற்காக மாற்றிடவும் செய்வர்.

விகுதிமேல் விகுதி, மாயிருஞாலம் போன்ற புணர்ச்சி வேறு பாடும் உண்டு. பேச்சுமொழிச் செல்வாக்கும் இடம் பெற்றுள்ளது; அதனால் எளிமை. இனிமை குன்றாதபடித் தம் கவிதையை அமைத்த தனித்தன்மை உடையவர் அடிகள். பழகுதமிழ்ச் சொற்களே மிகுதி

யாகப் பயிலுவதனால், எல்லோர்க்கும் ஓதி, உணர்ந்து, உருகுவதற்கு ஏற்ற சொன்னடை உடையது நாவரசர் நற்றமிழ் என்று கூறலாம்.

'அதம்பழத்துருவு', 'இடிக்குரல் வெள்ளெருது', 'நெய்தற்குருகு பிள்ளையென்று எண்ணி', 'புன்னை ஞாழல்', 'கொன்றைத்தாரன்' 'மல்லல் மாஞாலத்து' முதலியவை பழந்தமிழ் இலக்கியத்துள் இடம் பெற்றவை.

அப்பன், அம்மை, கொழுநன், மாமன், மாமி, பெண்டிர், மக்கள் முதலிய உறவுமுறைப் பேச்சுவழக்குச் சொற்கள் உள்ளன. கொன்றை-கொன்னை, ஒன்று-ஒண்ணு, நான்கு-நாலு, ஐந்து-அஞ்சு, முதலிய சொல்வழக்குகளும் உண்டு.

உறுதிபடைத்த சொல்லாட்சி வன்மை உடையவர் அடிகள் என்பதும், தமக்கு என ஒருதனிச் சிறப்பியல்புடைய இலக்கணநடைக் கூறுகள் உடையவர் என்பதும் தெளிவுறுத்தப்பட்ட உண்மைகள். 'சொற்குறுதிக்கு அப்பரெனச்சொல்' என்ற திறனாய்வுக் குறிப்பு நூற்றுக்கு நூறு விழுக்காடு உண்மை.

## 9.3. சுந்தரர் சொற்கோவையில்:

சுந்தரர் சொற்கோவையில் இட்டளம், மோறாந்து, சலச்சலம், சிம்மாந்து, சிம்புளித்து, இட்டிது, சாய், பூணி, ஆயம், நள்ளி, தியக்காது, அக்கிரமம், ஒறுவாய், சுவண்டு, பயிக்கம், நுங்கி, கட்டம், பட்டி, கூழை, கோடரம், மான்னு, சோத்தான், கிறி, கல்லை, சிட்டு, நெண்டி, நாதியன், உடல்விருத்தி, மகிமை முதலிய பல அரிய சொற்கள் காணப் பெறுகின்றன.[205]

சுற்றுமுற்றும், உச்சம்போது, எத்தால், பொத்தின நோய், மாத்து, வெட்டென முதலிய பேச்சுவழக்குச் சொற்களை நயம்பெறக் கையாண்ட பெருமை நாவலூரர்க்கு உள்ளது.

'கிலாய்ப்பன்' - அங்கலாய்ப்பன் என்ற சொல்லின் மரூஉ வடிவாக இருக்கக் கூடும். 'இசுக்கு' - இழுக்கு என்பதன் வட்டாரப் பேச்சு வடிவாதல் கூடும்; அம்மை என்றசொல்லை 'அமைதி' என்ற பொருளில் ஆளுவது தனித்தன்மை உடையது. 'அலவலையேன்'- விடாதுபேசுகின்றவன் என்றபொருளில் தம்மையே குறித்துக்கொள்ளும்

சொல் புதியது ஐயனே-'அயனே'என்று ஆக்கியது தனித்தன்மைஉடையது. 'சிலர்கள்', 'தமிழ்கள்', 'சுனைநீர்கள்', 'நீர்கள்', 'பிழைத்தனகள்' என்ற விகுதிமேல் விகுதிவழக்கும் உள்ளது. அஞ்சு, உசிர் (உயிர்) நஞ்சி (நைந்து) வைச்சே–முதலிய பேச்சு வழக்கும் சொற்களும் ஆளப்பெற்றுள்ளன.

உரையாடல் முறையில் அமைந்த செய்யுட்கள் பலவாக உள்ளமையின், சொற்கள் அதற்கேற்ப எளிமை, சுருக்கம், திட்பம், நயம் முதலிய இயல்புகள் உடையனவாக அமைந்துள்ளமை குறிப்பிடத் தக்கது.

பழந்தமிழ் இலக்கியச் சொற்களும் இடம் பெற்றுள்ளன. அப்பர், சம்பந்தர் தேவாரச் சொற்களையும், தொடர்களையும், அவ்வாறே எடுத்தாண்ட அருமை உடையவர் நம்பியாரூரர்.

## 10.1. தொல்காப்பிய வனப்புக் கோட்பாடுகளும் மூவர் தமிழும்:

தொல்காப்பியர், செய்யுள் அழகாகக் கூறிய 'வனப்பு' மூவர் தேவாரத்து அமைந்துள்ள திறத்தைத் தக்க எடுத்துக் காட்டுக்களால் குறித்தல், இவ்வுரையின் நிறைவுப்பகுதியாக அமையும் பெற்றி உடையது.[206] ஆம்; உறுப்புக்கள் பலவும் ஒன்று சேர்த்தமைந்த செய்யுள் அழகு பெறுவதையே 'வனப்பு' என்பர் தொல்காப்பியர்; "வனப்பு என்பது பெரும்பான்மையும் பல உறுப்பும் திரண்டவழிப் பெறுவதோரழகு" என்பது பேராசிரியர் உரை விளக்கச் சூத்திரமாக உள்ளது "பல செய்யுளும் உறுப்பாய்த்திரண்டு பெருகிய தொடர்நிலையதே வனப்பென்னும் பெயர்ப்பகுதி வகையான் ஏற்பது" என்ற அவர்தம் விளக்கம் தெளிவானது. தனிச்செய்யுளிலேதான் வனப்பு வரக்கூடும் என்பது இளம்பூரணர்கருத்து. இவ்விருவரதுகருத்துக்களையும்ஒப்பிட்டாராய்ந்த தமிழ்த்திறனாய்வாளர் டாக்டர் தமிழண்ணல், 'இவ்வனப்புக்களிற் சில தனிசெய்யுட்களில் காணக் கூடியனவாகவும், சில காப்பியங்களிலே பொருந்திக் காணத் தக்கனவாகவும் உள்ளன என்பது உண்மையே' என்று எழுதுவது தேர்ந்த முடிவாகவே உள்ளது.[207]

'சமுதாய சோபை' என்று நச்சினார்க்கினியரும் சிந்தாமணி உரையில் எழுதுவர். மாத்திரை முதலிய இருபத்தாறும் செய்யுளிலக்கணத்தைத் தனியே நோக்கிக் கூறியவை; வனப்பு எட்டும் முழு

நோக்காகக் கூறியவை என்று கொள்ளலாம். தனிநிலைச் செய்யுள், தொடர்நிலைச்செய்யுள், இரண்டிற்கும் உரிய இவ்வனப்புக்கள் எட்டையும், மூவர் திருவாக்கிற் கண்டு மகிழ்தல் இலக்கியத் திறன் பற்றிய சித்தனைக்கு அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என்பன எண்வகை வனப்புகள்.

### 10.1.1. அம்மை:

*“சின்மென் மொழியாற் சீர்புனைந்து யாப்பின்*
*அம்மைதானே அடிநிமிர்பின்றே”*

என்பது தொல்காப்பிய நூற்பா.[208] சிலவாய மெல்லிய சொற்களுடன் அடிவரையறை கூடாதது அம்மை. அமைதிப்பட்டு நிற்றலின் அம்மையென்றாயிற்றென்பர் பேராசிரியர். சுருங்கக் கூறல், மெல்லிசை வண்ணத்தில் அமைதல், ஆகியவை இவ்வியல்போடமைந்த அழகு என்று கூறலாம்; திருக்குறளைத் தனித்திறம் வாய்ந்த இவ்வழகிற்கு எடுத்துக் காட்டலாம்.

மூவர் தமிழுள், இவ்வெழில் திகழும் பாடல்கள் பலவாகும்; எனினும் இரண்டொரு மேற்கோள்களைச் சுட்டுவது பொருந்தும்:[209]

*“அண்ணல் ஆலவாய்*
*நண்ணி னான்றனை*
*எண்ணியே தொழத்*
*திண்ணம் இன்பமே”*

*“அம்பொ னாலவாய்*
*நம்பனார் கழல்*
*நம்பி வாழ்பவர்*
*துன்பம் வீடுமே”*

*“ஆடலேற்றினான்*
*கூடலாலவாய்*
*பாடியே மனம்*
*நாடி வாழ்மினே”*

*“ஞால நின்புகழே மிகவேண்டும் தென்*
*ஆலவாயில் உறையும் எம் ஆதியே”*

''சிவனுறைதரு சிவபுர நகரைக்
கவுணியர் குலபதி காழியர்கோன்
தவமல்கு தமிழிவை சொல்லவல்லார்
நவமொடு சிவகதி நண்ணுவரே''

''பவள மேனியர் திகழுநீற்றினர் பட்டினத்துறை பல்லவனீச்
சரத்து
அழகராயிருப்பார் இவர்தன்மை அறிவாரார்''

''நல்லானை நான்மறையோடு இயலாறங்கம்
வல்லானை வல்லவர்பால் மலிந்தோங்கிய
சொல்லானைத் தொன்மதிற் காழியே கோயிலாம்
இல்லானை ஏத்தநின்றார்க்குளது இன்பமே''

''அரனை உள்குவீர்
பிரமனூருள் எம்
பரனையே மனம்
பரவி உய்மினே''

''நறவமார் பொழிற்
புறவநற்பதி
இறைவன் நாமமே
மறவனெஞ்சமே''

''இடரினும் தளரினும் எனதுறுநோய்
தொடரினும் நினகழல் தொழுதெழுவேன்''

''முன்னையார் மயில் ஊர்தி முருகவேள்
தன்னையாரெனில் தானோர் தலைமகன்
என்னை யாளும் இறையவன் எம்பிரான்
பின்னையாரவர் பேரெயிலாளரே''

''பிடியதனுருவுமை கொள மிகுகரியது
வடிகொடு தனதடி வழிபடுமவரிடர்
கடிகணபதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில் வலி வலம் உறை இறையே''

'வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயது எல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே''

முதலிய எண்ணற்ற இனிய சம்பந்தர் திருப்பாடல்கள் அம்மை அழகுச் செம்மை சான்றவை.

அப்பரடிகளார் அருளிய திருக்குறுந்தொகை முழுதும் அம்மைக்கு இனிய எடுத்துக்காட்டுக்களே ஆம்.[210]

''உள்ளம் உள்கி உகந்து சிவனென்று
மெள்ள உள்க வினைகெடும் மெய்ம்மையே
புள்ளினாற் பணி புள்ளிருக்கு வேளூர்
வள்ளல் பாதம் வணங்கித் தொழுமினே''

குறுந்தொகை அனைத்தும், எளிமை, இனிமை, சுருக்கம், மென்மொழி யுடைமை ததும்பிய கருவூலங்கள்.

''செய்யார் மேனியனே திருநீல மிடற்றினனே
மையார் கண்ணி பங்கா மத யானை உரித்தவனே
கையார் சூலத்தினாய் திருக் கற்குடி மன்னி நின்ற
ஐயா எம்பெருமான் அடியேனையும் அஞ்சலென்னே''

''கடிதாய்க் கடற்காற்று வந்தெற்றக் கரைமேல்
குடிதான் அயலே இருந்தாற் குற்றமாமோ
கொடியேன் கண்கள் கண்டன கோடிக் குழகீர்
அடிகேள் உமக்கார்துணையாக இருந்தீரே''

முதலிய நம்பியாரூரர் பாடல்களில் 'அம்மை' வனப்பு அமைந்துள்ளமை தெளிவு.[211]

### 10. 1. 2. அழகு :

''செய்யுள் மொழியாற் சீர்புணர்ந்து யாப்பின்
அவ்வகை தானே அழகெனப் படுமே''

இது தொல்காப்பியர் நூற்பா.[212] செய்யுட்குரிய சொற்களுடன் பொலிவு

பெற யாக்கப்படுவது; திரிசொற் பயிலாதது என்பது பேராசிரியர் விளக்கம். எண்ணற்ற பாடல்கள் இவ்வனப்பு வாய்த்தனவாகத் தேவாரத்துள் உள்ளன:[213]

*''குறவிதோள் மணந்த செல்வக் குமரவேள் தாதை என்னும்*
*நறவிள நறுமென் கூந்தல் நங்கையோர் பாகத்தானைப்*
*பிறவியை மாற்றுவானைப் பெருவேளூர் பேணினானை*
*உறவினால் வல்லனாகி உணருமா றுணர்த்துவேனே''*

*''நீற்றானை நீள்சடைமேல் நிறைவுள்ளதோர்*
*ஆற்றானை அழகமர் மென்முலையாளையோர்*
*கூற்றானைக் குளிர்பொழிற் கோழம்ப மேவிய*
*ஏற்றானை யேத்துமின் நும் இடர் ஏகவே''*

*''நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன் நாவிதனுக்கரையன்*
*நாளைப் போவானும்*
*கற்ற சூதன் நற்சாக்கியன் சிலந்தி கண்ணப்பன் கணம்புல்லன்*
*என் றிவர்கள்*
*குற்றம் செய்யினும் குணமெனக் கருதும் கொள்கை கண் நின்*
*குரைகழலடைந்தேன்*
*பொற்றிரண்மணிக் கமலங்கண் மலரும் பொய்கைசூழ் திருப்*
*புன் கூருளானே',*

அப்பர், சம்பந்தர், சுந்தரர் பாடிய இத்திருப்பாட்டுகளில் இத்திறம் காண்க.

### 10. 1. 3. தொன்மை :

*''தொன்மைதானே*
*உரையொடு புணர்ந்த பழமை மேற்றே''*

இது தொல்காப்பியர் வகுத்த வரையறை.[214] புகழோடு பொருந்திப் போந்த பழமைத்தாகிய பொருள்மேல் வருவன. உரைநடை விரவிப் பழமையதாகிய கதைப்பொருள் தழுவி வருவன. பாண்டவசரிதம்,இராம சரிதம் முதலியன பற்றிய குறிப்புக்களாக மூவர் திருப்பாடல்களில் வரும் அனைத்தும் இவ்வனப்புடையனவாகக் கருதலாம்.

''செங்கண்மால் சிலைபிடித்துச் சேனையோடும்
சேதுபந்தனம் செய்து சென்று புக்குப்
பொங்குபோர் பலசெய்து புகலால் வென்ற
போரரக்கன் நெடுமுடிகள் பொடியாய் வீழ''
அப்பர் திருவாக்கு இது.[215]

''ஆரநீரோ டேந்தினான் ஆனைக்கா'

என்பதனுள் சம்பந்தர் காட்டிய வரலாறு மிகப்பழமையானது.[216]

''அருந்தவமா முனிவர்க்கு அருளாகி ஓர்
ஆலதன்கீழ், இருந்தறமே புரிதற்கு இயல்பாகியது''

என்ற சுந்தரர் வாக்குச் சிவபிரான் அறம் உரைத்த தொல்வரலாறு.[217] எண்ணற்ற இடங்கள் மூவர் திருப்பாட்டுள் தொன்மையான வரலாற்றுச் சுவடுகளை உடையன.

## 10.1.4. தோல் :

''இழுமென் மொழியால் விழுமியது நுவலினும்
பரந்தமொழியான் அடிநிமிர்ந் தொழுகினும்
தோலென மொழிப தொன்னெறிப் புலவர்''

என்பது[218] தமக்கும் தொன்மையான புலமை மரபு காட்டி ஆசிரியர் தொல்காப்பியர் கூறும் 'தோல்' வரையறை. 'மெல்லென்ற சொல்லால் அறம் பொருள் வீடென்னும் விழுப்பொருள் பயப்பச் செய்வன' என்பது பேராசிரியர் விளக்கம் விழுமிய பொருளாக விளங்கும் இறைவன் ஒருவனையே பாடுபொருளாகக் கொண்ட, மூவர் திருப்பாட்டுக்களும், 'இழும்' (Rhythm-ஒலிநயம்) பண்ணொடு குழைந்த யாப்பமைதி கொண்டனவாய் இவ்வனப்பிற்கு முற்றும் இலக்கியம் ஆவன. 'அடிநிமிர்ந்து ஒழுகும்' திறம் மட்டும் தேவாரத்தில் இல்லை, ஏனைய மூன்று திறங்களும் உள்ளன.

## 10.1.5. விருந்து :

''விருந்தே தானும்
புதுவது கிளந்த யாப்பின் மேற்றே''

என்பது, தொல்காப்பியரின் பரந்து விரிந்த பெருந்தன்மையைக் கொண்டு, எதிர்கால இலக்கியங்கள் அனைத்தையும் நோக்கிய மிக உயர்ந்த வரையறை;[219] கடிசொல் இல்லைக் காலத்துப்படினே'' என்பதனோடொத்த தனித்திறம் உடைய நூற்பா இது.[220]

''முன்புள்ளார் சொன்ன நெறிபோய்ப் புதிதாகச் சொன்ன யாப்பின் மேலது'', ''புதிதாகப்பாடும் தொடர்நிலை பேற்று'' என்ற இளம்பூரணர், பேராசிரியர் உரைக்குறிப்புக்கள் சிந்திக்கத்தக்கன; கருத்து, யாப்பு-புதிதாகத் தோன்றும் அனைத்தும் இதில் அடங்கும்.

அப்பரடிகளார் படைத்துள்ள 'தாண்டகம்' என்ற புதியபடைப்பு எழுத்து வருக்க மோனை, பழமொழியாப்பு, திருவங்கமாலை முதலிய அனைத்தும் விருந்து வனப்பின. சம்பந்தர் படைத்த மாலை மாற்று, திருத்தாளச்சதி, மாவின் பாய்ச்சல், ஏகபாதம் முதலிய மூல இலக்கியங்கள் (சேக்கிழார் சுட்டும் தொடர் இது) அனைத்தும் இவ்வனப்பினையே உடையன. சுந்தரர் பாடியருளிய, கொச்சக ஒருபோகு வகையிலமைந்தவையும், சிந்து, கண்ணிகட்கு மூலவிதையாகிய பா வடிவங்களும் இவ்வகை வனப்பிற்குத் தக்க எடுத்துக்காட்டுகள்.

இயைபு; இழைபு என்பனவற்றிற்கு ஏற்ற இலக்கிய அமைப்பு தேவாரத் திருப்பதிகங்களுக்கு அமைந்திலதாதலின் அவ்வனப்பிற்கு ஏற்ற மேற்கோள்களைக் காண இயலவில்லை.

### 10. 1. 6. புலன் :

*''சேரி மொழியாற் செவ்விதிற் கிளந்து*
*தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றிற்*
*புலனென மொழிப புலனுணர்ந்தோரே''*

என்பர் இலக்கணப் பேராசான் [221] வழக்குச் சொற்களுடன் தொடுக்கப்பட்டு ஆராய வேண்டாமல் பொருள் எளிமையாகத் தோன்றுதலே புலன் ஆம்; 'சேரி மொழி யென்பது பாடி மாற்றங்கள்' என்பது பேராசிரியர் விளக்கம்.

நாடகச் செய்யுள் நடையில் அமைந்தனவும், பேச்சு வழக்குப் பெற்றியமைந்தனவுமாகிய மூவர் திருப்பாட்டுக்கள் அனைத்தும் இவ் வனப்பிற்கு ஏற்ற எடுத்துக்காட்டுகள் ஆகும்.

*''பத்தூர் புக்கிரந்துண்டு பலபதிகம் பாடிப்*
*பாவையரைச் சிறிபேசிப் படினாடித் திரிவீர்*
*செத்தார்தம் எலுபணிந்து சேவேறித் திரிவீர்*
*செல்வத்தை மறைத்து வைத்தீர் எனக்கொருநாள் இரங்கீர்*
*முத்தாரம் இலங்கிமிளிர் மணிவயிரக் கோவை*
*அவைபூணத் தந்தருளி மெய்க்கினிதா நானும்*

கத்தூரி, கமழ்சாந்தும் பணித்தருள வேண்டும்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந்தீரே''

என்பதும்,[222] இது போன்ற பிறபாடற் பகுதிகளும் நம்பியாரூரர் பாட்டில், 'புலன்' வனப்புப் பொலிகின்ற இடங்கள்.

''மானினேர் விழி மாதராய்! வழுதிக்கு மாபெருந்தேவி! கேள்!
பானல் வாயெரு பாலன் ஈங்கிவன் என்று நீ பரிவெய்திடேல்!
ஆன்மாமலை ஆதியாய இடங்களிற் பல அல்லல் சேர்
ஈனர்கட்கெளியேன் அலேன் திருவாலவராயன் நிற்கவே''

என்பதும்,[223] இது போல்வன பிறவும் சம்பந்தர் திருவாக்கில் 'புலன்' புலனாகும் பொன்னுரைப்பாட்டுக்கள்.

''அங்கத்தை மண்ணுக் காக்கி
ஆர்வத்தை உனக்கே தந்து
பங்கத்தைப் போக மாற்றிப்
பாவித்தேன் பரமா! நினைச்
சங்கொத்த மேனிச் செல்வா!
சாதல் நாள், நாயேன்- 'உன்னை
எங்குற்றார்' என்ற போதால்
'இங்குற்றேனே' என் கண்டாயே''

என்பதும்,[224] இது போன்ற பிற பாடற்பகுதிகளும், நாவரசர் நற்றமிழில் புலன் என்ற 'வனப்பு'ப் பொன்போற் பொதிந்துள்ள பகுதிகள்.

இவ்வாறு, 'எழுத்து, சொல், அடி, பொருள், புனைவு, முறை, வடிவம் என்பனவற்றால் இலக்கியம் பெறும் அழகு' பற்றி எடுத்துரைத்த தொல்காப்பியரது கோட்பாட்டிற்குத் தக்க எடுத்துக்காட்டுக்களை மூவர் திருப்பாட்டில் முற்றும் காண முடிகின்றது. இலக்கியப் பார்வை என்ற பொதுநோக்கில், இவ்வகை ஒப்பீடு 'பழமை மரபு கெடாத பத்திப் பனுவல்களே மூவர் தேவாரப் பதிகங்கள்' என்ற பேருண்மையை எடுத்துக் காட்டுவதாக உள்ளது.

## 11. குறிக்கோள் சுட்டும் விழுப்பம் :

இலக்கியம் குறிக்கோளைச் சுட்டுவதாக இருக்க வேண்டும் என்பது பழந்தமிழ்க் கோட்பாடு. ''செய்யுளியலில், ஆசிரியர் தொல்காப்பியர் பாவகைகளைக் கூறி, உடனே அதன் பலனாகிய குறிக்

கோளையும் குறிப்பிடுகின்றார்; "அந்நிலை மருங்கின் அற முதலாகிய, மும்முதற்பொருட்கும் உரிய என்ப" என்று விதிக்கின்றார்.[225] பாக்களின் குறிக்கோள் அறம்பொருளின்பமாகிய மும்முதற் பொருள்களையும் நல்குவதேயாகும்" என்ற சங்க இலக்கிய ஒப்பீட்டாசிரியரின் கருத்து இங்கு நினைக்கத்தக்கது.[226] மூவர் தேவாரம், அருளிலக்கியப்; தமிழகத்தின் இடைக்கால அருள்வீழ்ச்சி பொங்கிப் பெருகி வடிவெடுத்த பத்திப்பனுவல் தேக்கம்; இறையருளைப் பெற்றுத் திளைத்த பேரருளாளர் மூவர்; உலகிற்கென்றே வழங்கிய பாட்டிலக்கியம்; தமிழகத்தின் சிற்றூர்களின் தெருக்களில் — ஊரின் மையமாக விளங்கிய திருக்கோயில்களில் எழுந்த நாட்டுப்புற இலக்கியம். அதிலே அந்த ஆசிரியர்களின் பத்தி மட்டும் மலரவில்லை; அவர்களது நம்பிக்கைகள் மலர்ந்திருக்கின்றன; அக்காலமக்களின் பழக்கவழக்கங்கள், சமூக அமைப்பு, சமுதாய நாகரிகம், ஒற்றுமை நிரம்பிய வாழ்வு — முதலிய எல்லாம் அவற்றைச் சார்ந்து மலர்ந்திருக்கின்றன. "குறிக்கோள் இலாது கெட்டேன்" என்று பேசும் அப்பரடிகள் சுட்டுவது யாது?[227] மனிதப் பிறவிக்கு, மக்கட் சுட்டு வேண்டுவோர்க்குக் குறிக்கோள் வேண்டும் என்பது அன்றோ? "பெண்ணில் நல்லாளொடும் பெருந்தகை இருந்தது; மண்ணில் நல்லவண்ணம் வாழலாம்; வைகலும் எண்ணில், நல்ல கதிக்கு யாதும் ஓர் குறைவு இலை" என்று சம்பந்தர் கூறும் செய்தி,[228] மனிதவாழ்விற்கு நம்பிக்கை ஒளியை ஊட்டி நன்னெறிப்படுத்துவதே அன்றோ?" இம்மையே தரும் சோறும் கூறையும்; ஏத்தலாம் இடர் கெடலுமாம். அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு யாதும் ஐயுறவு இல்லையே" என்று சுந்தரர் சொல்வது,[229] இறையடி பரவி இவ்வுலக நல்வாழ்வும் மறுமை இன்பமும் பெறலாம் என்பது தானே![230]

## 12. முடிவு :

சுருங்கக் கூறினால், பாடுபொருள், பாடப்பட்டவடிவம், பாடப்பட்ட முறை, உணர்வு, ஒலிநயப்பண்ணமைதி, சொல்லாட்சி முதலிய அனைத்துறுப்புக்களாலும் முழுமைபெற்ற இலக்கியத்திறன் வாய்ந்ததே தேவார இலக்கியம் என்று கூறலாம்; அவ்வகையில் இந்த ஆய்வுரை, உருவமைந்த மாளிகைக்கு ஒரு திருவமைந்த வாயில் போன்ற பார்வையே எனக்கூறி அம்மாளிகைக்குள் உணர்வுகொண்ட அனைத்து உள்ளங்களையும் ஆற்றுப்படுத்தி அமைகின்றேன்.

## குறிப்புகள்

1. தண்டியலங்காரம் — வேற்றுமையணி — எடுத்துக்காட்டுவெண்பா
2. மெய்கண்டசாத்திரம் — திருவுந்தியார் — பா
3. சுந்தரர் தேவாரப்பதிகங்கள் — 62-8.
4. Helen Gardener, "The Business of Criticism", p. 10.
5. திருத்தொண்டர் புராணம், திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணம் — பா.1
6. "A Poetry of revolt against moral ideas is a poetry of revolt against life; a poetry of indifference towards moral ideas is a poetry of indifference towards life" — Mathew Arnold, Essay on Wordsworth, "Essays in Criticism" (2nd Series)
7. டாக்டர் தமிழண்ணல், "சங்க இலக்கிய ஒப்பீடு" (1979) பக். 23.
8. வெண்பாப் பாட்டியல், பா
9. James Reeves, Preface to "The Poets World"
10. L. Abercrombie, "The Theory of Poetry," p. 27
11. நன்னூல் — நூற்பா —
12. தொல்காப்பியம் — நூற்பா — 238 (செய்யுளியல்)
13. W. H. Hudson, "An Introduction to the study of Literature pp. 64-65.
14. Sri Aurobindo, "The Future Poetry", (1953) p. 33.
15. L. Abercrombie, "The Theory of Poetry" (1926) p. 27.

15A. "Poetry above is considered to be the linguistic means of communicating the perception of divinity of revelation" — Ribin Skelton, "The Poetic Pattern" (1956) London, p. 197.

16. தொல்காப்பியம்—நூற்பா 28 (புறத்திணையியல்)

17. இராமாநுச நூற்றந்தாதி, பா 40

18. Dr. M. A. Dorairangasamy, "The Religion and Philosophy of Tevaram", Vol. IV, p. 1245.

19. திருஞானசம்பந்தர் தேவாரப் பதிகங்கள்; 1, 56, 60, 63, 73, 76, 159, 256, 303, 321, 358, 359, 362, 374; இவற்றுள் 256, 329, என்ற எண்ணுள்ள இருபதிகங்களும் அகப்பொருள் நெறியில் அமையாதன என்று கூறவும் இடமுண்டு; தனிப் பாடல் 242-7.

20. திருநாவுக்கரசர் தேவாரப் பதிகங்கள்; 4-6, 12, 97, 5.29 40, 45, 53; 6-9, 13; 5 7- 6-10 ; 5-46- 1-5; 5-64-6; 5-66-9; 5-88-4-9; 6-25-7; 63-35-3-7; 6-45-1,4, 8;6-58-3.7.

21. சுந்தரர் தேவாரப் பதிகங்கள்; 36,37

22. திருஞானசம்பந்தர்—1-1.

23. தொல்காப்பியம்—நூற்பா 1 (களவியல்)

24. மேற்படி — நச்சினார்க்கினியர் உரைப்பகுதி

25. திருஞானசம்பந்தர் — 1-1.

26. ஆ. சிவலிங்கனார், "சைவசித்தாந்த சாத்திர நூல்கள்", தமிழ் இலக்கியக் கொள்கை (5) (1980) பக். 243.

27. திருஞானசம்பந்தர் — 362-2; 362-1; 73-10; 73-8; 362-3; 56-5.

28. முத்தொள்ளாயிரம்—பா 102

29. குறுந்தொகை—பா 25.

30. திருநாவுக்கரசர்—159-3; 12-2; 142-8; 248-1; 226 8; 12-6; 12-10.

31. சுந்தரர் — 91-4; 91-2; 93-5.

32. திருநாவுக்கரசர் —258-8.

33. முத்தொள்ளாயிரம் — பா. 73

34. திருநாவுக்கரசர் — 201-8; 177-4.

35. நாச்சியார் திருமொழி — பா 4 உரைப்பகுதி.

36. தொல்காப்பியம் — நூற்பா 2 (பொருளியல்)

37. திருஞானசம்பந்தர் — 60, 321.

38. மேற்படி — 60-1; 60-2; 60-3; 60-5; 60-6 60-8; 60-9.

39. தொல்காப்பியம் — நூற்பா 9 (பொருளியல்)

40. திருநாவுக்கரசர் — 12-1; 12-8; 12-3; 12-3.

41. மேற்படி — 201-4.

42. சுந்தரர் — 37-10; 37-3.

43. தொல்காப்பியம் — நூற்பா 1463 (செய்யுளியல்)

44. சங்க இலக்கிய ஒப்பீடு, பக். 35

45. திருநாவுக்கரசர் — 222-1; 248-3.

46. மேற்படி — 142-5; 6-1-10; 201-5; 201-6; 128-5; 153-1.

47. சுந்தரர் — 36-1; 36-4; 36-10.

48. திருஞானசம்பந்தர் — 321-9; 358-3.

49. திருநாவுக்கரசர் — 238-7.

50. மேற்படி—சி. அருணைவடிவேலர் உரைப்பகுதி.

51. சங்க இலக்கிய ஒப்பீடு, பக். 36

52. திருஞானசம்பந்தர் — 242-7.

53. தொல்காப்பியம் — நூற்பா 13 (பொருளியல்)

54. திருஞானசம்பந்தர் — 303-8; தொல்காப்பியம் நூற்பா 52 (பொருளியல்)

55. தொல்காப்பியம் — நூற்பா 52 (பொருளியல்) உரைப்பகுதி.

56. சங்க இலக்கிய ஒப்பீடு, பக். 108
57. திருஞானசம்பந்தர்—114, 257, 245
58. தொல்காப்பியம்—நூற்பா 148 (செய்யுளியல்)
59. மேற்படி — நச்சினார்க்கினியர் உரைப்பகுதி.
60. பன்னிரு திருமுறை வரலாறு — பக் 336-337.
61. திருஞானசம்பந்தர் — 148
62. பெரியபுராணம்—குங்குலியக் கலயநாயனார் புராணம் — பா 32
63. மேற்படி — பா 1607
64. யாழ்நூல், பக் — 217
65. க. வெள்ளை வாரணனார், பன்னிரு திருமுறை வரலாறு, பக் 330
66. பெரியபுராணம் — திருஞானசம்பந்த நாயனார் புராணம்— பா 276, பா 277.
67. திருஞானசம்பந்தர்—325, 326
68. திருஞானசம்பந்தர்—127
69. மேற்படி—277
70. மேற்படி—375
71. மேற்படி—276
72. மேற்படி—206
73. மேற்படி—210
74. மேற்படி—126
75. சுந்தரர்—81
76. மேற்படி—45
77. திருஞானசம்பந்தர்—75-79, 120-125, 127 இன்ன பிற.
78. மேற்படி—116, 117, 215-1, 314-320

79 மேற்படி—138-2, 211-1, 214-4, 214-6 இன்னபிற.

80. தொல்காப்பியம், நூற்பா 1222, இளம்பூரணர் உரைப்பகுதி.

81. திருஞானசம்பந்தர்—204-8; 48-3; 48-5; 311-10; 44-9; 271-4; 256-4; 187-11; 230-1; 152-1; 129-7; 216-7; 327-5; 132-5; 215-1; 136-3; 138-3.

82. மேற்படி—107-9; 26-6; 77-1; 172-3; 366-5; 123-2; 215-10; 224-8.

83. மேற்படி—123-3; 158-5; 216-7; 181-1.

84. மேற்படி—373-10; 230-4; 247-7; 126-8.

85. மேற்படி—260-4; 187-11; 176-6; 44-6; 364-3.

86. மேற்படி—41-4; 260-3; 123-1; 68-2 இன்னபிற.

87. திருநாவுக்கரசர்—266-7; 310-4; 266-9; 64-2; 167-1; 92-18; 80-5; 110-2; 158-3.

88. சுந்தரர்—10-9; 26-5; 46-8; 99-2; 4-1; 94-4; 54-5; 41-8.

89. சொ. சிங்காரவேலன், "அப்பர் தேவாரத்திறன்", அப்பர் தேவாரத்திற் கண்ட சிறப்பியல்புகள்—பக் 10 (1981)

90. மேற்படி நூல் ("அப்பர் தேவாரத்திறன் 1981")—திருநாவுக்கரசர் இலக்கியநலம்-பக் 19; 4-26-6.

91. திருநாவுக்கரசர்—4-5.

92. திருநாவுக்கரசர்—11.

93. திருநாவுக்கரசர்—4-26-8; 4-31-6; 4-52-9; 4-75-6; 4-79-6; 4-75-7.

94. மேற்படி—5-100-5.

95. திருஞானசம்பந்தர்—118-8.

96. சுந்தரர்—60-1.

97. மேற்படி—77-9

98. மேற்படி—95-3.

99. மேற்படி—43-1

100. மேற்படி—60-9

101. மேற்படி—54-5; 54-9.

102. மேற்படி—58-1

103. திருஞானசம்பந்தர்—101-6

104. மேற்படி—132-2

105. மேற்படி—132-3

106. மேற்படி—97-2

107. மேற்படி—130-4

108. மேற்படி—184-4

109. திருநாவுக்கரசர்—4-76-2

110. மேற்படி—4-76-4

111. மேற்படி—6-46-4

112. மேற்படி—5-24-3

113. மேற்படி—4-28-1

114. மேற்படி—6-56-3

115. மேற்படி—5-90-1

116. மேற்படி—4-17-9

117. மேற்படி—4-33-4.

118. மேற்படி—4-44-2.

119. மேற்படி—4-46-2

120. மேற்படி—4-49-5

121. மேற்படி—4-75-4

122. மேற்படி—4-1-5

123. அ.ச. ஞானசம்பந்தர், "இலக்கியக்கலை", பக். 71-72

124. Alden, Raymond Macdonald, "An Introduction to Poetry" (New York) (1927) p. 128.

125. L.S Harris, "The Nature of English Poetry" (1933)— "The difference between Poetry and Prose is that Prose affects only the intellect or reason of a man, and poetry affects the whole man, not only through his intellect, but through his senses and what is loosely called his imagination, and works upon his emotions" —p. 28.

126. Shelley, "A Defence of Poetry"- "Poetry in a general sense, may be defined to be the expression of the imagination".

127. திருஞானசம்பந்தர்—249-5.

128. மேற்படி—377-8

129. மேற்படி—98-2

130. திருக்குறள்—பொருட்பால்-கல்வி-குறள்

131. திருஞானசம்பந்தர்—184-4.

132. மேற்படி—200-9.

133. மேற்படி—329-1

134. சிந்தாமணி—பா. 31

135. திருஞானசம்பந்தர்—132-6.

136. திருநாவுக்கரசர்—4-10-8.

137. மேற்படி—4-53-2

138. மேற்படி—4-75-9

139. மேற்படி—4-76-7

140. மேற்படி—4-103-8

141. மேற்படி—4-86-7.

142. மேற்படி—5-21-8.

143. சுந்தரர்—78-7

144. மேற்படி—78-8

145. மேற்படி—807

146. மேற்படி—806

147. தன்வழிக் குறியீட்டு முறை, (Private symbolism) மரபுவழிக் குறியீட்டுமுறை, (conventional symbolism) இயற்கைக் குறியீட்டு முறை (Natural symbolism) என்றும் மூவகைக் குறியீட்டு முறையில் இவ்வாறு இயற்கை நெறி பற்றி அடக்கலாம். மூவர் தேவாரத்துள் வரும் இவ்வகைக் குறியீடுகளைத் தனியே ஆராய்வது பெரும் பயன் தரும். (பார்க்க : Rene Welleck & Austin Warren, "Theory of Literature", (New York, 1955) (pp. 189-190); "கவிதையில் குறிப்புப் பொருள்"—டாக்டர் சொ. சிங்காரவேலன், "செந்தமிழ்ச் செல்வி", சென்னை.

148. சுந்தரர்—808

149. மேற்படி—65-1

150, Fancy (வெறுங்கற்பனை) என்றும் இதனைக் குறிப்பா.

151. திருஞானசம்பந்தர்—148-A

152. மேற்படி—132-10

153. மேற்படி—132-5

154. திருநாவுக்கரசர்—4-55-2, 4-55-7, 4-55-8, 4-104-2, 6-76-3, 6-76 4 இன்னபிற.

155. Wordsworth: Far and wide the clouds were touched
And in their silent faces could be read
Unutterable love, sound needed none,
Nor any voice of Joy; his spirit drank
The Spectacle, sensation, soul and form

All melted into Him; they swallowed up
His animal being; in them did he love,
And by them did he live; they were his love''

156. Tennyson: "Flower in the crannied wall
I pluck you out the crannies
Hold you here root all in my hand
Little flower' but if I could understood
What you are, roof and all and all in all
I should know what God and man is''

157. ''These ancient Poets do not treat of Nature alone, but resort to it always to describe human life in its varying aspects chiefly love and ware'' — Dr. M. Varadaracan, ''The treatment of Nature in Sangam Literature'' (1957) pp. 2-3.

158. "In the mysticism of Valmiki, Kalidasa and other Indian Poets there is no boundary line between nature, human nature, and God, since they have a strong faith in the immanence of God in all things as well as in man and also his transcendence''—P.N. Srinivasachari, ''Mystics and Mysticism'' (1951) p. 19

159. திருஞானசம்பந்தர்—10-2

160. மேற்படி—69-4

161. மேற்படி - 69-3

162. மேற்படி—327-3; 327-10

163. மேற்படி—98-2.

164. மேற்படி—132-7

165. மேற்படி—132-4

166. மேற்படி—97-2; 224-6; 174-2; 227, 66-1.

167. திருநாவுக்கரசர்—154-8, 210-27

168. மேற்படி4-55-2, 4-55-7, 4-55-8, 4-104-2, 6-76-3, 6-76-44

168.A. அப்பர் தரும் இத் தருமி வரலாற்றுக் குறிப்பும், நரியைக் குதிரை செய்வானும்'' போன்ற குறிப்புக்களும், பிற்காலத்தே திருவிளையாடல் புராணக் கதைகள் தனி நூல்களாக உருவாதற்கு அடிப்படையாக அமைந்த மூலப்பகுதிகள் என்று கருத இடம் உண்டு. திருஞானசம்பந்தர் வரலாற்றோடு இணைந்த பல திருவிளையாடற் செய்திகள் புராணச் சிறப்பும் தனித்தன்மையும் பெற்றுள்ளன. மேலும் விளக்கங்களுக்குக் காண்க : டாக்டர் தமிழண்ணல், ''திருவிளையாடல் முன்னோடி'', திருவிளையாடல் சொற்பொழிவுகள், சை.சி.நூ. கழகம் (1981) பக். 362-363.

169. சுந்தரர்—16-1-

170. மேற்படி—16-8

171. மேற்படி—16-9

172. மேற்படி—355

173. மேற்படி—774

174. முற்குறிப்பிட்ட இயற்கை வழிக் குறியீட்டு வகையில் (Natural symbolism) இதுவும் அடங்கும் எனலாம்.

175. சுந்தரர்—778

176. மேற்படி 91-4

177. ''Poetry, like music, and almost to the same degree as music, depends for its first impression upon the appeal it makes to the ear. No poetry should be judged by any other sense before that of hearing, and therefore all poetry should be read aloud even if it be only that kind of reading aloud which means the silent shaping of Sound in the mind of a Solitary reader''—P.H.B. Lyon, ''The Discovery of Poetry'' - pp. 20-21.

178. திருஞானசம்பந்தர்— 1-11-4; திருநாவுக்கரசர்—6-52-1; சுந்தரர் –7-51-10; 7-62-3.

179. திருநாவுக்கரசர்—5-18-4; 5-44-8; 6-5-2.

180 திருஞானசம்பந்தர்—131, 8, 260, 30, 105, 192 முதலியன.

181. திருஞானசம்பந்தர்—226-11; 96-11; 108-7; 78-11; 334-11; 70-11; 138-1; 2-1; 229-11; 243-11.

182. சுந்தரர்—36-11; 16-11; 47-10; 91-10; 11-10 முதலியன.

183. "Poetry is the record of the best and happy moments of the happiest and best minds"—Shelley, "A Defence of Poetry", (1911) pp.50-51.

184. "Poetry is the most powerful form of speech, but the essence of it is not speech, but emotion"—L. S. Harris, "The Nature of English Poetry" (1933) p. 55.

184.A. தெ.பொ. மீனாட்சிசுந்தரனார், "சேக்கிழாரும் திருக்கண்ணப்பரும்" (முதல்பகுதி தருமையாதீனம்) (1955) பக்.42-43.

185. திருநாவுக்கரசர்—4-86-7

186. மேற்படி—4-103-8

187. திருஞானசம்பந்தர்—

188. மேற்படி—98-2

189. சுந்தரர்—32-8; 44-1; 54-8; 2-9; 20-4; 95-11; 54-9; 20-3; 18-4; 49-8; 49-2; 95-9; 5-2.

190. மேற்படி—2, 5, 14, 18, 32, 36, 43, 44, 46, 49, 95.

191. திருநாவுக்கரசர்—4-1-1

192. பெரியபுராணம்—1410

193. காஞ்சிப்புராணம்—கடவுள் வாழ்த்துப்பகுதி.

194. திருநாவுக்கரசர்—31-8;67-3; 308-8; 308-9.

195. சுந்தரர்—54-4; 69-6; 54-7; 54-5; 54-9; 95-9; 70; 95-2

196. திருநாவுக்கரசர்—6-98-1; 6-98-5.

197. பெரியபுராணம்—திருக்கூட்டச்சிறப்பு—பா

198. திருநாவுக்கரசர்—4-5; 4-94-9; 4.112-8; 5-77-6.

199. திருஞானசம்பந்தர்—

200. திருக்குறள்—42-10, 85-10; 93-6; 22-4.

201. திருஞானசம்பந்தர்—300; 303, 307, 380; 55; 160; 366; 8; 76; 162.
திருநாவுக்கரசர்—171-4; 299-10, 5-8;171-7; 186-9; 178-9; 171-4: 101-4.
சுந்தரர் —99-10; 72-10; 64-9.

202. Edith Kicker, New Methods for the study of Literature'' (1935)—P. 90

203. சொ. சிங்காரவேலன், ''திருஞானசம்பந்தர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத் திறனாய்வும்,', சை. சி. நூ. கழகம் (1969)—pp. 292—303.

204. சொ. சிங்காரவேலன், ''அப்பர் தேவாரத் திறன்'', திருவாவடுதுறையாதீனம் (1981) திருநாவுக்கரசர் இலக்கிய நலம் இலக்கணச் சிறப்பியல்புகள் பற்றிய கட்டுரைகளைக் காண்க.

205. தேவார ஒளிநெறி (சுந்தரர்)—தணிகைமணி. வ.சு. செங்கல்வராயப்பிள்ளையின் அரிய ஆராய்ச்சிக்குறிப்புக்கள் காண்க.

206. தொல்காப்பியம்—செய்யுளியல்—நூற்பா 234 உரைப்பகுதி.

207. சங்க இலக்கிய ஒப்பீடு, பக். 86.

208. தொல்காப்பியம்—செய்யுள்—நூற்பா 235.

209. திருஞானசம்பந்தர்—

210. திருநாவுக்கரசர்—பா 1071 முதல் 2085 (5ஆம் திருமுறை)

211. சுந்தரர்—

212. தொல்காப்பியம்—செய்யுளியல் நூற்பா 238

214. தொல்காப்பியம்—செய்யுளியல்—நூற்பா 237
215. திருநாவுக்கரசர்—
216. திருஞானசம்பந்தர்—
217. சுந்தரர்—
218. தொல்காப்பியம்—செய்யுளியல்—நூற்பா 238.
219. மேற்படி—நூற்பா 239
220. மேற்படி—நூற்பா
221. மேற்படி—நூற்பா 241
222. சுந்தரர்—
223. திருஞானசம்பந்தர்—
224. திருநாவுக்கரசர்—
225. தொல்காப்பியம்—(செய்யுளியல்) நூற்பா— 1363
226. சங்க இலக்கிய ஒப்பீடு—பக் 21.
227. திருநாவுக்கரசர்—4-67-4
228. திருஞானசம்பந்தர்—
229. சுந்தரர்—34-1.
230. இறையொளி பரவி இவ்வருளாளர்கள் பாடியுள்ள கருத்துக்களில் ஒருமைப்பாடு நிலவுதல் கண்கூடு. தமிழ் மொழியில் உள்ள இத் தத்துவப் பேரிலக்கியங்களுடன் வேறு மொழி பக்தி இலக்கியங் கள் ஒன்றுபட்டு நிற்றல் வியப்பாக உள்ளது. அப்பரடிகள் தேவாரத்துடன் கி.பி.15ஆம் நூற்றாண்டு இந்திப் பெருங் கவிஞர் கபீர்தாசனின் பக்திப்பாட்டுக்களைஒப்பிட்டுஇக்கட்டுரை ஆசிரியர் சென்னை, அனைத்திந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் கருத்தரங்க மாநாட்டில் (1973) வழங்கிய ஆய்வுக் கட்டுரை காணத்தக்கது. (*"Common features of Bhakti cult in saint Appar of Kabir's Poems* published in *Saiva Siddhanta* Quarterly Journal of S.S. Mahasamajam, Madras in 1976)

இரண்டாம் பார்வை

# மெய்ப்பொருள் திறன்

*அருள் நலம் கனிந்த ஆன்றோரே!*

*ஆய்வாளர் பெருமக்களே!*

## 0, பழம்பாட்டில் ஓர் எதிர்மறைச்சிந்தனை :

தேவார மூவர் திருவாக்குகளின் மெய்ப்பொருள் நெறி இயல்புகளை நோக்கும் சிந்தனையைத் தொடங்குகிறேன். தென்னகத்தில், இம்மூவர் தோன்றிப் பக்தி நெறியைப் பரப்பிய காலம், சைவசமயத்திற்குப் பொற்காலம் என்று கூறத்தக்க பொற்புடையது. சங்ககாலத்தைப் பொற்காலம் என்று கூறுவது இலக்கிய மரபை ஒட்டியது. சைவ சமயத்தின் எழுச்சிக்கும், சைவசித்தாந்தச் செந்நெறியின் சீர்மைக்கும், விளக்கத்திற்கும் இம்மூன்று பெரு மக்களும் செய்திருக்கும் பணி கடலினும் ஆழமானது; வானினும் உயர்ந்தது; நிலத்தினும் பெரிது. இவர்கள் தோன்றியிராவிட்டால் சைவத்தின் நிலை என்னவாக இருக்கும் என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். சமண, பௌத்தமாகிய புறச்சமயங்கள் வளர்ந்திருக்கும்; திருத்தொண்டர் புராணம் தோன்றியிருக்காது; சிவனுறையும் திருக்கோயில்கள் கற்றளிகளாக மாறியிருக்க மாட்டா; பாடல் பெற்ற பழம்பதிகள் விளக்கம் அடைந்திருக்க மாட்டா; சைவசமயம் இடைக்காலத்தே தன் வலிவையும் பொலிவையும் இழந்திருக்கும். சமண பௌத்தமதங்கள் இன்று இங்கொன்றும் அங்கொன்றுமாகப் பழைய சின்னங்களால் தன் இறந்தகாலப் பழமை காட்டி நிற்றல் போலச் சைவசமயம் அருகியிருக்கும்; கம்பன் என்ற பெருங் கவிஞன், சீதையின் ஒளியிழந்த மேனியை — அசோக வனத்து ஆற்றாத் துயரில், 'வெயிலிடைப்பட்ட விளக்கு' என்று வருணிப்பது போன்று, வெயில் நேரத்து ஏற்றப்பட்ட விளக்குப் போல் இருந்திருக்கும்.[1] மூவர் தோன்றித் தமிழகத்துத் தெருக்களில், சிற்றூர்களில், பேரூர்களில், மன்னர் மன்றங்களில், செய்த பணிகளாலேயே சைவம் சீரும் சிறப்பும் எய்தியது.

*"சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும் எம்சுந்தரனும்*
*சிற்கோல வாதவூர்த் தேசிகனும் — முற்கோலி*
*வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே*
*எந்தைபிரான் ஐந்தெழுத்தெங் கே''*

என்ற பழம்பாட்டு, இவ்வாறு எதிர்மறையால் சிந்தித்து வினா எழுப்பி, திருநீறு, திருநெறி, திருவைந்தெழுத்து ஆகிய மூன்றும் நிலைத்து நிற்க வளர, வையகத்திற்கு வாழ்வுதர வந்தவர்களே இம்மூன்று திருநெறியாளர்களும், மணிவாசகரும் என்று உய்த்துணர வைக்கின்றது.

## 0.1 அநுபவப் பிரிவுகள் :

மூவர் தேவாரத் திருப்பாட்டுக்கள் முற்றும் அவர்கள் அடைந்த சமய அநுபவத்தினைத் தேக்கி வைத்த கருவூலங்கள் போன்றன. அவர்கள் இறையொளிக் காட்சியில் பெற்ற இன்பநிலைகள், உலகத்தையே அந்தப் பேரொளிக் காட்சியில் பேரன்பு கமழக் கண்ட நிலைகள், இறைவனின் ஒளி கிடைக்காத போது பேரிருட்டிற் கிடந்து அச்சத்தாலும் அவலத்தாலும் கிடந்து துயருறும் துயர நிலைகள் ஆகிய அனைத்தும் அப்பெருமக்கள் வாக்குகளில் காணப் பெறுகின்றன.[2] பொல்லாத உலகம், அதில் வாழும் தகுதி பெற்ற உயிர்க்குலம், உலகப் பொல்லாங்கினின்று விடுபட்டு அப்பேரொளிப் பிழம்பாகிய இறைவன் சேவடிமலர்களில் அடைந்து செம்மாந்திருக்கும் நிலை ஆகியவற்றை இவ்வளவு தெளிவாக உணர்த்தியது வேறெந்தச் சமயமும் அன்று என்று கூறும்படி அமைந்துள்ளன இவர்களது திருப்பாட்டுக்கள்.

## 0.2 புத்துயிர்ப்பும் மறுமலர்ச்சியும் தந்தவை :

டாக்டர் ஜி.யூ. போப், இவ்வருளாளர்களைக் குறித்து மனமாரப் பாராட்டி உரைக்கும் வாய்மொழிகள் குறிப்பிடற்குரியவை[3]: தென்னிந்தியாவின் வரலாற்றிற்கு முற்பட்ட சமயம் சைவசமயம் என்றும், ஆரியர் வருகைக்கு முன்பிருந்தே தமிழ்மக்களின் வாழ்விடை நிலவி வந்திருக்கும் தொன்மையான மரபினைக் கொண்டதென்றும், கடவுள், உயிர், மனித இயல், இயற்கை, தீமை, துன்பம், காணப்படாத உலகியற்கைகள் முதலிய அனைத்துக் கொள்கைகளாகச் சைவசமயத்திடைக் காணப்படுவனவற்றை முழுவதும் ஆங்கில மொழியில் எடுத்து விளக்கப் பெறவில்லை என்றும், குறிப்பிடத்தக்க பேராற்றலும், அயரா உழைப்பும், சீரிய பத்தியும் கொண்ட அருளாளர்களால் இடைக்காலத்தே இச்சீரிய சமயம் புத்துயிர்ப்பும் மறுமலர்ச்சியும் பெற்றுச் சிறந்தது என்றும் எழுதுகிறார் அக்கிறித்தவப் பேரறிஞர்.

## 0.3. தமிழகத்தின் மாண்பு :

"பக்தி என்பது தமிழகத்தில் பிறந்தது; மராத்திய மாநிலத்தில்

வட இந்தியாவில் வளர்ந்து பருவம் எய்தியது; குசராத்தில் முதுமை எய்தியது'' என்று பத்ம புராணத்தில் ஒரு செய்யுள் கூறுகின்றது என்பர்.[4] இதன் அடிப்படை யாது? தென்னகத்திலேயே பக்தி தோற்றம் கொண்டது என்பதன்றோ? பக்தி நெறி தமிழகத்திலிருந்து உலகிற்கே ஒளி கூட்டுவதாக உள்ளது. அது தன்னலம் பற்றியது அன்று. கடவுளை நோக்கிய அறிவு கலந்த அன்போ, குருட்டு வழிபாட்டுக் கோட்பாடோ அன்று; அது உலகிடை வாழும் அனைத்துயிர்களிடத்தும் அன்பு செலுத்தும் தனிநெறி; பிறர் நலத்திற்காகத் தொண்டு புரியத் தூண்டும் தூநெறி;[5] 'தொண்டன்' என்ற சொல்லால் அடியவனைக் குறிக்கும் தமிழகப் பக்தி நெறி மாண்பை நம்மிற் பலர் புரிந்து கொள்ள வில்லையே தவிர உலகம் நன்கு உணர்ந்து கொண்டிருக்கின்றது.

''நாகரிகம் என்பது ஒரு மரத்திற்குச் சமம்; அதன் வேர்கள் அறநெறி உணர்வுகளே; ஆனால் நம்மிற்பலர் அதனை ஒத்துக்கொள்ள வில்லை. இத்த வேர்கள் இல்லாவிட்டால், இம் முதுமரத்தின் கிளைகள் உலர்ந்துவிடும்; இலைகள் உதிர்ந்து விடும், நாகரிக வரலாற்றில் அறநெறி உணர்வுகளின் விழுமிய உள்ளடக்கத்தை வளப்படுத்திய பெருமையும் உரிமையும் ஆசியாவிற்கே உண்டு'' என்று, டாக்டர். எஸ். இராதா கிருட்டிணன் அவர்கள், தம்மதத்திற்கு எழுதிய முன்னுரையில் எழுதியுள்ள வரிகள் பொன்னெழுத்துக்களால் ஆனவை.[6] ஆசியாவில், குறிப்பாக இந்தியா, தமிழகம் இந்த வகையில் பீடு கொண்டு நிற்க உரிமை உடையது.

### 0.4. சைவசித்தாந்தச் சால்பு :

தமிழகத்தின் பல்வேறு தத்துவக் கொள்கைகளுள் சைவசித்தாந்தத் தத்துவக் கொள்கை தொன்மையானது; ஈடும் எடுப்பும் அற்ற இணையற்ற கோட்பாடு என்று உலகம் வியந்து நிற்கும் ஏற்றம் உடையது. தமிழ்மக்களின் உயர்ந்த, தெளிவான சிந்தனைகள் அடங்கிய சித்தாந்த மரபு உலகையும், இறைவனையும் கூர்ந்து நோக்கி ஆராய்ந்துள்ள அறிவாராய்ச்சியை வேற்றுச் சமயத்தவரும் மனம் திறந்து பாராட்டுகின்றனர் என்றால் வேறு கூறவேண்டிய தேவை இல்லையன்றோ?

''சைவசித்தாந்தம் திராவிட அறிவியல் நுட்பத்தின் உயர்நிலைப் படைப்பாக உள்ளது; இது மிகமிக விரிவானது; நிரம்பிய செல்வாக்குள்ளது; முடிவுநிலை உண்மையோடு மிகமிக நுட்பமாக அணுகி நிற்கும் அக முகத் தொடர்பு வாய்ந்தது. இத்திய மெய்ப் பொருள் ஞானங்கள்

எல்லாவற்றிலும், இம்மரபொன்றே இம்மாண்புடையதாக உள்ளது. சிறப்பாக இது தென்னிந்திய தமிழ் மெய்ப்பொருள் ஞானப்பனுவல் மரபுடையது'' என்று பாராட்டும் டாக்டர் ஜி யூ.போப் அவர்களது உரை நடுவுநிலை நிரம்பியதாகும்.[7]

## 0.5. சித்தாந்தத்தின் சித்தாந்தங்கள் :

சைவசித்தாந்த ஞானப் பனுவல்கள் கூறும் உயர்நிலைச் செய்திகளை முன்னே கோடிட்டுக் கொண்டு, மூவர் தேவார மெய்ப்பொருள் திறனாய்வு தொடங்குதல் நன்றென்று கருதுகிறேன், பின்வரும் குறிப்புக்கள் இவ்வுயர்நிலை நெறி தெளிவு படுத்தியுள்ள திறம் உடையவை: உயிருக்கு இடமாக உள்ள உடலுக்கு வேராக, உயிர் என்பது ஒரு பொருள் தனித்து உள்ளது; அத்த உயிருக்குள்ளாக இறைவன் என்று ஒரு பொருள் உண்டு; உயிர்ப்பொருளின் உள்ளிருக்கும் இறைவன் உணர்த்துதல் வழியாகத் தான் தனதுஉற்கருவிகளை இயக்கிக்கொண்டு இவ்வுலகத்தில் வாழ்கிறது; உயிர்ப்பொருளின் உலகவாழ்விற்கு உடந்தையாக ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்கள் உள்ளன; திருவருளால் இவற்றைச் சார்ந்து உயிர்வாழும் நிலை பந்தநிலை; (பெத்தநிலை) திருவருளால் இவற்றின் தொடர்பு நீங்கி ஞான உணர்வினால் கடவுளை அநுபவிக்கும் நிலை முத்தநிலை; (சுத்தநிலை) இந்த சுத்தநிலைப்பேறு எல்லா உயிர்க்கும் உரியது; ஆனால் அதனதன் பக்குவ காலத்தில் மட்டும் அனுபவிக்க வாய்ப்பது. இவ்வகையிற்றொடர்புடைய மூன்று பொருள்களாகிய இறைவன் (பதி) உயிர் (பசு) உலகு (பாசம்) என்றும் உள்ள பொருள்கள், உண்மை அறிவியல் கோட்பாடுகளுக்கு முரண்படாத வகையில் இம்முப் பொருள் இயல்புகளை உரிய முறையிற் கற்றுக் கேட்டுத் தெளிவாரே உண்மை ஞானம் பெறுவர்; அவர்களே வீடு பேற்றிற் குரியவர்கள், வீடுபேறு என்பது உயிர் தன் தன்மை கழிந்து சிவமாகிய இறைவனோடு ஒன்றாய் நின்று அனுபவிக்கும் ஆராத பேரின்ப நிலை.

## 0.6. காலம் கடந்த தத்துவச் சிந்தனை மரபு :

சைவசித்தாந்தத் தத்துவ உண்மைகள் மெய்கண்டார் அருளிய சாத்திரப் பனுவலாக, மற்ற அருளாளர்கள் அருளிய அரும்பனுவல்களாக மலரத் தொடங்கிய காலம் பிற்காலமாக இருக்கலாம்; ஆனால் அந்தத் தத்துவங்கள் காலம் கடந்த பேருண்மைகள்; காலங்காலமாக

இந்த நாட்டில் பரவியிருந்தவை; தேவார மூவர் திருப்பாடல்களில் அவற்றைத் தெளிவுறக் காணலாம்.

''தானன்றி வேறொன்றில்லாத் தத்துவனை''

என்றும்.

''ஐயஞ்சின் அப்புறத்தானும் ஆரூர் அமர்ந்த அம்மானே''

என்றும்,

''தத்துவம் தலை கண்டறி வாரிலைத்
தத்துவம் தலைகண்டவர் கண்டிலர்
தத்துவம் தலைநின்றவர்க் கல்லது
தத்துவனலன் தண்புகலூரனே''

என்றும், அப்பரடிகளார் அருளும் பகுதிகளைக் கருதும்போது, தத்துவ ஆராய்ச்சியும் சிந்தனையும் அடிகளார்க்கு முந்தியன என்ற உண்மை இனிது விளங்கும்.[8] சமயத் தத்துவ நெறியில் அடிகளார் காலத்திற்கு முற்பட்ட தமிழ்ச்சிந்தனைகள் உண்டு என்ற கருத்து ஆழ்ந்து சிந்திக்க வேண்டியது. பக்தி இலக்கியக் காலத்திற்கு முன்பே தோத்திர சாத்திரங்கள் இருந்து வந்தன. அதனாலன்றோ அப்பரடிகளும்,

''தோத்திரமும் சாத்திரமும் ஆனார்தாமே''

என்று அழகுறப்பாடுவாராயினர்![9]

இலக்கண முழுநூல் அருளிய தொல்காப்பியரும், ''கடவுள்'' என்ற சொல்லாலும், ''வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்'' என்ற தொடராலும் முதற்பொருளைச் சுட்டினர்,[19A] இம்முதற் பொருளைத் தம் மெய்யுணர்வால் தலைப்பட்டுக் கண்டு இன்புற்ற நம் சைவசமய குரவர்கள், அதன் தன்மை, இயல்பு முதலியவற்றைத் தம் திருமொழிகளில் பிரித்தோதினர்; அதனை ''உள்பொருள்'' என்றே உணர்த்தினர்.

''கற்றைச் செஞ்சடையான் உளன்;
நாம் உளோம்''

என்றனர் அப்பரடிகளார்; இம்முதற்பொருள் உண்மைக் கொள்கையினைத் திருவள்ளுவரும் தம் முதலதிகாரத்து இனிது விளக்கினர்.

### 1. தோத்திர – சாத்திரப் பார்வை :

மூவர் தேவாரத்தில் வரும் மெய்ப்பொருள் நெறி பழமையும்

தொன்மையும் வாய்ந்த மரபை அடித்தளமாகக் கொண்டது'. சங்க காலச் சிவனெறிக் கோட்பாடுகள் சங்க இலக்கியங்களுள் நன்கு தெளியப்பட்டவை. சைவசமய வளர்ச்சி பற்றி ஆராய்ந்த டாக்டர் மா. இராசமாணிக்கனாரைப் போன்ற வரலாற்றுப் பேரறிஞர்கள் நன்கு புலப்படுத்திய செய்தி இது. பக்தி இலக்கியக் காலத்தில் இந்தப் பழைய நெறியின் கோட்பாடுகள் விளக்கம் பெற்றன; தமிழகத் திரு வீதிகளில் இந்தக் கோட்பாடுகள் இனிய இசைப்பாடல்களாகி ஒலித் தன. சிற்றூர்க் கோயில்கள் தோறும் வன்மையும் வளமையான இசை ஒழுங்கும் கொண்ட திருப்பதிகங்களாகிப் பொங்கிப் பெருகின. மக்கள் மனங்களில் படிந்திருந்த புறச்சமய எண்ணங்களை - உணர்வுகளை மெல்லக்கழுவி வெளியேற்றின. இந்த அடிப்படையில் இந்த இலக்கி யங்களை இசைத்தமிழ்ப் பனுவல்களை முப்பொருள் நோக்கில் ஆராய் தல் பொருத்தமும் பொலிவும் உடைய வகையில் இன்று தேவையா கிறது. அந்தத் தேவையை நிறைவேற்றுவதே இன்றைய, இரண்டாம் பார்வை; மெய்ப்பொருள் திறனறியும் சாத்திரப் பார்வை; எள்ளி னின்று எடுபடும் எண்ணெய்போல இலக்கியத்தைக் கூர்ந்துபார்க்கும் இலக்கணப்பார்வை.

## 1.1. பதிஞானம் பெற்ற பாலறாவாயர் :

திருஞானசம்பந்தர் இறைவனைக் கண்டு பேரொளியனுபவம் பெற்றபோது அவர்க்கு மூன்றுவயது நிரம்பியிருந்தது என்று சேக்கிழார் கூறுகின்றார்; ''சிரபுரத்துச் சிறுவருக்கு மூவாண்டில் உலகுய்ய நிகழ்ந்ததனை மொழிகின்றேன்'' என்பது சேக்கிழார் கூற்று [10] தந்தை யார் சிவபாதஇருதயருடன் சீகாழிக் கோயிலுக்குப் பிரமதீர்த்தத்தின் மருங்கு சென்றார் பிள்ளையார். தந்தையார் நீரில் மூழ்கும்போது கரையில் இருந்தார். ''ஈசர்கழல் முறை புரிந்த முன்னுணர்வு மூள அழத்தொடங்கினார்''.[11] 'கண்மலர்கள் நீர்ததும்பக் கைம்மலர்களாற் பிசைந்து வண்மலர்ச் செங்கனிவாய் மணிஅதரம் புடைதுடிப்பப்' பொருமி அழுதார்; திருத்தோணியப்பர் மலைச்சிகரம் பார்த்து 'அம்மே அப்பா' என்று அழுதார்;[12] 'தம்மேலைச் சார்புணர்ந்தோ சாரும் பிள்ளமை பற்றியோ அவர் அழுதது' என்று சேக்கிழார்க்கே ஓர் ஐயம் எழுகின்றது [13] உமையம்மையும் தாமுமாகத் திருத்தோணிபுரத்து இறைவர் அவர் முன்னே எழுந்தருளினார்; விடைமீது எழுந்தருளி வந்தார் பெருமான். அருள்நோக்கால் முன் நிலைமைத் திருத் தொண்டு முன்னி, அவர்க்கருள் புரிவான்'' எழுந்தருளினார் என்பார்

சேக்கிழார்[14] பழம்பிறப்புத் தொண்டே - அதனால் விளைந்த சிவ புண்ணியமே பிள்ளையார்க்குப் பதிக்காட்சிப் பேற்றை அருளியது என்பதனைச் சேக்கிழார் மிகத் தெளிவாகக் கூறியுள்ளார். அழுகின்ற பிள்ளையார்தமை நோக்கி அருட்கருணை எழுகின்ற திருவுள்ளத் துடனே, 'எவ்வுலகும் தொழுகின்ற மலைக்கொடி' யாகிய இறை வியை நோக்கித் 'துணைமுலைகள் பொழிகின்ற பாலடிசில் பொன் வள்ளத்து' ஊட்டுக என்று அருளினார்; கருணை திருவடிவான அம்மையும் 'எண்ணரிய சிவஞானத் தின்னமுதம் பாலுடன் குழைத்து, ''உண்ணடிசில்'' என்று கூறி ஊட்டினார்.[15] கையிற் பொற்கிண்ணம் அளித்து, கண்மலர் நீர்துடைத்து, அழுகை தீர்த்தருளினார். யாவருக் கும் தந்தை தாய் எனும் இயல்புடைய பெருமானால் இவ்வாறு ஆளப் பெற்றதனால், 'ஆளுடைய பிள்ளையார்' ஆயினார்; 'சிவஞான சம்பந்தர்' எனும் திருப்பெயர்க்கு உரியவராயினார்.[16]

''பிள்ளையார்'' என்பதே பிள்ளைத் திருநாமமாக இருந்தது என்பது சேக்கிழார் சொற்கள், தொடர்களைக் கூர்ந்து நோக்கி ஆராய்ந்தால் தெளியப்படும் உண்மை.[17]

பதிக்காட்சி பெற்றுச் சிறந்த பிள்ளையார்க்கு எல்லா ஞானங் களும் உடனே பெருகிவிட்டன என்னும் சேக்கிழார் அதனை அழகு பொருந்திய தம் திருப்பாட்டொன்றால் விளக்குகின்றனர்:[18]

''சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகும் சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்''

'எப்பொருளும் காப்பான் ஈசனே எனும் உணர்வும், அப் பொருள்தான் ஆளுடையார் அடியார்கள்' எனும் அறிவும் பெற்றாராம் பிள்ளையார்; இவ்வாறு உயர்ந்து ஓங்கிச் 'சிறிய பெருந்தகையாராக' நின்ற பிள்ளையார், 'பேருணர்விற் பொலிகின்றாராம்![19] சிவபாத இருதயர்க்குப் பதிக்காட்சியும், பதிஞானமும் கிட்டவில்லை; சடங்கு களை முடித்துக் கரையேறியவர், 'யாரளித்த பால் அடிசில் நீ உண்டது?' என்று வெகுண்டு சிறுகோல் ஒன்றை எடுத்து ஓச்சிக் கேட்ட போது, பதிஞானம் கைவரப் பெற்ற பிள்ளையார்க்கு, ஆனந்த வெள்ளம் கரை புரண்டோடிய திருவுள்ளம் கொண்டு, ஆனந்த பரவசராய் நின்ற ஞான

வடிவினர்க்குப் பேச்சா தோன்றும்? பேச்சிறந்து நின்ற மோனவரம்பில் நின்றவரன்றோ அவ்வருளாளர்! 'ஆனந்தக் கண் துளி பெய்து, உச்சியினில் எடுத்தருளும் ஒருதிருக்கை விரலாற்சுட்டி' விடைமீது உமையம்மையுடன் எதிர்நின்ற பெருமானை எதிர்காட்டி 'உள்நிறைந்து பொழிந்தெழுந்த உயர் ஞானத் திருமொழியால்' பாடத் தொடங்கினார்.[20] 'சிறிய பெருந்தகையார்' என்று இவ்விடத்து ஆளுடைய பிள்ளையாரைக் குறித்த அருமை உளம் கொண்டு போற்றற்குரியது. தந்தையார் எவ்வளவோ வேதாகமங்களையெல்லாம் கற்றவர்; நியம அனுட்டானங்களையெல்லாம் நித்தமும் செய்து வருபவர். அவருக்குத் தெரியாத அருட்காட்சி மூவாண்டு நிறைகின்ற இந்தக் கருணைப்பிள்ளைக்கன்றோ கிடைத்தது! அதனால் அவரைப் 'பெருந்தகை' என்றார் சேக்கிழார்.

ஓங்காரத்துடன் மெய்யெழுத்தை இணைத்து எடுத்த அருந்தமிழால் தொடங்கினார் பிள்ளையார், (த்+ஓ>தோ) ''எல்லையிலா மறைமுதல் மெய்யுடன் எடுத்த எழுதுமறை மல்லல் நெடுந்தமிழ்'' என்று சேக்கிழார் புகழ்கின்றார். இத்தொடக்கத்தையும்,[21] தொடக்கத் திருப்பதிகத்தையும் ''தோடுடைய செவியன்'' என்ற திருப்பதிகத்தை எத்தொடரால் மேலும் சேக்கிழார் குறிப்பிடுகின்றார் என்று உற்று நோக்க வேண்டும்; முதலில் ''மல்லல் நெடுந்தமிழ்' என்றார்; அடுத்து, ''மெய்மை மொழித் திருப்பதிகம்'' என்றார். மெய்ப்பொருளாக நிற்கின்ற பதியின் இயல்புகளை நேரிற்கண்டு காட்டுகின்ற செந்தமிழ்ப் பதிகமன்றோ அது! ஆதலால் கற்பனையாலன்றி அகவிழி நோக்காலன்றி—ஞானவேந்தராக விளங்கும் பிள்ளையார் தம் புறவிழிகளாலும் களிவெள்ளம் பொங்கக் கண்டு மொழியும் திருப்பதிகமன்றோ அது![22] ''அடையாளங்களுடன் சாற்றி, எம்மை இது செய்த பிரான் இவன்றே'' என்று இசைத்தனராம் பாலறாவாயர். இங்குப் பதிஞானம் பெற்ற திருவருட் செம்மாப்புத் தோன்ற 'என்னை' என்னும் ஒருமைப் பெயரால் உரையாது, 'எம்மை'என்னும் உயர்நிலைப் பன்மைப் பெயரால் சுட்டிய அருமைப்பாடு ஒருமைப்பாட்டுடன் ஊன்றி நோக்குதற்குரியது.[23]

பதிஞானம் பெற்ற சிவஞானப் பிள்ளையார்,இராவணன்,பிரமன் மாலறியாப் பெற்றி, சமணபௌத்தர்களைப் பற்றிய குறிப்பு ஆகிய மூன்றையும் முதற்பதிகத்தே மொழிந்தமைக்குக் காரணம் கூறுவார் போன்று, எல்லாப் பதிகங்களின் மாறாத இவ்வமைப்பிற்கு இவ்விடத்து

சேக்கிழார் காரணம் கூறுகின்றார். பதிஞானம் பெற்ற பிள்ளையார் பாட்டில், வேறு சில குறிப்புகளும் விரவியது பொருந்துமோ என்ற வினா அவர் உள்ளத்தே எழுகின்றது போலும்; அதற்கு அவரே அமைதி சொல்லுவாராக: ''மண்ணுலகில் வாழ்கின்றவர்கள் பிழை செய்தாலும், தம் திருவடிகளே அடைக்கலம் என்று அடைந்துவிட்டால், கண்ணுதற் பெருமான் தம் கருணையினாலே ஏற்றுக்கொள்வான் என்று காட்டிடவே இராவணன் குறிப்பை அமைத்தார்; சிவபிரானைத் தொழாது வழுவான மனத்தவர் மாலும் அயனும்; அவர்களது செருக்குத் தவிர்த்து அருள் புரிந்த பெற்றியே அவ்விருவர் பற்றிய குறிப்பு; தம் தலைவனது அருள்நெறியை அறிந்து உய்ந்திடாமல், போதம் இலாச்சமணர் பௌத்தர் வழி, பழியாக்கும் குற்றம் உடையது என்ற குறிப்பை மூன்றாவதாக அமைத்தார்'' என்று விளக்குகின்றார் சேக்கிழார்.[24] இவ்வாறு தேவார மூவரில் முதல்வர் பதிக்காட்சியும் பதி ஞானமும் பெற்றுப் பதிகத்தமிழ்மாலை பாடிய சிறப்பைத் திருத் தொண்டர்புராணவழி அறியத்தக்கது.

## 1. 2. இறையொளி பெற்ற நாவரசர் :

திருநாவுக்கரசர் திருவருள் பெற்றுப் பதிஞானம் கைகூடச் செந்தமிழ்ப்பதிகம் பாடத்தொடங்கிய நெறியை இவ்வாறே சேக்கிழார் வழிநின்று உணர்வது, பின்வரும் கருத்துத் தொடர்பிற்குப் பெருந் துணை புரிவதாகும்.

சமணர் தொடர்பில் நின்ற தருமசேனர், சூலைநோய் வரப் பெற்று, அதன் துயரத்தைப் புறநெறியிற் போக்க இயலாதவர் ஆயினார். 'ஒவ்வா இப்புன் சமயத்துப் ஒழியாத இத்துயர் ஒழியும் வண்ணம் செந்நெறி சேர்ந்து நிற்கும் திலகவதியார் திருவடிகளைச் சென்று சேர்வன்' என்று புறப்பட்டார்.[25] திலகவதியார் இருந்த மடத்திற்கு வந்து, அம்மையார் திருவடிகளில் விழுந்து வணங்கி, ''தத்தமது குலம் செய்த நற்றவத்தின் பயன் அனையீர்! சூலைக்கு வருந்தி அடைந்தேன்; இனி மயங்காது உய்ந்து கரையேறும் நெறி உரைத்தருளுவீராக'' என்றார்[26] இறைவன் திருவருள் நினைந்து, கைதொழுது ''பரசமயக் குழியில் விழுந்து, அறியாது, மூளும் அருந் துயர் உழந்தீர்! எழுந்திரீர்!'' என மொழிந்த அளவில், தம்பியார்எழுந்து தொழுதார்.[27] ''இது இறைவன் அருளே; அவன்தாள் பணிந்து பணி செய்வீர்'' என்று கூறித் திருவதிகை வீரட்டத் திருக்கோயில் புகுவதற்குத் திருநீற்றை அஞ்செழுத்து ஓதிக் கொடுத்தார் தமக்கையார்.[28]

திருவாளன் ''திருநீறு திலகவதியார் அளிப்பப் பெருவாழ்வு வந்தது'' எனப் பணிந்து ஏற்று, ஏற்று, உருவார அணிந்து, தமக்கையார் பின்பு தாமும் திருக்கோயிலுக்குட் செல்லத் தொடங்கினார்.[29] கோயில் தொழுது, வலம் கொண்டு, இறைஞ்சி, கீழே வீழ்ந்து வணங்கிய போது, ''உரைத்தமிழ் மாலைகள் சாத்தும் உணர்வு பெற'' உணர்ந்து உரைக்கத் தொடங்கினார், இங்கேயே முதற்பதிகம் எழுகின்றது. நோய் நீங்காத நிலையில், இறையடி பாடும் உணர்வு, திருவருளால் தோன்றியதும் பாடுகின்றார் மருள் நீக்கியாராகிய தம்பியார்.[30]

*''நீற்றால் நிறைவாகிய மேனியுடன்*
*நிறை அன்புறு சிந்தையின் நேசமிக*
*மாற்றார்புர மாற்றிய வேதியரை*
*மருளும் பிணி, மாயை அறுத்திடுவான்''*
*'கூற்றாயினவாறு விலக்ககிலீர்*
*என நீடிய கோதில் திருப்பதிகம்*
*போற்றால் உல கேழின் வருந்துயரும்*
*போமாறு எதிர் நின்று புகன்றனரால்''*

இந்தப் பதிகம் தொடங்கிப் பாடுகிற வரை சூலைத்துன்பம் மருள் நீக்கியாரை விட்டு நீங்கவில்லை; திருமேனியில் திருநீறும் திருவுள்ளத்தில் நின்ற பக்தியும் கொண்டு பாடிய இப் பதிகத்தைப் பாடிய பிறகே பிணி அகன்றோடியது; 'அடியேன் உயிரோடு அருள் தந்தனர்' என்று தெளிவு, மருட்கை இரண்டும் கொண்டவராய், 'முதல்வன் கருணைக் கடலில் மூழ்கினராம்' மருள் நீக்கியார்.[31] இறைவன் கருணையை நினைந்து மொழிகின்ற பல கூற்றுகளைக் கூறி உருகுகின்றார் அடிகள், ''இவ்வாழ்வு பெறத்தகு சூலையினுக்கு என்ன கைம்மாறு செய்வது'' என்று தாள முடியாத துன்பத்திற்கும் நன்றி பாராட்டுகின்றாராம்.[32]

இப்போதுதான், வீரட்டத் திறைவன் அருளால், 'பாவுற்று அவர் செந்தமிழின் சொல்வளப் பதிகத் தொடை பாடிய பான்மையினால், நாவுக்கரசு என்று உலகேழினும் நின் நன்னாமம் நயப்புற மன்னுக' என்று இன்னருட் குரல் வாழ்த்து எழுந்தது.[33] இராவணனுக்கும் அருளிய கருணைத் திறம் நினைந்து போற்றத் தொடங்கினார்,[34]

இறைவனது அருவுருவத் திருமேனிக் காட்சியும், பதி ஞானமும்

பெற்ற பிறகே திருநாவுக்கரசர் ஆகித் தீந்தமிழ்க் கவி பாடத் தொடங்கினர் என்பது இவற்றால் தெளிவுற அறியும் செய்தியாகும்.

## 1.3. தலைவனைக் கண்ட தம்பிரான்தோழர் :

சுந்தரர் திருமணக் கோலத்துடன் திகழும் போதே கிழவேதிய ராய் வந்த சிவபெருமானைக் கண்டு கொண்டார். ''கண்டதோர் வடிவால் உள்ளம் காதல் செய்து உருகா நிற்கும்'' என்று சுந்தரர், வந்தவர் யாரென்று அறிந்திடா முன்பே உள்ள நெகிழ்வு தோன்ற நின்றதைச் சேக்கிழார் சுட்டுகின்றார்[35] உரையாடல் முடிந்து, வெண்ணெய் நல்லூரிலேயே தான் வாழ்வதாகக் கூறியவுடன், சுந்த ரர் மனத்தில் பெருமான் மீது மெய்ப்பாடு பொங்குகின்றது. இதனைக் ''குழைமறை காதினானைக் கோதில் ஆரூரர் நோக்கிப் பழைய மன் றாடிபோலும் இவன் என்று பண்பின் மிக்க விழைவுறும் மனமும் பொங்க'' என்ற வரிகளில் தெளிவாக்குகின்றார்;[36] மன்றாடி என்ற சொல் இரட்டுற மொழிதலாக 'வழக்காடுவதில் வல்லவன்' என்ற பொருளையும், 'தில்லை மன்னுள் ஆடும் அம்பலக் கூத்தன்' என்ற பொருளையும் தருகின்றது. பதி ஞானம் தோன்ற நின்ற பசுவாகவே இங்குச் சுந்தரர் மாறி விடுகின்றார்; ''செல்லுமா மறையோன் தன் பின் திரிமுகக்காந்தம் சேர்ந்த வல்லிரும்பணையுமா போல் வள்ளலும் கடிது சென்றார்'' என்று, சுந்தரர் திருவருட்சக்தியால் ஈர்க்கப் பட்டுச் சென்றதைக் காந்தம் சேர்ந்த வலிய இரும்புத் துண்டு போல என்ற உவமையால் சேக்கிழார் தெளிவு படுத்துகின்றார்;[37] ''இரும்பு போன்ற தம் மனத்தை ஈர்த்துக் கரும்பு தரு சுவையைத் தமக்குக் காட்டினான் பெருமான்'' என்று மணிவாசகர் பாடுவது இங்கு ஒப்பிடத்தக்கது.[38] அருள்வீழ்ச்சியைச் சத்திநிபாதம் என்று சாத்திரம் கூறும்; திருவெண்ணெய் நல்லூரில் சுந்தரர்க்கு இறைவன் திருக்காட் சியும் இதன்பிறகு வழங்குகின்றார்.

விடையின் மீது அம்மையுடன் தோன்றித் திருக்காட்சி வழங் கினான் என்று சேக்கிழார் குறிப்பிடுவதை நோக்க வேண்டும். அது திருக்கயிலையில் இருந்த வண்ணம் திருவருட் காட்சி வழங்கியதையே குறித்ததாதல் வேண்டும்.[39]

''முன்பு நீ நமக்குத் தொண்டன்
முன்னிய வேட்கை கூரப்

*பின்பு நம் ஏவ லாலே*
*பிறந்தனை மண்ணின் மீது*
*துன்புறு வாழ்க்கை நின்னைத்*
*தொடர்வறத் தொடர்ந்து வந்து*
*நன்புல மறையோர் முன்னம்*
*நாம் தடுத்தாண்டோம் ‘ என்றார்’’.*

சுந்தரர் இம்மொழிகளைக் கேட்டுக் கொண்டு பக்தி மெய்ப் பாட்டை, ‘‘ஈன்ற ஆன் கனைப்புக் கேட்ட கன்று போல்’’ என்ற உவமை வாயிலாகத் தெளிவு படுத்துகின்றார் திருத்தொண்டர் புராண ஆசிரியர்.[40] ‘சொற்றமிழ் பாடுக’ என்று தூமறைபாடும் வாயார் கேட்டவுடன், ‘‘வேதியன் ஆகி என்னை வழக்கினால் வெல்ல வந்த ஊதியம் அறியாதேனுக்கு உணர்வு தந்து உய்யக் கொண்ட கோதிலா அமுதே! இன்று உன் குணப் பெருங்கடல் நாயேன், யாதினை அறிந்து என் சொல்லிப் பாடுகேன்?’’ என்றனர் சுந்தரர்.[41] ‘‘பித்தன்’’ என்று மொழிந்த சொல்லே கொண்டு பாடுக என்றனன் பெருமான்; ஆண்ட வள்ளலைப் பாடலுற்றார் நம்பியாரூரர். வழக்கம்போல், சேக்கிழார் வாக்கில் அப்பதிக இசை ஒழுங்கு வந்தமைகின்றது. இந்தளப் பண்ணில் இனிய கவிதை தங்குதடையில்லாமல் ஓடி வருகிறது.[42]

*‘‘கொத்தார் மலர்க் குழலாள் ஒரு கூறாய், அடியவர்பால்*
*மெய்த்தாயினும் இனியானை அவ்வியன் நாவலர் பெருமான்,*
*பித்தாபிறை சூடீ எனப் பெரிதாந் திருப்பதிகம்*
*இத்தாரணி முதலாம் உலகெல்லாம் உய எடுத்தார்’’*

இவ்வாறு தன்னை உடைய தலைவனைக் கண்ணாரக்கண்டு, பெருஞானமாகிய சிவஞானம் தலைப்பட்டே ஆளுடைய நம்பிகள் அருந்தமிழ் இசைக்கலானார்.

ஆகவே மூவர் தேவாரமும் பதி இயல்பு உணர்ந்த அருளாளர்களால் செய்யப்பட்டது; மெய்ப்பொருளாக விளங்கும் தலைவனை உணர்த்த பெருமக்கள் திருவாக்குகளில் காணப்படும் முப்பொருள் இயல்புகளும், பெருமானுடைய திருவுள்ளம் இசைந்து வெளிப்பட்டவையே என்பது விளங்கும்.

## 2.0. பதி இயல்புகள் :

சைவசமய நெறியில் 'கடவுள்' சிவம் என்ற பெயரால் குறிப் பிடப் பெற்றாலும், தத்துவ முறையில் 'பதி' என்ற பெயரால் குறிப் பிடப் பெறுவதே சைவசித்தாந்த மரபு வழக்கு. 'சிவம்' என்ற சொல் லிற்கு 'மங்கலம்' என்பது பொருள்; மங்கலம் என்றால் 'நன்மை'; 'நன்மையே வடிவாயது; நிறைவான நன்மையே உடையது; தீமையே இல்லாதது கடவுள்' என்னும் கருத்து 'சிவம்' என்ற பெயராற் புலப் படுகின்றது. 'பதி' என்பதற்குப் பொருள் 'காப்பவன்' என்பது; தன் கீழ் உள்ள அனைவரையும் நல்ல வண்ணம் காப்பவன் தலைவனாத லின், 'தலைவன் என்ற கருத்தில் 'பதி' என்ற சொல் வழங்கப்படு கின்றது என்று கொள்ளலாம். ஆண்டான்' 'ஆண்டவன்' எனவழங்கும் வழக்கு உலகியலிலும் உள்ளது.

இருள்வடிவான ஆணவமும், பிறவித்துயரத்தைத் தருகின்ற கன்மமும், அசுத்தமே வடிவான மாயையும் ஆகிய மூன்று மலங்க ளோடும் சிறிதும் தொடர்பு இல்லாத 'பதி' யை 'நின்மலன்' என்ற சொல்லாற் சுட்டுவதும், அவனே இறைவன் அல்லது கடவுள் என்று கொள்வதே சைவசித்தாந்த முடிவு, கடவுளுக்கு எக்காரணம் பற்றியும் பிறப்பு உண்டாவதாகச் சைவம் கூறாது; ஆதலால் 'சிவம்' என்ற பெயர் சைவசமயத்திற்கே மிகவும் பொருந்துகின்ற கடவுட்பெயர் என்று தெளிவாக உணரலாம் :

"சிவன் எனும் நாமம் தனக்கே உடைய
செம்மேனி எம்மான்
அவன் எனை ஆட்கொண்டளித்திடு மாகில்
அவன்றனை யான்,
பவன் எனும் நாமம் பிடித்துத் திரிந்து
பன்னாள் அழைத்தால்
இவன் எனைப் பன்னாள் அழைப்பொழியான் என்று
எதிர்படுமே"

என்று அப்பரடிகள் முதல்வனாக விளங்கும் சிவன் திருவருட் பெருமை யை எடுத்துஓதி மகிழ்கின்றார்;[43] [சிவன்—செம்மை உடைய வடிவினன் என்ற குறிப்பும் இவ்விடத்து விளங்குவதோடு, இது தமிழ்ச்சொல் என்ற மெய்ம்மையும் விளங்குகின்றது அன்றோ?][43A]

*''சிவனாகித் திசை முகனாய்த் திருமாலாகி''*

என்றும் அடிகளார் கூறிமகிழ்வர் தம் தாண்டகத்துள்,[44]

*''சிவனெனும் ஓசையல்லது அறையோ உலகில்*
*திருநின்ற செம்மை உளதே''*

என்று காந்தாரப் பண்ணில் பாடி மகிழ்வர்;[45] 'திருநின்ற செம்மை' என்ற தொடர் சிவத்தைக் குறித்தல் இவ்விடத்துக் கருதி மகிழத் தக்கது.

*''திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட*
*திருநாவுக்கரையன்றன் அடியார்க்கு மடியேன்''*

என்றே நம்பியாரூரர் பாடி, இத்தொடர் அருமையையும், இதுவே திருநாவுக்கரசரது பதிக்கொள்கை தனித்திறம் பெற்று விளக்கப்படும் இடமாகும் அருமையையும் உய்த்துணர வைக்கின்றார்.[46]

*''குறைவிலா மங்கலக் குணத்தன் ஆதலின்*
*நிறைமலன் அநாதியின் நீங்கி நிற்றலின்*
*அறைகுவர் சிவன்என அறிவின் மேலவர்*
*இறையவன் பெருமையை யாவர் கூறுவார்''*

என்ற காஞ்சிபுராணத் திருப்பாட்டு, சிவன் எனும் பெயர்க்காரணத்தையும், அதனை உடைய இறைவன் பெருமையையும் இனிது உணர்விக்கின்றது;[47] சிவஞான முனிவர், அப்பரடிகளின் திருவாக்கை ஆழ்ந்து சிந்தித்து, பதிப்பெயர் நுட்பத்தை விளக்கினராதல் வேண்டும்.

சிவன் என்ற பெயரை அப்பரடிகளார், 57 இடங்களில் எடுத்தாண்டு மகிழ்ந்துள்ளார் என்பது அவர்தம் சொற்கோவையை நோக்கும் போது புலனாகின்றது.[48] 'சிவனார்' என்றும் ஐந்து இடங்களில் 'ஆர்' விகுதி இணைத்துப் பாடுவர் அடிகள்;[49] சிவ கணம், சிவ பெருமான், சிவமூர்த்தி, சிவக்கொழுந்து, சிவ லோகன், சிவநியமம், சிவசோதி, சிவநெறி, சிவகதி, சிவபுவனம், சிவபுரம் என்ற தொடர்களும் அடிகளார் திருவாக்கிற் காணப்படுகின்றன.[50]

'சிவாயநம' என்ற திருவைந்தெழுத்தையும், 'சிவாய' என்ற திருவைந்தெழுத்தின் நுண்ணிலைப் பகுதியையும் ஐந்து இடங்களில் காண்கின்றோம்.[51]

''வைத்தபொருள் நமக்கா மென்று சொல்லி மனத்தடைத்துச்
சித்தமொருக்கிச் சிவாயநம என்றிருக்கி னல்லால்,
மொய்த்த கதிர்மதி போல்பாரவர் பாதிரிப் புலியூர்
அத்தன் அருள்பெறலாமோ அறிவிலாப் பேதை நெஞ்சே''

''கருவாய்க் கிடந்துன் கழலே நினையும் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்றன் நாமம் பயின்றேன் உனதருளால்
திருவாய் பொலியச் சிவாயநம என்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதிநீ பாதிரிப் புலியூர் அரனே''

''அல்லலாக ஐம்பூதங்கள் ஆட்டினும்
வல்லவாறு சிவாயநம என்று
நல்லம் மேவிய நாதன் அடிதொழ
வெல்ல வந்த வினைப்பகை வீடுமே''

''திருதிமையால் ஐவரையும் காவல் ஏவித்
திகையாதெ சிவாயநம என்னும் சிந்தைச்
சுருதிதனைத் துயக்கறுத்துத் துன்ப வெள்ளக்
கடல்நீந்திக் கரையேறும் கருத்தே மிக்குப்
பரிதிதனைப் பற்பறித்த பாவ நாசா
பரஞ்சுடரே என்றென்று பரவி நாளும்
கருதிமிகத் தொழுமடியார் நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே''

''விண்ணினார் பணிந்தேத்த வியப்புறும்
மண்ணினார் மறவாது சிவாய என்று
எண்ணினார்க் கிடமா எழில் வானகம்
பண்ணினாரவர் பாலைத் துறையரே''

'சிவம்' என்ற சொல்லால் பதியை அடிகளார் 7 இடங்களிற் குறிப்பதுமுண்டு.[52] நமசிவாய என்னும் திருமந்திரத்தைக் கூறும் திருப்பதிகம் உள்ளது; இது கடலிலிருந்து கல்லே புணையாக மிதந்தபோது பாடப்பெற்றது என்பது மரபு.[53]

இவ்வாறே திருஞானசப்பந்தரும், சுந்தரரும் சிவம் என்ற சொல்லையும், திருவைந்தெழுத்தையும்தம்திருப்பதிகங்களில்எடுத்துப்போற்றி

யுள்ளனர்; மூவர் பாடும் நமச்சிவாயத் திருப்பதிகங்களும் சிவபிரானது திருநாமப் பெருமையைத் தெளிவாக்குகின்றன.[54]

## 2:1: இரு பெரு முனிவர் எடுத்துத் தொகுத்தவை :

உமாபதி சிவாசாரியார் தொகுத்துள்ள தேவாரத்திரட்டு, சைவ சித்தாந்த அடிப்படையில் திருமுறைப் பகுப்பு அமையும் சிந்தனையைச் சுட்டுகின்றது எனலாம். மூவர் அருளிய தேவாரத் திருப்பாட்டுக்களிலிருந்து 99 திருப்பாட்டுக்கள் தொகுக்கப் பெற்றுள்ளன இந் நூலுள். பின்வரும் தலைப்புக்களில் தொகுப்பு அமைந்துள்ளது :[54A]

1) பதிமுதுநிலை
2) உயிரவைநிலை—[சம்மந்தர் பாடல் சேர்க்கப்பெறவில்லை]
3) இருண்மலநிலை —[சுந்தரர் பாடல் சேர்க்கப்பெறவில்லை]
4) அருளது நிலை —[சுந்தரர் பாடல் சேர்க்கப்பெறவில்லை]
5) அருளுருநிலை —[சம்பந்தர்பாடல் சேர்க்கப்பெறவில்லை]
6) அறியுநெறி
7) உயிர் விளக்கம்
8) இன்புறு நிலை
9) அஞ்செழுத்தருள் நிலை —[சம்பந்தர், சுந்தரர் பாடல்கள் சேர்க்கப் பெறவில்லை]
10) அணைந்தோர் தன்மை,

இப்பத்துத் தலைப்புக்களிலும் அப்பர் அடிகள் திருப்பாட்டுக்கள் அமைந்துள்ளன.

இனி அகத்திய முனிவர், 25 திருப்பதிகங்களைச் சிவாலய முனிவருக்காகத் திரட்டிய திருப்பதிகத் தொகுப்பு, ''அகத்தியர் தேவாரத் திரட்டு'' என்று கூறப்பெறும்; இது முற்கூறிய பத்துவகைத் தொகுப்பாக அன்றி, எண்வகைத் தொகுப்பாக அமைகின்றது:

1) குருவருள்
2) வெண்ணீறு
3) திருவஞ்செழுத்து
4) கோயில்
5) சிவன் உருவம்
6) திருவடி
7) அருச்சனை
8) அடிமை நிலை

இவற்றை நினைவு கூரத்தக்க வகையில் பின்வரும் வெண்பாவும் உள்ளது:

"குருவருனும் வெண்ணீ றெழுத்தஞ்சும் கோயில்
அரனுருவும் என்தலைமே லாக்கும் திருவடியும்
சிட்டான அர்ச்சனையும் தொண்டும் சிவாலயர்க்கென்று
இட்டார் அகத்தியனார் எட்டு"

தொல்காப்பியத்தை "எட்டுவகையானும், எட்டிறந்த பலவகை யானும் ஆராய்வது போன்று மூவர் தேவாரத்தை ஆராயும் முயற்சியிலும் நம் முன்னோர் ஈடுபட்டிருந்தனர் என்பது இதனால் தெளிவாகும்.

அகத்தியர் தேவாரத்திரட்டுப் பாயிரம், எவ்வெப் பதிகங்கள் இவ்வெண்வகைப் பகுப்பிற்கு உரியன என்று தொகுத்துக்காட்டு கின்றது; அப்பாயிரம் நம் ஆய்விற்குப் பெரிதும் பயன்படுதலின், அதனை முழுமையும் இங்குத் தருதல் தகவுடையதாகும்:

"தோடு கூற்றுப் பித்தா மூன்றும்
பீடுடைத் தேசிகன் பேரரு ளாகும்;
நீற்றுப் பதிக நிகழ்த்துங் காலை
மாற்றுப் பரையின் வரலா றாகும்;
துஞ்சல் காதல் சொற்றுணை மற்றும்
அஞ்செழுத் துண்மை அருளிய தாகும்;
ஆரூர் தில்லை காட்டூர் மூன்றும்
சீரார் கோயிற் றிறமைய தாகும்;
ஒருருவரிய பாணை வடிவே
மருவார் என்ற வண்டமி ழைந்தும்
திருவார் மேனிச் செய்திய தாகும்;
பொடியுடை அரவணை அந்தணாளன்
அடியினை தந்த அருளே யாகும்:
பந்து வேற்றா கொன்றிவை மூன்றும்
தந்தலில் அர்ச்சனை நாட்டிய தாகும்;
வேய்குலம் தில்லை யெனுமிவை மூவர்
நாயனும் அடிமையும் நாட்டிய தாகும்,
இப்பரிசு அகத்திய முனிவன் இருநிலத்(து)
ஒப்பரு மூவர் ஓதுதே வாரம்

*முழுதையும் சிவாலய முனிக்கறி வித்துப்*
*பழுதிலா வவையுட் பரிந்தெடுத் திருபத்(து)*
*ஐந்துயர் பதிகமும் அறிவுறத் திரட்டி*
*எண்ணரு மடங்கல் யாவையு முணரும்*
*புண்ணிய மிவைகொடு பொருந்து மென்றவன்*
*தனக்கருள் செய்தனன் தகவுற அதனால்*
*தீதிலா அகத்தியத் திரட்டினை யுலகில்*
*ஓதினர் அடங்கலும் ஓதின ராவரே''*

முதல் முதலாக மூவர் அருளிய தேவாரத் திருப்பதிகங்களை முதலாகக் கொண்டு, வேறு பல பதிகங்களையும் உள்ளடக்கிய அரிய தொகுப்பாகவே இது விளங்குகின்றது. மூவர் தேவாரம் முழுதையும் ஓதிய பயனை இத்தொகுப்பிலுள்ளனவற்றை ஓதினா லேயே அடையலாம் என்று இப்பாயிரம் தெளிவாக்குகின்றது.

## 2. 2. எண்வகை இறைமை :

பதியின் இயல்பாகச் சைவசித்தாந்தப் பனுவல்கள் உரைக்கும் எண்வகைக்குணங்கள் பின்வருமாறு : (1) தன்வயத்தனாதல் 2) இயற்கை உணர்வினன் ஆதல் (3) முற்றுணர்வினன் ஆதல் 4) அளவிலா ஆற்றல் உடையன் ஆதல் (5) வரம்பிலாஇன்பம் 6)உடையவன் ஆதல் (7) முடிவில் ஆற்றல் உடையவன் ஆதல் 8) தூயஉடம்பினை உடையவன் ஆதல். இவை அனைத்துமே 'பதி' என்னும் இயல்பினை உணர்தலுக்குள் அடக்கமாம்.

பதியாகிய கடவுள் இயல்பு உரைக்கவந்த திருவள்ளுவர் அக்குணங்களை இன்ன இன்ன என்று தனித்தனியே குறிக்காமல் மரபுபற்றியும், தொகை பற்றியும், அவ்வதிகாரத்துள் தாம்உரைத்த குணங்கள் பற்றியும் உய்த்துணர வைத்த அருமைப்பாடு உரைத்தக்க ஒன்றாம்.[55] எனவே, திருவள்ளுவர் முதற்பொருளைத் தமிழ்நூல் வழக்குப்படியே வழங்கினர் என்பது உணரப்படும் என்பர் அறிஞர்; (சகுணம், நிர்க்குணம்' என்று கடவுளை வழங்குவது வடநூல் வழக்காகும்; முதல்வன் முக்குணங்களின் (சத்துவம், இராசதம், தாமதம்) வயப்படாது கடந்து நிற்பவன் என்பதே தமிழ் வழக்கு ''ஆதலால், முதல்வனது இயல்பு எனப்படும் அருளாற்றலின் பல்வேறு விளக்கங்களே அவன் குணங்கள் எனக் குறிக்கப்படுவன'' என்ற திரு. க. வச்சிரவேலு முதலியார் அவர்கள் கூற்று இவ்விடத்து உணரத்தக்க ஒன்றாம்.[56]

அணிமா முதலிய எட்டும், யோகப்பயிற்சியின் இடைநிலைப் பயன்களாதலின், அவற்றை எண்சித்தி (பேறு) எனக் கூறுவது மரபாதலின், அவற்றை எண்குணம் என்றல் மரபு வழு என்றும். கடையிலா அறிவு முதலியவற்றை எண்குணம் எனக் காட்டல் அளவை முறையோடு முரணிக் கூறுவார் கூற்று என்றும், திரு. க. வச்சிரவேலு முதலியார் அவர்கள், பரிமேலழகர் கருத்தை இனிது தெளிவு படுத்தியிருத்தல் நினைந்து இன்புறத்தக்கதாகும்[57].

ஆதிபகவன் - தன்வயமுடைமை, வாலறிவன் - இயற்கை உணர்வுடைமை, மலர்மிசை ஏகினான் — தூயஉடம்புடைமை, வேண்டுதல் வேண்டாமை இலான்—வரம்பில் இன்பம் உடைமை, இறைவன்—முற்றுணர்வுடைமை, பொறிவாயில் ஐந்தவித்தான்— இயல்பாவே பாசங்களின் நீங்கியமை, தனக்குவமை இல்லாதான். முடிவில் ஆற்றல் உடைமை, அறவாழி அந்தணன் -பேரருளு டைமை — எனத் திருக்குறட் கருத்து, சைவ ஆகமங்களுட் கூறப் பட்ட எண் குணங்களோடு ஒத்திருப்பதை ஒப்பிட்டாய்வோர் இனிது உணர்வர்.

தேவார மூவர் திருப்பாட்டுக்களில் — இவ்வியல்புகள் முற்றும் ஒவ்வொரு திருப்பாட்டிலுமே சுட்டப்பட்டுள்ளமை அறியத்தக்கது.

## 2.2.1. ஆதியம் பகவன் ஆதல் :

உலகத்திற்கு முதல்வனாக உள்ளவன் என்று மூவர் சுட்டும் பகுதிகள் முதற்கண் தொகுத்துக் காண்டற்குரியன:[58]

*''தேவரும் அமரர்களும் திசைகள் மேலுள தெய்வமும்*
*யாவரும் அறியாததோர் அமைதியால் தழலுருவினார்*
*மூவரும் இவரென்னவும் முதல்வரும் இவரென்னவும்*
*மேவரும் பொருளாயினார் மேயது வளங்கரதே''*

எனவரும் திருஞானசம்பந்தர் திருவாக்கு, மூவரும் சிவபிரானே என்றும், முதல்வனாவானும் இவனே என்றும் மிகத் தெளிவாக்கு கின்றது அன்றோ! அன்றியும்,

*''உரைசேரும் எண்பத்து நான்கு நூறாயிரமாம் யோனிபேதம்*
*நிரைசேரப் படைத்தவற்றின் உயிர்க்குயிராய் அங்கங்கே*
*நின்றான்''*

"கருவினாலன்றியே கருவெலாம் ஆயவன்
உருவினாலன்றியே உருவுசெய்தானிடம்"
"படைத் தளித் தழிப்ப மும்மூர்த்திகளாயினை"

என்றெலாம் வரும் பகுதிகளில், மூலமாகிய முதல்வன் சிவபிரானே என்ற உண்மையைத் தெளிவாக்குகின்றார்.[59] உலகங்கள் அனைத்திற்கும் ஆதியாகவும், அந்தமாகவும் விளங்குபவன் என்று உரைக்கின்றார். இப்பதி இயல்புக்கோட்பாடு, அப்பரடிகளாலும் பல்வேறு இடங்களில் உரைக்கப்பெறும்:[60]

"அந்தமும் ஆதியும் ஆகிநின்றீர்"
"ஆதியும் அறிவும் ஆகி"
"அமரர் கோமான் ஆதி எம் அண்ணல்"
"ஆதியாய் அந்தமானார் யாவரும் இறைஞ்சியேத்த"
"முதலும் இறுதியும் தாமேபோலும்"
"முதலாகி நடுவாகி முடிவானோனே"
ஈறும் நடுவும் முதலும் ஆவார்".

இறைவனது இவ்வியல்பை அவன் திருவடிகள் மீது ஏற்றி உரைக்கும் திருப்பாட்டும் அடிகளார் திருவாக்கில் உணரத்தக்கது:[61]

"எழுவாய் இறுவாய் இலாதன வெங்கட் பிணிதவிர்த்து
வழுவா மருத்துவம் ஆவன மாநரகக் குழிவாய்
விழுவாரவர் தம்மை வீழ்ப்பன மீட்பன மிக்க அன்போடு
அழுவார்க்கு அமுதங்கள் காண்க ஐயாறன் அடித்தலமே"

தாம் இறைவனுக்கு அடிமை என்று கூறுமுகமாக உயிர்கள் அனைத்தும் பதிக்கு அடிமைகளே என்பதையும், அவனே ஆதி முதல்வன் என்பதையும் சுந்தரர் எண்ணற்ற இடங்களில் தெளிவாக்குகின்றார்:[62]

'ஆதி', 'ஆதியான்', 'ஆதியன்' என்ற சொற்களால் சுந்தரர் பாடும் பகுதிகளை நோக்குதல் வேண்டும். 'முதல்காண்பரிதாய பிரான்' 'முதல்வன்', 'முழுமுதல்' 'முன்னவன்', முதலிய தொடர்கள், சொற்களும் இக்கோட்பாட்டினையே விளக்குகின்றன.

'ஊழிமுதல்வர்', 'முடிவில் பரம்பொருளானார்', 'அகிலகாரணமும் ஆனார்', 'ஆதிமுதல்வர்' என்ற தொடர்களால், சேக்கிழாரும் ஆதி பகவனாகிய இறைவன் திருப்பெயர்களை அமைப்பது ஒப்பிடத்தக்கது.[63]

## 2.2.2. வாலறிவின் வள்ளல் :

இனி,, இயற்கை உணர்வினன் என்ற இயல்பினை, 'வாலறிவன்' என்று வள்ளுவர் சுட்டியுள்ள வண்ணமே, இவ்வரு ளாளர்களும்குறிக்கின்றனர். பிறர் அறிவிக்க அறியும் அறிவுசெயற்கை அறிவாகும்; தானே உணரும் அறிவே முதன்மை உடையது. இவ்வாறு அனைத்தையும் அறியும் அறிவுடைமையே, அறிவன் என்ற சொல்லாற் சுட்டப்படும்பேருண்மையாகும்.

*"அறிவே நின்னையல்லால் இனியாரைநினைக்கேனே*
*அறவா அங்கணனே அடியேனையும் அஞ்சலென்னே"*

எனவரும் சுந்தரர் வாக்குகளை நோக்குக.[64]

*"அறிவனே ஆலவாயில் அப்பனே அருள்செயாயே"*
*"கற்றிருந்த கலைஞானம் ஆனுயே*
*கற்றவர்க்கோர் கற்பகமாய் நின்னுய் நீயே"*

எனவரும் அப்பர் திருபாட்டுக்களை நோக்குக.[65]

இறைவனின் இயற்கை உணர்வுடைமையைத் திருவட் பயன் ஆசிரியர் உமாபதி சிவாசாரியர்,

*"பல் ஆருயிர் உணரும் பான்மையென மேலொருவன்*
*இல்லாதான் எங்கள் இறை"*

என்று குறித்தல் இங்கு ஒப்பிடத்தக்கது.[66]

முற்றுணர்வினன் ஆதல் பதிஇயல்புகளுள் பிறிதொன்று வடமொழியாளர், 'சர்வஞ்ஞத்துவம்' என்று இதனைக் கூறுவர் ஓர் எல்லைக்கு உட்படாமல் எல்லாவற்றையும் அறிந்து நிற்பது 'வியாபக அறிவு' என்பர் இதனை எல்லைக்குட்பட்ட அறிவு சுட்டறிவு எனப்படும்; வியாபக அறிவு பேரறிவு எனப்படும் பசுவாகிய உயிரின் குறைவற்ற தன்வயமே 'சர்வ சுதந்திரம் எனக் கூறப்படுகின்றது; இவன் ஒருவனகவே இருத்தலால், பதி' பொருளை 'ஏகன்' என்று உபநிடதங்கள் சுட்டுவது போன்ற 'ஏகன் என்ற சொல்லால் தேவார மூவரும் குறிக்கின்றனர். ஒருவன் என்னும் ஒருவன் காண்க" என்ற திருவாசகத் தொடரில் வரும் ,ஒருவன்' என்ற முதற்சொல் 'ஏகன்' என்ற உபநிடதவழக்கையே சுட்டிப் பதி ஒருவனே என்று விளக்கியமை தெளிவு.[67]

ஒருவன் என்ற சொல்லும் பதியைச் சுட்டுவது தேவார வழக்கு.

"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்ற திருமந்திரமும் 'ஒன்றென்ற தொன்றே காண் ஒன்றே மதி" என்ற சிவஞான போதமும் இங்கு ஒப்பிட்டுணர்தற்குரியன.

சிவபெருமானே முழுமுதற்கடவுள் என்பதும், ஏனைய தேவர்கள் அல்லது தெய்வங்கள் ஆண்வருக்கத்தினராகிய பசுக்களே என்பதும் தேவார மூவர் கருத்துக்கள்:[66]

*"சென்று நாம் சிறுதெய்வம் சேர்வோமல்லோம்*
*சிவபெருமான் திருவடியே சேரப்பெற்றோம்"*
*"செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று*
*பத்திசெய் மனப்பாறைகட்கேறுமோ"*
*"நூறுகோடி பிரமர்கள் நுந்தினார்*
*ஆறுகோடி நாரணர் அங்ஙனே*
*ஏறு கங்கை மணல் எண்ணிலர் இந்திரர்*
*ஈறிலாதவன் ஈசன் ஒருவனே"*

என்ற அப்பரடிகள் வாக்குக்கள் தக்க எடுத்துக்காட்டுக்கள். அறிவு சுட்டறிவு; பதியின் அறிவு பேரறிவு.

*"அடைந்தேனுடைய புந்தியைப் புக்க அறிவினை*
*"அறிவாகி"*
*"அறிவினுட் செறிவுமாகி"*
*"அறிவுடை ஆதி புராணன்"*
*"உண்மை நின்ற பெருநிலைக் குறியானர் அறிவுதன்னை*
*"உளமெலாம் ஒளியாய் மதியாயினான்"*
*"பாம்போடு திங்கள் பயில வைத்த மதியவன் காண்"*

எனவரும் அப்பரடிகளார் திருவாக்குக்கள் அனைத்தும் பதிஇயல்பின் பேரறிவுத் திறத்தையே குறிப்பாகவும், வெளிப்படையாகவும் பேசுகின்றன எனக் கொள்ள இடம் இருக்கின்றது; இறுதியில் உள்ள இரண்டு இடங்களிலும், 'மதி' என்ற சொல் இரண்டு பொருளும் உடையதாக உள்ளமை நுட்பமாக நோக்கத் தக்கது.[67]

இவ்வாறே வரும் ஏனைய அருளாளர் திருவாக்குகளும் இறைவனின் முற்றுமுணர்வை இனிது வெளிப்படுத்துகின்றன.

## 2.3.2 பேராற்றல் வாய்ந்த பேரிறை

அளவிலா ஆற்றல் உடைமையை இறைவன் பெற்றுள்ள நிலையை அருளாளர்கள் எண்ணற்ற இடங்களில் எடுத்துப் பேசுகின்றனர். பதியின் அறிவு பேரறிவாக இருப்பதால், எச்செயலையும் எக்காலத்தும் சலிப்பின்றிச் செய்ய வல்ல பேராற்றலாக இருக்கும் அன்றோ? வடமொழியாளர் கூறும் 'அநந்த சக்தி' இதுவே என்பர்.

சிவபிரானின் அட்டவீரட்டச் செயல்களும், அட்டமூர்த்தி வடிவமும் இவ்வியல்பை உணர்த்துவனவே. அட்ட மூர்த்தமாக இறைவன் விளங்குகின்றமையே சிவநெறிக் கோட்பாடாக மணிமேகலை குறித்த ஒன்று. சைவவாதி கூற்றாக வரும் வரிகளில் சாத்தனார் சைவத்தின் அடிப்படையாக உள்ள இக்கோட்பாட்டை விளக்குகின்றார்.[70]

"இருசுடரோ டியமானன் ஐம்பூதம் என்று
எட்டு வகையும் உயிரும் யாக்கையுமாய்க்
கட்டி நிற்போனும், கலையுருவி னோனும்
படைத்து விளையாடும் பண்பினோனும்
துடைத்துத் துயர்தீர் தோற்றத்தோனும்
தன்னில் வேறுதான் ஒன்றிலோனும்
அன்னோன் இறைவன் ஆகும் என்றுறைத்தனன்"

அட்டமூர்த்தி', 'எட்டாந்திருமூர்த்தி', எட்டிசைந்த மூர்த்தி' 'தேவில் எட்டர்' என்றெலாம் தொகுத்துச் சொல்லும் பாலறாவாய விரிவாகவும் பாடுகின்றார்;[71] அப்பகுதிகள் அளப்பரிய பரம்பொருளின் இயல்பை விளக்கும் ஓவியங்களாக ஒளிர்கின்றனர்:

"பல்கதிரோன் மதிபார் எற்றுநீர் தீக்காலுமேலை
விண் இயமானனோடு முற்றுமாகி வேறுமானோன்"
"மண்ணும் புனல்உயிரும் வரு காற்றும் சுடர்மூன்றும்
விண்ணும் முழுதானான்"
"மண்ணொடுநீர் அனல்காலோ டாகாயம் மதியிரவி
எண்ணில் வரும் இயமானனாம் பேரரளன்"

எனவரும் பகுதிகள் காண்க.[72]

இங்ஙனமே அப்பரும் தொகுத்தும் விரித்தும் அட்டமூர்த்தக் கோட்பாட்டை விளக்குவர். 'எட்டுமூர்த்தி', எட்டுருவமூர்த்தி', இருநாலான மூர்த்தி' என்றெலாம் தொகுத்தும், "பாரானை மதி

யானைப் பகலானானைப் பல்லுயிராய் நெடுவெளியாய்ப் பரந்து நின்ற நீரானைக் காற்றானைத் தீயானானை', 'இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய் எறியும் காற்றுமாகி, அருநிலைய திங்களாய் ஞாயிறாகி ஆகாசமாய் அட்டமூர்த்தியாகி' என்றெலாம் விரித்தும் பாடுவர்.[73]

சுந்தரரும் இறைவனின் பேராற்றல் மிக்க இவ்வடிவத்தை இவ்விருமுறைகளிலும் இனிதெடுத் தியம்புவர்; 'எண்வகை ஒருவனை' அட்டவனே' 'எட்டினால் திகழும் மூர்த்தியை' என்பன தொகுத்துச் சுட்டியன. 'புனலாகி அனலாகிப் பூதங்கள் ஐந்தாய் ஞாயிறும் மதியுமாய் நின்ற எம்பரனை' முதலியன விரித்துரைத்த பகுதிகள்[74]

சிவபராக்கிரமம் வெளிப்பட்ட அட்ட வீரட்டச் செயல்களை மூவரும் வியந்து போற்றியுள்ளனர். அட்ட வீரட்டச் செயல்களை ஏனைய இருவரினும் மிகுதியாக எடுத்துப் போற்றியவர் அப்பரடிகளே என்று கூறலாம். [1] அந்தகாசுரனை அழித்தமை [2] காமனை எரித்தமை [3] காலனை உதைத்தமை [4] சலந்திரனைத் தடிந்தமை [5] தக்கன் வேள்வியைச் சிதைத்தமை [6] திரிபுரத்தை எரித்தமை [7] பிரமன் சிரத்தை அரித்தமை [8] யானைத்தோலை உரித்துப் போர்த்தமை ஆகிய அனைத்தும் பதியின் பேராற்றல் வெளிப்பட்ட இடங்கள். சலந்திரனைக் தடிந்தமை, பிரமன் தலையரிந்தமை இரண்டும் குறிப்பிடப்படும் இடங்கள் சில; ஏனைய பேரிடம் பெறுகின்றன. புரமெரி செய்தமை மிகுதியும் புகழ்ந்துரைக்கப்படுகின்ற வீரச்செயல்.[75]

## 2.2.4. வரம்பிலா இன்பன் பேராழி :

வரம்பிலா இன்பம் உடைமை பதி இயல்புகளிற் சிறந்தெடுத்துப் பேசப்படும் ஒன்று. பேரறிவும், பேராற்றலும் வாய்ந்த தலைவன் பேரின்பமும் உடையவனாயிருத்தல் வியப்பிற்குரியதன்று; துன்பமே இல்லாத இன்பமே 'வரம்பு இல் இன்பமாக' எல்லையற்ற இன்பமாக உரைக்கப்படுகின்றது. இந்தப் பேரின்பத்தை முற்றும் பெற்றுத் திளைத்தவர்கள் இவ்வருளாளர்கள் "குறைவு இலா நிறைவே குணக்குன்றே" என்று சுந்தரர் இவ்வியல்பை எடுத்துப் போற்றுவர்[76]

எண்ணற்ற இடங்களில், 'அமுது' 'தேன்' போன்ற சொற்களால் அருளாளர் மூவரும் இப்பேரின்ப அனுபவத்தைப் பேசுகின்றனர். மாணிக்க வாசகரும், இவ்வாறே தேனும் அமுதுமாக இறை இயல்பை அனுபவித்துள்ளார்.

[திருவாசகத்தில், தேனும் அமுதும் ஆக இறை இயல்பு பேசப் பட்டிருத்தலை, இவ்வறக் கட்டளைச் சொற்பொழிவு நாயகர் தமிழ்க்கடல் இராய. சொக்கலிங்கனார் அவர்கள் ஒரு நூலாகத் தொகுத்து (1955) வெளியிட்டிருக்கின்றார் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. 'தேனைப் பற்றித் திருவாசகம் நிறையப் பேசுகிறது ஆனால் அதனினும் இரண்டு மடங்கு அமுதைப் பற்றிப் பேசுகிறது தேன் 51 இடங்களிலும, அமுது நூற்றிரண்டு இடங்களிலும் வருகின்றன என்கின்றார் இராய. சொ. இதை நயமாக மேலும் விளக்குகின்றார்: 'திருவாசகத்தில் மொத்தம் பதிகம் ஐம்பத்தொன்று; பதிகத்துக்கு ஒரு தேன்; பதிகத்துக்கு இரண்டு அமுது; மேலும் ஒரு விளக்கக் குறிப்புத் தமிழ்க்கடல் அவர்களால் அந்நூல் முன்னுரையில் தரப்பெற்றுள்ளது: 'திருவாசகத்தில் 'தேன்' ஐம்பத்தொரு இடங்களிலும், தேன் என்ற பொருளைத்தரும்'மட்டு' ஐந்து இடங்களிலும், 'மது' நான்கு இடங்களிலும், 'தேறல்' இரண்டுஇடங்களிலும் 'நெய்' 'கள்' 'நறவம்' 'வெறி' என்ற நான்கும் ஒவ்வோர் இடமுமாகமொத்தம் தேனின் பகுதி அறுபத்தாறு இடங்களில் இருக்கின்றன; 'அமுது' நூற்றிரண்டு இடங்களிலும், அப்பொருள் தந்து நிற்கும் மருந்து' பதினாறு இடங்களிலுமாக அமுதின் பகுதி நூற்றுப் பதினெட்டு இடங்களில் இருக்கின்றன.'']

ஓர் ஆசிரியரின் சொற்கோவையை ஆய்வது எத்துணைப் புதிய செய்திகளை விளக்கமுறையில் தர அடிப்படையாக உள்ளது என்பது தமிழ்க்கடல் உரையால் இனிது விளங்கும்.

''அங்கை நெல்லியின் பழத்திடை அமுதே''
''தேனிடை யின்னமுதை மற்றதனிற் றெளிவை''

போல்வன சுந்தரர் தருபவை.[78]

''என்உள்ளத்துள்ளே ஊறும் அத்தேனை அமுதத்தை''
''நெஞ்சுணர உன்புக்கிருந்தபோது நிறையும் அமுதமே''

போல்வன அப்பர் அருள்பவை.[79]

''தெரிவை இயல் வளாவியதுடைய இன்னமிரதத்தை''

போல்வன பாலறாவாயர் பகர்ந்தவை.[80]

தாம் அடைந்த பேரின்பத்தை ஆங்காங்குக் குறிப்பிட்டுள்ள அப்பெருங்கருணைக்கு நாம் என்ன கைம்மாறு செய்யவல்லோம்!

## 2.2.5. பேரருட் பெருங்கருணை

பதி இயல்பான 'பேரருள்உடைமை' மூவர் தேவாரத்தும் விரிவாக இடம் பெற்றுள்ளது; தலைவன் தன்னுடைய மக்கள் மாட்டுப் பெருங்கருணையாளனாக இருத்தல் இயல்பே யன்றோ! தாய்போன்ற பெருங்கருணை உடையவன் இறைவன் என்பது இவ்வருளாளர் பொதுக்கொள்கை. பேரருள் உடையவனாகக் கருணையே வடிவானாவனாக உள்ள அத்தலைவனின் கருணை வளத்தை எண்ணற்ற திருப்பாட்டுக்கள், ஏன்? — ஒவ்வொரு பாட்டுமே ஒவ்வொரு வகையில் — குறிக்கின்றன அவன் கருணை வரலாறுகளை விரிந்துரைக்கின்ற பகுதிகளும் காணப்படுகின்றன

இராவணனுக்கு இறைவன் அருளிய வரலாற்றை ஒவ்வொரு பதிகத்திலும் எடுத்துரைத்துள்ளமை, இறைவனின் பேரருள் உடைமையைச் சுட்டுதற் கென்பது முன்னும் கூறப்பட்டது.

"இராவணனுக்கு அருளும் கருணைத் திறமான அதன்
மெய்த்தன்மை அறிந்து துதிப்பதுவே மேல்கொண்டு"

என்று அப்பரடிகள் வரலாற்றிலும்.[81]

"மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையின்
கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளும் எனக்காட்ட"

என்று சிவஞானப் பிள்ளையார் வரலாற்றிலும் சேக்கிழார் இதனைத் தெளிவாக்குகின்றனர்.[82]

"அருட்கருணைத்திருவாளன்', 'கருணை திரு வடிவான சீரிணங்கு சிவபெருமான்', எவ்வுயிர்க்கும் தாயானான்', 'தாயினும் இனிய தங்கள் தம்பிரானார்', 'அடியவர்பால் மெய்த்தாயினும் இனியான்', 'யாவர்க்கும் தந்தை தாய் எனுமிவர்' 'அத்தனாய் அன்னையாய் ஆருயிராய் அமிர்தாகி முத்தனாம் முதல்வன்' — என்றெலாம் வரும் திருத்தொண்டர் புராணத்தொடர்கள் இறைவனின் கருணை இயல்பையன்றோ காட்டுகின்றன![83]

"ஈன்றானுமாய் எனக்கெந்தையுமாய் உடன்
தோன்றினராய்"

*"அப்பன் நீ அம்மை நீ"*

*"தந்தையாய்த் தாயுமாகி"*

"இம்மூவுலகுக்கு அன்னையும் அத்தனும் ஆவாய்"

என்றெலாம் இக்கருணையை வியப்பார் அப்பரடிகளார்.[84]

''ஆணும்பெண்ணுமாய் அடியார்க்கருள் நல்கி''
''சூடக முன்கை நங்கை ஒருபாகமாக
அருள் காரணத்தின் வருவான்''

என்றெலாம் அருளை வியந்துபோற்றுவார் ஆளுடையபிள்ளையார்.[25]

அடியார்கட்கு அமருலகு, அண்டம் பெறும்படி அருளுவான்; ஆசைதீர அளித்தருள் செய்வான்; ஆட்கொண்டருள்வான்; இன்பம் வழங்குவான்; கோளும் நாளும் பிற தீங்குகளும் அடையாவண்ணம் அருள்செய்வான்; தவநெறி யருள்வான்; நோய் பிணி நீக்குவான்; பழி, பாவம் போக்கியருள்வான்; பிறப்பு இறப்புப் போக்குவான் பெருமை, அழியாச்செல்வம், புகழ், ஆக்கம், உயர்ச்சி, வீறு முதலிய அனைத்தும் அருளுவான்; மலம், மால், மையல், மயக்கு, பாசம் ஒழிப்புதும் இவன் கருணை வெளிப்பாடே; வினை நீக்குவான் வீடளிப்பான்; தானாக்குவான்; திருவடி அளிப்பான்; சிவசாரூபம் வழங்குவான்; அடியவர்க்கு எளியவனாக வந்து காட்சி தருவான் ஆனால் பிரமன் மால் இருவர்க்கும் அரியவன் — என்றெலாம் மூவர் திருவாக்குக்களுனின்றும் அடியவர்கட்கு இறைவனின் அருளிப்பாட்டை விரித்துரைக்கலாம்.

'பதி நாம ரூபக் கிரியைகள் இல்லாதது' என்று சாத்திர நூல்கள் உரைப்பது அதன் சொரூப நிலையை நோக்கியது; பசுக்களைப் பாசத்தினின்று விடுவித்து, இன்புறச் செய்கின்ற வனாய்ப் பல்வேறு உருவங்களையும், அவற்றிற்கேற்பப் பல்வேறு பெயர்களையும் கொண்டு பல்வேறு தொழில்களைச் செய்பவன் ஆகின்றான். அது அருள் காரணமாக நிகழ்வதால், அது தடத்த லக்கணம் ஆம். இறைவன் தான் நினைந்த தொழிலை உருவம் கொள்ளாமலே செய்ய வல்லவன். ஆயினும், உயிர்கள் தன்னை அறிந்துகண்டு கருதி வணங்கி உய்தற் பொருட்டு உருவம் கொள் கின்றான்; இத்தகைய அருவம், அருவுருவம், உருவம் ஆகிய மூவகைத் திருமேனிகள், ''கருணையின் வடிவு காணே'' என்று சிவஞான சித்தியாரும் கூறுகின்றது.[26]

ஒருவனே ஆய இறைவன், தானும் தன் சக்தியும் என்று இரு தன்மைப்பட்டு நிற்கும் இயல்பினன் ஆதலின், சக்தி லன்னும் கூற்றால் அளவிளாப் பொருள்களில் நிறைந்து அளவிலாச்செயல் களைச் செய்தருள்வான். உயிர்களின் பெத்த காலத்தில் உயிர்க்

குயிராய் உடன் நின்று உதவுவது இறைவனின் மறைத்தற்சத்தி (திரோதானசக்தி) அருட்சத்தி முத்திக்காலத்தில் உடன்நின்று உதவும். உதவும்போது அறிவை விளக்கம் அடையுமாறு செய்து பொருள்களை உணர வைப்பது முதல்நிலை, இது 'காட்டும் உபகாரம்' எனப்படும்; இறைவன் இவ்வாறு உயிர்களின் அறிவை விளக்கி அதனை அறியச் செய்தால் மட்டும் போதுமா? அவை அறியும்போது அறியப்படும் பொருளைத் தானும் உடன் நின்று அறிதல் வேண்டும்; இதுவே 'காணும் உபகாரம்' எனப்படும் சிவஞானபோதகத்தின், ஐந்தாம் சூத்திரமும், பதினொன்றாம் சூத்திரமும் இவ்விருவகை உபகாரங்களை விளக்கும்.

## 2,2,6, வழிகாட்டும் வான்பொருள் :

இறைவன் காட்டும் உதவியை மெய்கண்டார் அருளும் சூத்திரம் பின்வருமாறு :[86]

*"காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போற்*
*காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்*
*அயரா அன்பின் அரன்கழல் செலுமே"*

"இறைவன் உயிர்கட்கு உயிராக நின்று கருணையும்பேரருளும் கொண்டு இயக்குவதனால் அனைத்துயிர்களும் இயங்குகின்றன. அவன் இயக்காவிட்டால் ஒன்றும் இயங்கமாட்டா; அவன் காட்டாவிட்டால்ஒன்றும்காண மாட்டா" என்பதில் மூவர் முதலிகளுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது; எண்ணற்ற திருப்பதிகங்களில் இந்த வலுவான நம்பிக்கை வெளிப்படுகின்றது:

*"காட்டுவித்தால் ஆர் ஒருவர் காணாதாரே*
*காண்பார் ஆர் கண்ணுதலாய்க் காட்டாக்காலே"*

என்று அப்பரடிகளார் கூறி மகிழ்வர்.[87] இறைவனின் காட்டும் உதவியைக் குறித்த அப்பர் தேவாரத் தொடர்களை இங்குக்காட்டல் தகும்.[88]

*"ஞானம் காட்டுவர் நன்னெறி காட்டுவர்"*
*"தன்திறமும் அறிவித்து நெறியும் காட்டி"*
*"தூநெறிக்கு வழிகாட்டும் தொழிலார் போலும்*
*"கல்லாதன வெல்லாம் கற்பித்தானை*
*காணாதனவெல்லாம் காட்டினானை"*

"பத்தனாய்ப் பணிந்நடியேன் தன்னைப் பன்னாள்
பாமாலைபாடப் பயில்வித்தானை"
"பன்னியநூல் தமிழ்மாலை பாடுவித்து என்சிந்தை
மயக்கறுத்த திருவருளினானை"

காட்டும் உதவியைச் செய்து துணை புரிவதனால், 'அருந்துணை' வழித்துணை' 'தோன்றாத் துணை' என்று பதிநிலை கூறித் தெளிவூட்டுவதும் உண்டு,[59]

"கடிக்குளத் துறைதரும் எம்ஈசர் தொண்டர்
தொண்டரைத் தொழுதடி பணிமின்கள்
தூநெறி எளிதாமே
"ஊனத்திருள் நீங்கிட வேண்டில்
ஞானப்பொருள் கொண்டடிபேணும்"
சீர்கெழு சிறப்போவாச் செய்தவநெறி வேண்டில்
ஏர்கெழு மடநெஞ்சே இரண்டுற மனம்வையேல்

என்றெலாம் வரும் சிவஞானப் பிள்ளையார் திருமொழிகள் நெறி காட்டும் நின்மலன் அருள்இயல்பு குறித்தனவே.[60]

"காணாத கண்கள் காட்டவல்ல கறைக்கண்டனே'
"காணாதொழிந்தேன் காட்டுதியேல் இன்னம்
காண்பன்"
"பாதமே தொழுவார் பற்று வான்துணை
"வழித்துணை மருந்தே"
"அடியார்கள் செந்நெறியானை"
'தோடு காதிடு தூநெறியானை"
"நல்லவா நெறி காட்டுவிப்பானை"
"நெறியே நின்மலனே"
"வானவர் அறியா முறை முறைபல நெறிகளும்காட்டி"

எனவரும் தம்பிரான் தோழர் திருவாக்குக்கள், இறைவன் பேரருள் கொண்டு நெறிகாட்டும் நீர்மையை நினைப்பினவே[61].

## 2 2,7. ஒன்றாய் — வேறாய் — உடறாய்

இறைவன் உயிர்களோடும் உலகத்தோடும் ஒன்றாகவும், வேறாகவும், உடனாகவும் உள்ளான் என்பது மேற் கூறப்பட்ட அகச்சான்றுகளால் இனிது விளங்கும். இதனைத் திருவீழிமிழலைத் திருப்பதிகத்தில் ஆளுடைய பிள்ளையார் மிகத் தெளிவாக உரைத்துள்ளார் :[62]

"ஈனாய் முதல் ஒன்றாய் இருபெண் ஆண் குணமூன்றாய்
மானாமறை நரன்காய் வரு பூதம் அவை யைந்தாய்
ஆனார்சுவை ஏழோசைஒயா டெட்டுத்திசை தானாய்
வேனாய் உடன் ஆனானிடம் வீழிம் மிழலையே"

இதனையே மெய்கண்டாரின் சிவஞானபோதம் இரண்டாம் சூத்திரம் உரைக்கும். சிவஞான சித்தியாரின் பின்வரும் அழகிய விருத்தம் பிள்ளையாரின் பீடுசால் வாக்கிற்கு விரிவுரைபோல அமைந்துள்ள தன்றோ?[92]

"உலகெலா மாகி வேறாய்
உடனுமாய் ஒளியாய் ஓங்கி
அலகிலா வுயிர்கள் கன்மத்து
ஆணையின் அமர்ந்து செல்லத்
தலைவனாய் இவற்றின் தன்மை
தனக்கெய்த லின்றித் தானே
நிலவுசீர் அமல னாகி
நின்றனன் நீங்கா தெங்கும்"

## 2.2.8 அடித்தலும் அணைத்தலும்

இறைவன் காத்தும் படைத்தும் தந்தும் வினையாகும் இயல்பு கருணையின் விளைவே. ஒறுத்தலும் இறைவனின் மறக் கருணை என்று கருதுவர் அருளாளர்.

"அல்லலில் அருளே புரிவானை"
"ஒறுத்தான் நின்னருளின்"
"ஒயுமானுள் நோய் புணர்ப்பானை"

என்று சுந்தரரும்,[94]

"தூக்கமா மூடர் தன்னைத் துயரிலே வீழ்ப்பர் போலும்"
"போதுவித்தாய் நின்பணி பிழைக்கிற் புளியம் வளாரால்
மோதுவிப்பால் உகப்பாய் முனிவாய் கச்சியேகம்பனே"

என்று அப்பரடிகளும் கூறுவது மறக்கருணை பற்றியே ஆகும்; உயிர்கள் திருந்த வேண்டும் என்ற இரக்கமும் அருளுமே இறைவனின் மறக்கருணைக்கு அடிப்படை,[95]

திருத்தித் திருத்தி வந்து என் சிந்தை
இடங்கொள் கயிலாயா"

என்ற சுந்தரர் திருமொழி மெய்ம்மை உடையது.[96] இவ்வாறே

குற்றமே செயினும் குணமெனக் கருதும்
கொள்கை கண்டுன் திருவடி அடைந்தேன்''

என்றும் பாடுவர்;[97] பிழைகள் பொறுக்கும் பெரும் பண்பைத் திருமுறை வாக்குக்கள் தெளிவாக்கும்:

நாயேன் பிழைத்தனகள் எத்தனையும் பொருத்தாயன்றே''
ஆறாத ஆனந்தத் தடியார் செய்த அனாசாரம்
பொறுத்தருளி அவர்மேல் என்றும்
சீனாத பெருமானை''

''அழைக்கும் அன்பின் ஏாயஅடியவர் பிழைப்பு நீக்குவார்''
''பழையதம் அடியார் செய்த பாவமும் பிழையும்
தீர்ப்பர்''

என்ற அப்பரடிகளார் அருந்தமிழ்த் தொடர்களும் இவ்வகையில் எண்ணத் தக்கனவேயாம்.[98] இம்மறக்கருணையை மருத்துவன் தந்தை, அரசர் செயல்களாடும் ஒப்பிட்டு அருணந்த சிவாசாரியார் பேசுவதும் இங்கே நினைக்கத்தக்கது[98A].

### 2.2.9. மலர்மிசையேகும் மாண்பு:

பொறிவாயில் ஐந்தவித்தான் என்று வள்ளுவர் சொல்லுவதற்கேற்ப ஐம்புலன்களை வென்றவன் என்று இறைவனைச் சுட்டும் பகுதிகளும், மலர் மிசை ஏகினான் என்பதற் கேற்ப அடியவர் நெஞ்சத்தில் உறைபவன் என்று குறிக்கும் பகுதிகளும் திருமுறை யருளிய அருளாளர்கள் திருவாக்குக்களில் உள்ளன.

நேரிழையைக் கலந்திருந்தே புலன்கள் ஐந்தும்
வென்றானை''

''மான்மறிக்கையர் மங்கையைக் கெழுமின யோகினர்
பத்தனாய்பாட மாட்டேன் பரமனே பரமயோகீ''

''பசுவேறி வழிதகும் எம்பரமயோகி''

என்ற அப்பரடிகளார் திருவாக்குக்களில் இக்கருத்தினைக் காணலாம்[99]

,'சிந்தையுள் சிவமதானார்''
தொண்டர் அகமலாற் கோயில் இல்லை''
''நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்''

"கைதொழுவார் மனம் ஆலயம்"
ஒருவரும் ஈங்கறியாவண்ணம் என் உள்ளத்தே......
சிறையானை"
"மனத்தகத்தான் தலைமேலான்"
"என் புந்தி வட்டத்திடைப்புக்கு நின்றானையும்
பொய்யென்பனோ" என்ற பகுதிகளும் மலர் மிசை
ஏகும் மாண்பினை எடுத்துரைக்கின்றன[100]
"அயனொடு மாலுக்கும் காணொணா வண்ணத்தான்"
கருதுவார் மனத்துளான்'
என்று பாலறாவாயரும் பாடுகின்றனர்.[101]

திருவண்ணாமலையில் திருமாலும் பிரமனும் அறிய இயலாத சோதிப்பிழம்பாய்த் தோன்றிய சிவபிரான் வரலாற்றை மூவரும் மறவாது போற்றுகின்றனர். வரப்பிலா ஆற்றல் பெற்றவன் பதி என்பதும், 'யாப்பிரமம்' என்று எண்ணித் தருக்குவோராற் காண் டற்கரியவன் என்பதும், அன்பினால் நினைவார்க்கே மிகவும் எளியவன் என்பதும் இந்நிகழ்ச்சியினாற் புலனாகின்றன.

"காண்டற்கரிய கடவுள் கண்டாய்
கருதுவார்க்கு ஆற்ற எளியான் கண்டாய்"
என்பார் திருநாவுக்கரசர்;[102], திருமாலொடு நான்முகனும் தேடித்தேடொணாத் தேவனை என்னுள்ளே தேடிக் கண்டு கொண்டேன் என்று உறுதிபடப்பாடுவர்[102]. திருஞானசம்பந்தர் இருவர்க்கரியாய் நின்ற இறைவன் அருள் திறத்தை முற்றும் ஓதும் பதிகம் ஒன்றும் உள்ளது. பாச ஞானமோ, பசு ஞானமோ இறைவன் திருவருள் துணையின்றிப் பொருள்களின் உண்மை இயல்பையும், முதல்வன் இயல்பையும் அறிய மாட்டா என்பது ஞானநூல் முடிவு. திருவருள் காட்டும் ஞானம் ஒன்றே பதியாகிய முதல்வனை அறிவதற்கு வேண்டும்.
இதனைச் சிவஞான சித்தியாரில்,
"பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும்
பார்ப்பரிய பரம்பரனைப் பதஞானத்தாலே
நேசமொடும் உள்ளத்தே நாடி"
எனவரும் பகுதி தெளிவாகும்[103A] இருவர்க்கரிய இறைவன் அடியவர்க்கு எளியவனாய் நிற்கும் செய்தி இவ்வுண்மையையே தெளிவாக்குகின்றது.

## 22.10 மூவகை முறைகள் :

இறைவனாகிய பதி உயிர்கட்கு மெய்யுணர்வாகிய ஞானத்தைத்தரும் முறைகள் மூன்றென்று சித்தாந்த சாத்திரங்கள் கூறுகின்றன. ஒரு மலம் உடையவர்களாகிய விஞ்ஞானாகலர்க்கு அவர்களது பக்குவநிலையில் உன்நின்று உணர்த்தியே ஞானம் வழங்குவான். இருமலம் உடையவர்களாகிய பிரளயாகலர்க்கு ஒரு முறை தனது இயற்கை வரவில் தோன்றி அருள் செய்து நீங்கும் முறையால் மெய்யுணர்வு தருவான். மும்மலங்களை உடையவர்களாகிய சகலர்க்கு, மெய்யுணர்வு மிகுந்து சிவமேயாகி நிற்கும் சீவன் முத்தரை ஆசான் மூர்த்தியாக்கி, அவரிடத்தில் தான் விளக்கி நின்று, மும்மலங்களையும் அறுத்து மெய்யுணர்வைத் தருவான், தன்மையில் நின்று அருளுதல், முன்னிலையில் நின்று அருளுதல், படர்க்கையில் நின்று அருளுதல் என்றும் இவற்றை முறையே மொழியலாம். முதல் இரண்டும் நிராதார தீக்கை என்னும், மூன்றாவது சாதாரதீக்கை என்றும் கூறப்படும். (ஆதாரம் இல்லாமல் செய்யப்படும் தீக்கை, ஆதாரத்தோடு கூடிநின்று செய்யப்படும் தீக்கை என்பது இவற்றின் பொருள்.[104]

பதி, இன்னருள் சரிந்து உயிர்களுக்கு என எடுக்கும் திருமேனிகள், அருவம், அருவுருவம், உருவம் என்ற மூன்றும் என்று முன்னர்க் கூறினோம்; கண்ணிற்குப் புலனாகாதது அருவம்; சக்தி வடிவாயிருந்து செயல்களைச் செய்வது இது. அருவுருவம் ஒரு கால் புலனாகியும், புலனாகாமலும் இருப்பது; இதனை ஒளிவடிவம் என்று உணர்தல் வேண்டும்; இலிங்கம் சிறப்பாக இதனைக் குறிக்கும் உருவம் கண்ணிற்குப் புலனாவது; முகம் முதலிய உறுப்புக்களுடன் வருவது.

## 2.2.11. ஐந்தொழில் நாடகம் :

இறைவன் செய்கின்ற தொழில்கள் பற்பல உருவங்களைக் கொண்டு பலவாயினும், அவற்றை ஐந்தொழில்களுள் அடக்கிக் கூறி விடலாம்; படைத்தல்; காத்தல்; அழித்தல்; மறைத்தல்; அருளல் என்பன அவை ஐந்து. 'மறைத்தலை, அருளையும் சேர்த்து ஐந்தொழில் ஆக்கிக் கூறுவது சைவசமயம் ஒன்றே' என்பார் வல்லோர். பிறசமயங்கள் முத்தொழில்களையே கூறும். அருளல் என்பது உயிர்-

களைப் பிறப்பினின்றும் நீக்கி வீடு பெறச்செய்தல்; மறைத்தல் தொழிலால் மலம் தேய்வுறும்; அதனால் பக்குவம் எய்தி உயிர் வீடு பெறும்.

மூவர் திருவாக்குக்களிலும், திருவாசகத்தும் ஐந்தொழில் பல இடங்களிற் குறிக்கப்படுகின்றது

*"ஆக்காதே யாதொன்றும் ஆக்கினானை"*
*"விச்சின்றி நாறு செய்வான்"*
*"முறைமையால் எல்லாம் படைக்கின்றானே"*
*"கண்ணவனாய் உலகெல்லாம் காக்கின்றானே"*
*"மம்மரனுக்கும் மருந்து"*
*"விண்ணவனாய் விண்ணவர்க்கும் அருள்செய்வானே"*

எனவரும் அப்பர் திருமொழிகள் காண்க.[105]

*"கண்ணால் உலகம் காக்கின்ற கருத்தா"*
*"காய மாயமும் ஆக்குவிப்பானை"*
*"படைத்தால் ஞாலமெலாம்"*

எனவரும் நம்பியாரூரர் வாக்குக்களையும் ஒப்பிட்டுணரலாம்.[106]

திருவெம்பாவையுள், "போற்றியருளுக நின் ஆதியாம் பாதமலர்" என்ற திருப்பாட்டு, ஐந்தொழில்களையும் தெளிவாக உணர்த்தும் அருமைப்பாடுடையது என்பதும் இங்கு உணரத் தக்கது[107]

## 2.2.12. பதிஇயல்பு-ஒருதொகுப்பு :

மூவர் தேவாரத்துக் குறிக்கும் பதி இயல்புகள் அனைத்தையும் இங்குக் கூறி முடித்தல் இயலாது; ஓரளவே சுட்டிக்காட்டப்பட்டது. இந்நெறி நின்று ஆழ்ந்து நோக்கினால் புலப்படும் உண்மைகள் பல வாகும்; அச்சிந்தனையைத் தூண்டுவதொன்றே இந்தச் சிற்றுரை செய்யும் பணி ஆகும்,

உமாபதி சிவாசாரியார், தம்முடைய 'சிவப்பிரகாசம்' என்ற ஞானத் திருநூலில் பதியியல்புகளாகக் கூறுவன அனைத்தும் மூவர் திருமொழிகளில் விரவிநிற்கும் விருப்பொருளே எனத் துணிதல் தவறாகாது; ஆதலின் அச்சான்றோரது சாத்திர வாக்குடன் பதிச் சிந்தனையை நிறுத்திக் கொண்டு மேலே தொடர்வோம்.[108]

''பலகலையா கமவேதம் யாவையினும் கருத்துப்
பதி பசு பாசம் தெரித்தல்; பதி பரமே அதுதான்
நிலவுமரு வுருவின்றிக் குணங்குறிக ளின்றி
நின்மலமாய் ஏகமாய் நித்த மாகி
அலகிலுயிர்க் குணவர்வாகி அசல மாகி
அகண்டிதமாய் ஆனந்த உருவாய் அன்றிச்
செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாக்ப் பெரிதாய்த்
திகழ்வதுதற் சிவமென்பார் தெளிந்துளோரே''

## 3.0. பசு (உயிர்) இயல்புகள் :

உயிர்கள் பல என்பதும், அவை நிலைபெற்ற தன்மை உடையன என்பதும் பழந்தமிழர் அறிந்த உண்மைகளே. இயற்கைகளில் ஆணவத்தாற் கட்டப்பட்டுள்ள உயிரைப் 'பசு' என்பது சைவ சிந்தாந்த மெய்ந் நூல் வழக்கு காணப்படுகின்ற உலகம் அறிவுடையதும், அறிவில்லாததும் என இருதிறப்பட்டு நிற்கின்றது; இவற்றுள் அறிவுடையுலகமே (சேதனப் பிரபஞ்சம்) உயிர் என அனைவராலும் கொள்ளப்படுகின்றது; அறிவில்லாத உலகம் (அசேதனப் பிரபஞ்சம்) இது என அனைவரும் அறிந்ததே.

உயிர்கள் (தாமாக அறியமாட்டா; அறிவித்தால் அறியும் தன்மை உடையவைத் தாம் சார்கின்ற வண்ணமேயாகும் பெற்றி வாய்ந்தவை. சிற்றறிவுடைய பசுக்கள் பேரறிவுப் பொருளாகிய பதியைப் போன்றே என்றும் உள்பொருளே. ஆயினும் பதி என்றும் ஆண்டானாய் இருக்க, பசு அவனுக்கு அடிமையாய் இருக்கும் என்பது சைவநூல்களில் தெளிவாகக் காணப்படும் உண்மை.

அறிவுப் பொருள் ஆவதும், ஆயினும் தானாக ஒன்றையும் அறியமாட்டாமல் வேறொன்றன் துணையாலே அறிவதும், அறியும் பொழுது ஒவ்வொன்றைப் படிமுறையால் அறிவதும் அறிந்தே நில்லாமல் இடைவிட்டு இடைவிட்டு அறிவதும், அறியப்படும் பொருளில் அழுந்தி அதுவே யாவதும் ஆகிய அனைத்தும், உயிர்களுக்கு உள்ள தன்னியல்புகள். (சொரூப லக்கணம்) இவற்றால் இறைவனைப் பற்ற மாட்டாத பாசங்களால் பசு பற்றப் பட்டதாகின்றது, அதனல் பாசம் காரணமாகப் பசுவிடம் காணப் படுவன யாவும் உயிரின் பொதுவியல்புகள் (தடத்தலக்கணம்)

ஐம்புலப்பொருள்களில் அழுந்தி உயிர்கள் கட்டுண்டு கிடத்தல் ஆணவ மலத்தால் உண்டாகிய செயற்கைத் தன்மை; ஆணவம் நீங்கிய வழிச்சிவத்தை அடைந்து இன்புறும்.

### 3.1. மூவர் மொழிகளில்:

மூவர் திருப்பாட்டுக்களினின்று உயிரின் இயல்புகளாக நாம் அறியும் யாவும், இங்குக் குறிப்பிடப் பட்ட வரையறைக்குட்பட்டே நிற்கும் என்பது தெளிவு.

*"உரைசேரும் எண்பத்து நான்கு யோனிபேதம்*
*நிரைசேரப் படைத்தவற்றின் உயிர்க்குயிராய்*
*அங்கங்கே நின்றான்"*

என்கின்றார் சிவஞானப் பிள்ளையார்; உயிர்கள் எண்ணற்ற என்பதும், உயிர்க்குயிராய் நின்று அவற்றை இயக்குவோன் பதியாகியபரம் பொருளே என்பதும் இதனுல் உணர்த்தப்பட்டமை காணலாம்.[109]

நன்னேறி மாந்தர் நவையறு நெஞ்சின் இறைவன் எழுந் தருளுவான்:

*"அகனமர்ந்த அன்பினராய் அறுபகை செற்று*
*ஐம்புலனும் அடக்கி ஞானம்*
*புகலுடையோர் தம்முள்ளப் புராணர் புண்டரிகத்*
*துள்ளிருக்கும் புராணர் கோயில்"*

என்று இதனைத் தெளிவாக்குவர் திருஞானசம்பந்தர்.[110] உயிர்கள் பல நிலைகளில் உள்ளன; திருமால்பிரமன் ஆகியோர் யாமே பிரமம் என்று தருக்கித் திரிந்த நிலையில் உள்ள உயிர்களே என்பது திருமுறைக் கருத்து; சீவன் முத்தர்களாக விளங்கும் நல்லுயிர்களும் இவ்வுலகிடையே உள்ளன; அவர்களையும் அவர் களது அகப்பூசையை இறைவன் ஏற்றுக்கொள்வதையும் மூவர் திருவாக்குகள் குறிப்பிடுகின்றன.

பக்குவம் உற்ற நல்லுயிர்களைத் திருமுறையாசிரியர்கள் பாராட்டி உரைக்கும் தொடர்கள் பல:

*"உரைப்பார் உரையுகந்துள்க வல்லார்"*
*"எண்ணியிருந்து கிடந்து நடந்தும் அண்ணலெனா*
*நினையார்"*

"காதல் செய்து களித்துப் பிதற்றி
ஆதல் செய்யும் அடியார்"
'இண்டைகொண்டன்பு இடையறாத தொண்டர்"
"நொச்சியம் பச்சிலையில் நுரைதீர் புனலால் தொழுவார்"

என்பன் சுந்தரர் செந்தமிழ்த் தொடர்கள்.[111]

உழைத்தும் துள்ளியும் உள்ளத்துள்ளே, உரு,
இழைத்தும் எந்தைபிரான் என் றிராப்பகல்
அழைக்கும் அன்பின ராய அடியவர்
பிழைப்பு நீக்குவர் பேரெயிலாளர"
"சுருதங்களாற் றுதித்துத் தூநீராட்டித்
தோத்திரங்கள் பலசொல்லித் தூபம் காட்டிக்
கருதுங்கொல் எம்பெருமான்செய்குற்றேவல் என்பார்க்கு
வெண்டும், வரம் கொடுத்து விகிர்தங்களா நடப்பர்"
"செற்றதோர் மனமொழிந்து சிந்தை செய்து சிவமூர்த்தி
என்றெழுவார் சிந்தையுள்ளால்"
உற்றதோர் நோய்களைந்து இவ்வுலகமெலாம்
காட்டுவான் உத்தமன்"
"தாழ்ந்தோர் கெல்லாம் நலங்கொடுக்கும் நம்பியை"

என்பன அப்பரடிகளின் இரண்டொரு பாடப்பகுதிகள்.[112]

"கையால் தொழுது தலைசாய்த்துள்ளம் கசிவார்கள்
மெய்யலார் குறையும் தீர்க்கும் விமலனார்"
"நல்ல அடியார் மேல் ஊதைத்திரனை நீக்கும் அதுவும்
உண்மைப் பொருள் போலும்"

என்பன பிள்ளையார் திருவாக்குகளிற் சில.[113]

சண்டேசர், மார்க்கண்டேயர், விசயன் முதலியோர் பேரன்புடன் வழிபட்டுப் பேரின்பம் பெறுவதை மூவர் திருப்பாடல்கள் ஆங்காங்குக் குறிக்கின்றன.

## 3. 2. இறுதிப் பேற்றின்பம்

அகப்பூசை செய்து அதன் பயனாக இறைவன் தன் வண்ணமாக்கிப் பேரானந்தப் பெருஞ்செல்வத்தை அளித்தருள அதனைப் பெற்று மகிழும் அருளுடை உயிர்களைத் தேவாரப் பாக்கள் பல

இடங்களிற் குறித்துள்ளன. உயிர்கள் இறுதியில் பெறும் முக்தியை குறிக்கோளை உணர இவ்விடங்கள் துணைபுரியும். எடுத்துக்காட்டாகத் திருஞானசம்பந்தர் திருப்பாட்டொன்று இவ்விடத்துக் குறிக்கப்பெறும் நுட்பமும் திட்பமும் உடையது.[114]

*"பத்திப்பேர் வித்திட்டே பரந்த ஐம்புலன்கள் வாய்ப்*
*பாலே போகாமே, காவாப் பகையனும் வகைநினையா*
*முத்திக்கே விக்கத்தே முடிக்கு முக் குணங்கள் வாய்*
*மூடாவூடா, நாலந்தக் காரணமும் ஒருநெறியாய்ச்*
*சித்திக்கே உய்த்திட்டுத் திசழ்ந்த மெய்ப்பரம்பொருள்*
*சேர்வோர் தாமே தானாகச் செய்யுமவன்''*

### 3.3. உயிர்களின் கடமை-நன்றியுணர்வே :

உடலோடு கூடி வாழும் நிலையிலும், வீடுபேற்று நிலையிலும் பேருதவி புரிகின்ற பெருந்தலைவனாகிய பதியை மறவாது போற்றுவதும் அயரா அன்புகொண்டு அவற்றுள் போற்றுவதும் உயிர்களுக்குரிய கடமையாகும் என்று இவ்வருளாளர்கள் திருவாக்குகளினின்றும் அறியலாம், ஆனால் இக்கடமையைத் தம் அறியாமையால் உயிர்கள் உணர்வதில்லை, அதனால் இறைவனே மலாரிபாகம் உற்றவிடத்துத் தானே திருவருளை வழங்கத் திருவுள்ளம் கொண்டு மெய்யுணர்வு தந்து காத்து நிற்பான்; அத்தகைய பேரருளாளன் திருவுருவத் திருமேனி கொண்டு எழுந்தருளியிருக்கும் திருக்கோயில்களுக்குச் சென்று வழிபடுவதும், அங்குள்ள திருமேனிகளின் பேரழகில் ஈடுபட்டு உணர்ந்து தியானிப்பதும் உயிர்களின் தலையாய கடன் என்பது இம்மூவர் அருள்வாக்குகளினின்று உய்த்துணரப்படும்.[115]

*"வாழ்ந்த வாயும் நினைக்க மடநெஞ்சும்*
*தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்*
*சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே*
*வீழ்த்தவா வினையேன் நெடுங்காலமே''*

என்று திருநாவுக்கரசர் கூறி உருகுவது தமது வாழ்வு நோக்கியது மட்டுமன்று; நமது நிலை குறித்து நைந்துருகுவதுமாகும்.[116]

*"குறிகளும் அடையாளமும் கோயிலும்*
*நெறிகளும் அவர் நின்றதோர் நேர்மையும்*
*அறிய ஆயிரம் ஆரணம் ஓதிலும்*
*பொறியிலீர்! மனம் என்கொல் புகாததே''*

என்று வெளிப்படையாகவும் வினவி அறிவுறுத்துகின்றார்[116]. அவர் பொய்யர் வழிபாட்டைக் கண்டித்து மெய்யன்புத்திறம் வேண்டும் என்றும் அறிவுறுத்துவார்.[117]

''விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல் நட்டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடைய முன்னிற்குமே''

என்னும் திருப்பாட்டில், விஞ்ஞானாகலர், பிரளயாகலர், சகலர் ஆகிய பசுவருக்கத்தினருக்குப் பதியாகிய தலைவன் அருளும் வகையைக் குறிப்பான் உணர்த்துகின்ற திறம் கூர்ந்துணரத்தக்கது; தூய அன்பினால் அவனை முன்னிற்கக் கண்டின்புறலாம் என்பது மறக்க வியலாத அருட்செய்தியன்றோ?

''பிழைகள் தீரத் தொழுமின் கழுக்குன்றமே''
''பெற்றாரைப் பித்தரென்று கருதேன்மின்''
''திருந்தச் சென்று பாடுமின் பத்தருள்னீர்
பழமண்ணிப் படிக்கரையே''

என்று கூறும் சுந்தரர், புலவர்களுக்கு மட்டுமே அறிவுரை கூறும் பதிகம் ஒன்றையும், தம்நெஞ்சிற்குக் கூறுவது போல் உலகினர்க்கே கூறும் பதிகங்கள் மூன்றையும் அருளியுள்ளார்.[118]

உலகினர்க்கு அறிவுரை புகழும் பதிகம் ஒன்றையும், தம்முடைய நெஞ்சிற்கு அறிவுறுத்துமுகமாக உலகத்தாரை நோக்கி உரைக்கும் தனிப்பதிகங்கள் மூன்றையும் அப்பரடிகள் அருளியுள்ளார். உலகினர்க்காகத் தாம் வருந்தி உரைக்கும் அருட்செய்திகளும் அப்பர் தேவாரத்தில் உண்டு. தலங்களுக்குச் சென்று வழிபடுக என்று உயிர்கட்கு நெறிப்படுத்தும் குறிப்புக்கள் எண்ணற்றவை காணப்படுகின்றன.[119]

ஏழு பதிகங்களை உலகினர்தம் அறிவுரைக்கென்றே பாலறாவாயர் ஒதுக்கியுள்ளார்[120]

''ஈசா என்பார்கட்கில்லை இடர் தானே''
''ஆட்பாலவர்க் கருளும் வண்ணமும் ஆதிமாண்பும்
கேட்பான் புகில் அளவில்லை; இளக்க வேண்டா''

"பேரிடர் பெருகியோன் பிணி வரினும்
சீருடைக் கழலாற் சிந்தை செய்யேன்"

என்றெலாம் உரைக்கும் பகுதிகளை உளம்கொள்ள வேண்டும்.

திருவைந்தெழுத்துத் தியானமும், இடையறாது ஓதுவதும் உயிர்கள் செய்யற்பாலன என்பது மூவர் திருவுள்ளம் என்று உணர்தற்கு அவர்கள் அருளிய திருவைந்தெழுத்துப் பதிகங்கள் சான்றாக அமைந்துள்ளன.

## 4.0. பாசம். (தளை) இயல்புகள்:

பாசம் என்ற வடசொல்லிற்குத் 'தளை' என்ற தமிழ்சொல் ஈடாகும்; 'கட்டு' அல்லது' கயிறு' என்பன எளிமையாக வழங்கும் சொற்களாகும்.

"விளையாததொர் பரிசில்வரு பசுபாச வேதனை ஒண்
தளையாயின தவரவ்வருள் தலையன்னது சார்வாம்"

என்ற திருஞானசம்பந்தர் திருவாக்கில் 'தளை' என்ற சொல்லாற் பாசம் குறிக்கப்படுகின்றமை காணலாம்.[121] கந்தபுராணத்தில், ஆன்றதோர் தொல்பதி, ஆருயிர்த்தொகை, வான்றிதழ் தளையென வகுப்பர் அன்னவே'' என்றே கச்சியப்பரும் குறித்தனர்.[122] இதைத்'தடை' என்ற சொல்லாற் குறித்தால் இதன் பொருள் எளிதாக விளங்கும். பாசத்தின் செயலாகிய தடுத்தலைக் குறிக்கும் 'தடை' என்ற சொல்லாற் குறித்தால் அனைவரும் விளங்கிக் கொள்ளலாம் அன்றோ?

வினைத்தடை உயிர்கள் செயற்படுவதற்கு முதற்றடையாகும், அவ்வினைத் தடைக்கு முதலாய் உள்ளது, கூர்ந்து நோக்கினால் அறிவுத்தடையாகும். அறிவுக்குத் தடையாக உள்ளது எது? அறியாமை அன்றோ? இதுவே சைவசித்தாந்தத்துள் 'ஆணவம்' எனக்குறிக்கப்படும்; அறிவிற்கு தடையாக உள்ளது ஆணவம் என்று குறிக்கப்படுவதால், அறியாமை ஆணவத்தின் செயலே என்பது தெளிவாகின்றது. ஆகவே இதுவே 'முதல்தடை' எனல் இனிது விளங்கும்; 'மூலமலம்' எனக் குறித்தல் இதனாலேயே.

## 4.1. ஆணவ நிலை:

ஆணவம் இரண்டுநிலைகளில் அறிவை அறியவொட்டாது தடுக்கும் என்பர்; ஒன்று தான் தனியே நின்று தடுப்பது;

பிறிதொன்று, மாயை கன்மங்களாகிய ஏனையவற்றோடு சேர்ந்து நின்று தடுப்பது முன்னது ஆணவத்தின் தன்னியல்பு; பின்னது அதன் பொது வியல்பு. 'ஆவாரகம்' 'அதோநியாமிகை' (மறைத் தலைச்செய்வது, கீழ்ப்படுத்திவைப்பது) என்ற தத்துவக் கலைச் சொற்கள் இவற்றைக் குறிக்கச் சைவசித்தாந்த ஞான நூல்களுள் பயன்பெறும் அறிவை மறைத்தலும் உணர்வை மறைத்தலும் ஆகிய தொழில்களை ஆணவம் புரிகின்றது. மூவர் தேவார முதல்வர்களும் கூடத் தங்களை அறியாமை உடையவர்களாகக் கூறிக்கொள்வது அவர்கள் நினைக்கின்ற அளவிற்கு அவர்கள் உணர்வு பெருகாதது போல நினைப்பதனாலேயாகும் என்று வல்லோர் கூறும் வாய்மொழி இங்கு எண்ணத்தக்கது.

உயிர்கள் பெறத்தக்க பேரின்பம் இயல்பாக எங்கும் ததும்பி நிற்பவும், அதனை அறிய மாட்டாது வருந்துவது அறிவைத் தடுத்து நிற்கும் ஆணவத்தின் ஆவாரக சக்தியால் என்று ஞான நூல்கள் சாற்றுகின்றன.

*குண்டனாய்த் தலையறித்துக் குவிமுலையார் நாணாது*
*ழிதர்வேனை''*

*"பல்லுரைச் சமணரோடே பலபல காலமெல்லாம்*
*சொல்லிய செலவு செய்தேன்''*

*"ஓதுவித்தாய் முன்னறவுரைகாட்டி அமணரொடே*
*சாதுவித்தாய்''*

போன்று திருநாவுக்கரசர் தம்மேலிட்டுக் கூறிக்கொள்வனவற்றை யெல்லாம், மூலமலத்தால் உயிர்கள் பாதிக்கப்படுவதைக் குறிப்பான் உணர்த்துகின்றன எனக் கொள்ளலாம்.[123] இவ்வாறே சுந்தரர் தம்மைப் பற்றிக் கூறுவனவற்றையும் கொள்ளல் தகும்.

'ஆணவம்' என்ற சொல்லிற்கு 'அணுத் தன்மையைச் செய்வது' என்பது பொருள்; இயற்கையில் விரிந்த உயிரின் அறிவை மிகச் சுருங்கியதாகச் செய்யும் இயல்புடையது என்பது இதனால் தெளிவாகும், உயிரின்கண் பொருந்தி அதற்கு எல்லா வகையிலும் துன்பம் தருவது ஆணவமே யாயினும், அது இருப்பதாகவே ஒருவர்க்கும் புலனாவதில்லை. அக இருளாக நின்று, பிறபொருளைக் காட்டாமல் மறைத்தலோடு தன்னையும் காட்டாது ஆணவம்:

"ஒருபொருளும் காட்டாதிருள் உருவம் காட்டும்;
இருபொருளும் காட்ட திது"

என்று உமாபதி சிவாசாரியார் இதனை விளக்குவர்.[124]

'ஆணவம் உயிர்க்கு உள்ள இயற்கைக் குற்றம்; அது இடையே வந்ததன்று; ஆணவத்திற்குப் பல சக்திகள் உண்டு;' என்பன ஞானநூல் முடிவுகள்.

அரக்கர்கள், அசுரர்களைப் பற்றி உரைக்கும் திருமுறை வாக்குக்கள், ஆணவத்தின் விளக்கங்களே என்று கூறலாம்; ஆம்; தருக்கித் தலைநிமிர்ந்து செய்யத்தகாதனவற்றைச் செய்து சீரழிந்த அவர்களைவிட ஆணவத்திற்கு யாரே சான்றாவர்?

"உணர்விலா அரக்கர்", "குணமிலா அரக்கர்", "கொடியர்" "பாசமும் கழிக்க இல்லா அரக்கர்", "வன்கண்ணர்", போர்வலம் செய்து மிக்குப் பொருதவர்" என்றெலாம் திருநாவுக்கரசர் ஆணவ மல வடிவமாகவே அவர்கள் விளங்கியமையைக் குறிப்பிடுவர்.[125]

"துங்க நகத்தாலன்றித் தொலையா வென்றித்
தொகுதிறலவ் விரணியனை
ஆகம் கீண்ட அங்கதைத் திருமால்"

என்று இரணியனையும்,[126]

"கைவேழ முகத்தவனைப் படைத்தார் போலும்
கயாசுரனை அவனாற் கொல்வித்தார் போலும்"

என்று கயாசுரனையும்,[127]

"சமரமிகு சலந்தரன் போர் வேண்டினானைச்
சக்கரத்தாற் பிளப்பித்த சதுரர்"

என்று சலந்தரனையும்,[128]

"சமரசூரவன்மாவைத் தடிந்த வேற்குமரன்"

என்று சூரபன்மனையும்,[129]

"தாரகன் தன் உயிருண்ட பெண் போத்தன்"

என்று தாரகனையும்,[130]

"வக்கரன் உயிர் வவ்விய மாயற்குச்
சக்கரம் அருள் செய்த சதுரரே"

என்று வக்கரனையும் குறிக்கும் நாவரசர்,[131] இராவணனின் ஆணவம், வீழ்ச்சி இரண்டையும் தம் ஒவ்வொரு பதிகத்தும் கூறி

யுள்ளமை முன்பும் உரைக்கப்பட்டது. பாலறாவாயரும் இராவண னைப் பற்றிக் குறிக்கும் செய்திகள் அனைத்தும் இங்குக் கருதத் தக்கனவே ''குற்றத்திறல் அரக்கன்'', ''வல்லரக்கண்'', வலிசேர் அரக்கன்'', என்றெலாம் சுந்தரரும் இவ்வரக்கனைக் குறிக்கும் பகுதிகள் நினைக்கத் தகுந்தன [132] அவனது வீழ்ச்சிக்கு, ஆணவமே அடிப்படை என்பதைச் சுந்தரர் குறிப்பாக உணர்த்திவிடுகின்றார்; பின்வரும் தொடர்களை இந்த நினைவுடன் காண்க: ''கருதாத அரக்கன்'', ''குற்றத் திறல் அரக்கண்'', ''துன்மதி'' ''மறக்கொன் அரக்கன்.''[133]

## 4,2. கன்ம நிலை :

ஆணவத்தை அடுத்துக் 'கன்மம்' கூறப்படும்; இது 'வினை' என்ற பொருளை உடையது. முடிவாக நோக்கினால், கன்மம் அல்லது வினைக்குப் பற்றுக் கோடு எது? மாயையே; 'மாயை பொருள் ஆதலின் அதன் அசைவே கன்மம்' என்பது சித்தாந்த நூல் முடிவு. கன்மம் காரணநிலை, காரிய நிலை என்ற இரண்டு நிலைகளை உடையது என்பர், காரிய கன்மங்களுக்கு முதலாக மூலகன்மம் என்ற ஒன்று தொல்காப்பியர்க்கு உடன்பாடு என்பதனை மாதவச் சிவஞான சுவாமிகள் தம் பேருரையிற் குறித்துள்ளமை இங்கு நினைக்கத்தக்கது ஆகும்.[134]

வினைகள் பற்றியதிருமுறைச் செய்திகள் ஆழ்ந்துநோக்குதற்கு உரியவை: ''இருள்சேர் இருவினை'' என்று திருவள்ளுவரும் குறித்தனர். சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் என்ற மூவினைகளுள், 'ஊழ்' எனப்படுவதே 'பிராரத்தம்' ஆகும்; பழவினை 'சஞ்சிதம்' ஆகும்; வரும்வினை 'ஆகாமியம்' எனப்படும். திருமுறைகளில், மூவர் திருவாக்குகளில், 'தொல்வினை' என்று கூறப்படுவது சஞ்சித வினை; இது 'பழவினை' என்றும் அருளாளர்களால் பேச பட்டுள்ளது.[135] 'ஊழ்' என்று உரைக்கப்படுவது 'பிராரத்தவினை' உயிர்களால் செய்யப்படும் இவ்வினைகள் இம்மூவகை நிலைகளில் உள்ளன என்பதும், இவை இறைவனை வழிபடுவதால் நீங்கும் என்பதும், மூவர் முதலிகள் வற்புறுத்திக் கூறும் செய்திகள். 'இரு வினை ஒப்பு' நிலையில், உயிர்கள் வினைநீக்கம் பெறுகின்றன.

## 4.3. மாயை நிலை :

'மாயா' என்பவற்றில், மா-ஒடுங்குதல், யா-வருதல் எனப் பொருள் தருவன என்பர்; உலகம் மாயையிலே ஒடுங்கி அதினின்றே

தோன்றும் தத்துவங்கள்; தத்துவங்கள் முப்பத்தாறு; தொண்ணூற்றாறு என்றும் ஒருவகையில் கூறப்படும். இவற்றைப் பற்றிய விவரங்களும் மூவர் திருவாக்குக்களில் காணப்படுகின்றன,

"துருத்தியாம் குரம்பை தன்னில்
தொண்ணூற் றிங் கறுவர், நின்று
விருத்திதான் தருகவென்று
வேதனை பலவும் செய்ய"

"முப்பதும் முப்பத்தாறும்
முப்பதும் இடுகுரம்பை"

"தொண்ணூற்றறுவரும் துயக்கம் எய்த"
"எண்பதும் பத்தும் ஆறும் என்னுளே இருந்து மன்னி"

என்ற நாவுக்கரசர் நன்மொழிகள் முப்பத்தாறு தத்துவங்களுடன், தாத்துவிகங்களையும் கூட்டித் தொண்ணூற்றாறு தத்துவங்களைக் குறிக்கின்றன. [136]

ஆணவம், கன்மம், மாயை என்று மலங்கள் அல்லது பாசங்கள் மூன்றே, ஆயினும், மாயேயம், திரோதாயி என்ற இரண்டையும் கூட்டி ஐந்தாகவும் குறிப்பர். பக்குவம் வராதபோது பாசத்தின் வழி நின்று மறைத்தலைச் செய்கின்ற அதே சக்திதான், பக்குவம் வந்த போது, அருட்சக்தியாக மாறி விளக்கத்தைத் தருகின்றது; எனவே இவை யிரண்டும் வேறல்ல. முத்தி எய்தும் காலத்தில், இவை ஐந்தும் நீங்குகின்றன என்பது உணரத்தக்கது.

### 4.4. பாசநீக்கம்

அவ்வத் தலத்துப் பதிகங்களை ஓதுவதாலும், தலங்களை வழிபடுவதாலும் வினை தீர்கின்றது என்பர் திருமுறையாசிரியர்கள்; சுந்தரரது எடுத்துக்காட்டுகள் சிலவற்றைக் காணலாம்: [137]

"நின்ற வினைக் கொடுமை நீங்க.. திருவாரூர் எய்துவதே"
"நின்ற பாவம் வினைகள் தாம் பல நீங்கவே....
கழுக்குன்றமே"
"ஊரன் சொன்ன பாடல்கள் பத்தும் வல்லார்
தம்வினை பற்றறுமே"
"திருச்சுழியல் மெய்வைத்தடி நினைவார் வினை
தீர்தல் எளிதன்றே"

"அருந்தமிழ் ஐந்தோடு ஐந்தும் வல்லவர் அருவினை
யிலரே"
"விருந்தான சொன்மாலை கொண்டேத்தி வினைபோக"
"ஆரூரன் தமிழ்வல்லார்க்கு அடையா வல்வினை
தானே"
"கண்டியூர் கண்டியூர் என்பீராகில்
கடுகறும் வல்வினையைக் கழற்றலாமே"
"ஒற்றியூர் பாதம் ஏத்தப் பறையும் நம்பாவமே"
"அதிகை வீரட்டத்தானை விரும்பாவரும் பாவ
வேதனையே"

என்பன நாவரசர் நன்மொழிகள்[138]

"ஆப்பனூரானைப் பண்ணின் இசை பகர்வார்
வினைபற்றறுப்பாரே"
"தொடங்குமாறிசைபாடி நின்றார் தமைத்
துன்பநோய் டீடையாவே"
"பாடும் சிறப்போர்பாற் பற்றாவாம் பாவமே"

முதலிய பாலறாவாயர் பாக்களும் வினை நீக்கத்தைவிளம்புவனவே[139]

'வினைசிந்துவான்' 'வினை களைவான்', 'வினைத்தொகை தீர்த்துகந்தான்', 'வினைதேய நின்ற நிமலன்', 'இடர்வினை கெடுப்பவன்', 'வினையவை களைதலை மருவிய ஒருவனார்', 'வினைகள் கெடுத்தருள் செய்ய வல்லான்', 'வல்வினை வீட்டு விப்பான்', 'வினையோடு பக்தித்திருந்த பாவம் தீர்க்கும் பரமன்' — என்றெலாம் சிவஞானப்பிள்ளையார் கூறும் பதியின் பெருமை பேணும் தொடர்களையும்,[140] 'பசுபதி பாவநாசா' 'பண்டனங்கற் காய்ந்தானே பாவநாசா' என்ற அப்பர் தொடர்களையும், பாச நீக்கம் செய்யும் பரமன் திறன் உணர்த்துவன வாகக் கொள்ளலாம்.

## 4.5. முப்பொருள் இயல்புகள் சுருக்கமாக ..

மூவர் அருளிய முப்பொருள் உண்மைகளைக் கூர்ந்து நோக்கி உணர்ந்தால், சித்தாந்தச்செம்பொருள் அவர்களது திருவுள்ளத்தில் நிறைந்து நின்றமை இனிது தெளியப்படும்; மெய்ப்பொருள் நெறியைப் பக்தி நெறியின் வழியே உலகிற்கு அருளுதற்கு வந்த முதல்வ களாதலின் அத்திருவாக்குகளில், அவ்வுண்மைகள் பொங்கித் ததும்பி வழியலாயின என்று கருதலாம். இம்மெய்ப்பொருள் உண்மை

களையே மெய்கண்ட சாத்திரம் பின்னும் வகைப்படுத்தி அளவை நெறிகளான் ஆராய்ந்து தத்துவ நெறியாக ஒழுங்குபடுத்தியுள்ளது என்று கூறலாம். வரலாற்றுப்போக்கில், சைவசமயத் தத்துவ நெறியை ஆராயுங்கால் இவ்வுண்மை மிகத் தெளிவாகப் புலப்படுகின்றது.

முப்பொருள் இயல்புகளையும் ஒரே இடத்தில் தெளிவு படுத்தும் திருநாவுக்கரசர் திருவாக்கு ஒன்று மறவாது உளம் கொளத்தக்கது :[142]

*"சொற்பாவும் பொருள் தெரிந்து தூய்மை நோக்கித்*
*தூங்காதார் மனத்திருளை வாங்காதானை '*

இவ்விடத்து "இருள்" ஒன்றும், இருளை உடைய மனத்தை உடையவர் பலராகவும், அந்த இருளை நீக்குகின்ற தலைவன் ஒருவனும் ஒருசேர உணர்த்தப் பெற்றுள்ள திறம் அறியத்தக்கது.

இவ்வண்ணமே, முப்பொருள் உண்மையை ஒரே இடத்தில், திட்பநுட்பம் செறியச் சிவஞானப் பிள்ளையார் உணர்த்திய திறமும் குறிக்கொண்டு போற்றத்தக்கது [143]

*"விளையாததொர் பரசில் வரு பசு, பாசவேதனை*
*ஒண்*
*தளையாயின தவிரவ் வருள் தலைவன்'*

பசு, பாசவேதனை, தளை, தலைவன் என்ற சொற்களில் இவ்வுண்மை ஒருசேர இலங்குகின்றது. ('தளை' என்ற தமிழ்ச் சொல்லாட்சி அரியது)

### 4.5.1. துறக்க நரகங்கள் பற்றி..

மூவர் திருப்பாட்டுக்களில் சுவர்க்க, நரகம், பற்றிய குறிப்புக் களும், மறுபிறப்பு முதலிய குறிப்புகளும் உள்ளன.

*"துறக்கப்படாத உடலைத் துறந்து வெந் தூதுவரோடு*
*இறப்பன்: இறந்தால் அருவிசும்பும் ஏருவன்;*
*ஏறிவந்து பிறப்பன்"*

*"புள்ளிருக்கு வேளூர் அரன் பொற்கழல்*
*உள்ளிருக்கும் உணர்ச்சி இல்லாதவர்*

நன்னிருப்பார் நரகக் குழியிலே''

என்பன அப்பர் அருள் மொழிகள்.[144]

''பண்ணியல்பாகப் பத்திமையாலே பாடியும் ஆடியும் பயில வல்லார்கள்
விண்ணவர் விமானம் கொடுவர ஏறி வியனுலகாண்டு வீற்றிருப்பவரே''

என்பது முதலிய பிள்ளையார் திருமொழிகளையும் நினைக.[145]

''புலன் ஐந்தும் மயங்கி அகம் குழையப் பொருவேலோர்
நமன் தமர் தாம் நலிய
அலமந்து மயங்கி அயர்வதன்முன்''

என்று கூறும் நம்பியாரூரர் நற்றமிழை ஒப்பிட்டுணர்க.[146]

## 4.6. பணிநிலைகள் நான்கு :

இறைவனுக்குரிய பணிநிலைகளாகிய சரியை, கிரியை, யோகம் ஞானம் பற்றிய எண்ணற்ற குறிப்புக்களும் திருமுறைகளில் விரவி யுள்ளன. இவற்றில் நின்று சிறப்புற்றவர் மேற்கொள்ளும் செயல் களும் விளக்கப் பட்டுள்ளன.

### சமயப்பொறை :

சமயப்பொறையும் சால்பும் மூன்று அருளாளர்களுக்கும் இயல்பாக இருந்தன. சமண பௌத்தர்களைக் கண்டிக்கும் குறிப்புக்கள். அவர்கள் காலத்து வாழ்ந்த வாழ்வில் அவ்வச்சமயக் கோட்பாடுகளைப் பின்பற்றாதோரைக் கண்டிக்கும் குறிப்புக்களாகவே கொள்ளத்தக்தன. சமயப் பொறை மிக்க சான்றோர்களாகிய அவர்கள் பொதுநெறியில் எல்லாச் சமயங்களையும் மதிக்கும் உணர்வுடை யவர்களே ஆவர்:

''அறிவினால் மிக்க அறுவகைச் சமயத்து
அவ்வவர்க்கு அங்கே ஆரருள் புரிந்து''
''விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயம் செய்தே
எரிவினாற் சொன்னாரேனும் எம்பிராற் கேற்தாகும்''
''சமயமே லாறு மாகித் தானொரு சுயம்புவாகி''
''அறுவகைச் சமயம் வைத்தார்''
''சமயமவை ஆறினுக்கும் தலைவன்தான் காண்''

என்ற மெய்ம்மொழிகளை இதற்கு எடுத்துக் காட்டலாம்.[147]

## 4.7. வழிபாட்டில் ஏற்றதாழ்வில்லாப்—பொதுமையறம்

"இறைவனை வழிபடுவதில் ஆண், பெண் என்ற இரு பாலரும் கலந்துகொண்டனர்; தனியாகவும், கூட்டமாகவும் தலங்கள் தோறும் சென்று வழிபட்டனர். திருக்கோயில்களில் வழிபட்டனர். பெண்களுக்கு இறையருள் உண்டு; வீடுபேற்றிற்குரியவர்கள் அவர்கள்". என்ற கொள்கையை மூவர் தேவாரம் விளக்குகின்றது. சமண, பௌத்தர்கள் கடுந்துறவை மேற்கொண்ட சமயக்கட்டளைகளை நியமித்த காலம் அது. மூன்று அருளாளர்களும் பெண்களுக்கும் சமய வாழ்வில் உரிய பங்கு உண்டென்று உணர்ச்சி ததும்பப் பாடியபாடல்கள் தமிழகத்துப் புத்தெழுச்சியை வழங்கிற்று. இறைவன் பால்வேறுபடாது அனைவர்க்கும் பேரருள் வழங்கும் பெருமான் என்று அந்நாயன்மார் மெய்ப்பொருள்நெறியில் காட்டிய புதுமை மக்களை ஈர்த்தது. மங்கையர்க்கரசியார், திலகவதியார், இசைஞானியார். போன்ற பெண்ணரசிகள் மக்கட் சுட்டுடையவராய்ச் சமயப்பெருநெறி பற்றி நின்றனர்; புனிதவதியார் இறைநெறி நின்று பாடிய மூத்த திருப்பதிகமும் மக்கள் அறிந்த ஒன்றாக இருந்தது. ஆதலால் மக்கள் சைவசமய நெறி மாண்புகளையும், இறைவன் திருவருளையும் உணர்ந்து, அற்புத நிகழ்ச்சிகளின் வழியே சைவக் கோட்பாடுகளின் சால்பையும் தெளித்து ஒளிநெறிப் படரலாயினர்; புறநெறி செல்வாக்கு மெல்லமெல்ல வீழ்ந்தது. இறையருள் பெறுவதற்குப் பால்வேறுபாடு இல்லாதது போன்று பொருளாதார, சமூக ஏற்றத் தாழ்வுகளும் தடையாக நிற்க மாட்டா என்ற விரிந்த கோட்பாட்டிற்கும் இப்பெருமக்கள் வித்திட்டனர். இதுமட்டுமன்றிச் சாதி,குல வேறுபாடுகளை அறவே கண்டித்து, இறையருள் நெறிக்குக் குறுகிய பிரிவினைகள் வேண்டா அறிவுறுத்துவராயினர். தாழ்த்தப்பட்டவர்களுக்கும் சிவநெறி பின்பற்றப்படும் எளிமையும் உரிமையும் உண்டு என்ற இவர்களது கொள்கை உறுதி மக்கள் உள்ளங்களில் பதிந்தது, வெறும், சடங்குகளைச்செய்வதிலேயே காலம் கழித்துக் கொண்டிருக்ககூடாது என்றும், உண்மையான வழிபாடும் தொண்டுமே இறைவன் திருவருள் இன்பத்திற்கு வழிகாட்டுவன என்ற நெறி தமிழகத்து மக்கட் சமுதாயத்திற்கு பேரின்பம் ஊட்டியது; 'ஆடல் நெறி' 'பாடல் நெறி' என்பவற்றோடு, இப்பெருமக்கள் பின்பற்றி நெறிகாட்டிய

'உழைப்புநெறி' அல்லது 'தொண்டுநெறி' மக்களுக்கு எழுச்சி ஊட்டுவதாக இருந்தது. இறைவனது எளிமையும், உயிர்களுடைய உரிமையும் மிகத் தெளிவாக நினைந்து போற்றப்பட்டன. இவை யனைத்தும் எளிய—இனிய—பேச்சுத்தமிழும்—ஒலிநயமும் வாய்ந்த பண்ணிசைப் பாடால்களாக வெளிப்பட வெளிப்பட, அவற்றின் எதிரொலி நாடெலாம் எழுந்தது; சிற்றூர்கள் தோறும் நடந்து நடந்து 'பாத யாத்திரை' செய்த உண்மையான மக்கள் தலைவர் களாக இவ்வருளாளர்களைப் போற்றினர்.

## 4.8 பெண்களின் பெருமையும் வழிபாடும்

பெண்குலத்தினரும் பெருமானை வழிபட்டு இன்புற்றனர். சமுதாயம் சிவநெறி நிற்கும் உறுதிக்குத் தாய்க்குலவன்றோ அடிப்படையாக இருப்பது!

*"கோல விழாவின் அரங்க தேறிக் கொடியிடை*
*மாதர்கள், மைந்தரோடு*
*பாலெனவே மொழிந்து ஏத்தும் ஆவூர்"*

என்று ஆவூர் என்ற சோழநாட்டுச் சிற்றூரில் ஏற்பட்ட இந்த மாற்றத்தைத் திருஞானசம்பந்தர் பதிவு செய்துள்ளார் தம்திருப் பாட்டில்.[148] அரங்கேறி நடனமாடும் சிவநெறிப் பெண்களைத் திருவையாற்றிலும் கண்டார்; காட்டுகின்றார்;

*"அரங்கேறிச் சேயிழையார் நடமாடும் திருவையாறே"* என்றும்
*"அஞ்சொலார் அரங்கெடுக்கும் ஆரூர்"* என்றும் பாடு-

கின்ற பகுதிகளைக் கண்டின்புறுகின்றோம்.[149]

பெண்கள் ஆடும் ஆடலோடு அரன் புகழ் பாடினர்; இனிய கீதங்-கள் இசைத்தனர்; ஆடவரும் பெண்டிரும் இணைந்து பாடி மகிழ்ந்தனர். மாளிகை மீதிருந்து பாடிமகிழ்ந்தனர்; குறிஞ்சிப் பண் பாடி முருகனை ஏத்தினர். என்று வரும் குறிப்புக்கள் இவ்-வருளாளர்களது சிவநெறிக் கொள்கைகள் தாய்குலத்தோர்வழித் தழைத்துச் செழித்த தன்மையயன்றோ காட்டுகின்றன!

அகில், தூபம் இட்டுத் திருக்கோயிலிலும் வழிபாட்டுநெறி யைப் பின்பற்றினர் பெண்டிர், இளங்காலையிலேயே திருக்கோயில் புகுந்து தொழுதனர்; கூட்டமாகக் கூடிச்சென்று கூட்டுவழிபாடும்

புரிந்தனர் தம் துணைவருடன் சென்று திருமணமான மங்கலப் பெண்டிர் சென்று பெருமானை வழிபட்டனர் நள்ளிருளிலும் சென்று (அர்த்த யாம வழிபாடோ?) வழிபாடு செய்தனர் மலர் புனல், தூபம், சந்தனம் ஏந்திச் சென்றனர் என்றெலாம் வரும் குறிப்புக்கள், பக்திநெறி இயக்கம் தமிழகத்தில், புறச்சமய வரவால் இடையே தடைப் பட்டுக் கிடந்த நிலைமாறிப் புத்துயிர்ப்புப் பெற்ற மைக்குச் சான்றுகள்.

சிவநெறித் திருவிழாக்களையும் பெண்கள் மீண்டும் புது மகிழ்ச்சியுடன் கொண்டாடி மகிழலாயினர். கார்த்திகை விளக்கீடு நிகழ்த்தப்பட்டது; இளம்பெண்கள் திருவிளக்கேற்றி மகிழ்ச்சி கொண்டனர்; ஒளிநெறியே சிவநெறி என்று உணர்ந்தனர். திங்கள் நாள் விழா நிகழ்ந்தது; பெண்கள் திருவிழாக்களில் பாடிப் பொன் னும் மணியுமாகிய பரிசுகள் பெற்றனர்; திருவிழாநிகழும் காலங் களில், இசைக்கருவிகள் முழங்கின; மகளிர் ஆடினர் தைப்பூச விழாவில் நெய்யுணவு உண்டும் உண்பித்தும் மகளிர் வழிபட்டனர் இவ்வாறு வரும் திருமுறைக் குறிப்புக்கள், சமண பௌத்தக் கடுந் துறவுக் கோட்பாட்டின் சரிவையும், சிவநெறிக்கோட்பாட்டின் சல்வாக்கையும் வெற்றியையும் அன்றோ கோடிட்டுக் காட்டு-கின்றன! ஒரு பெரிய மாற்றம்—சமுதாய மனநிலைப் போக்கில்—இவ்வருளாளர்கள் வரவால் இடைக்காலத் தமிழகம் அடைந்திடும் நிலையைக் குறிப்பதாகவே இவற்றைச் சிந்திக்க வேண்டி யிருக்கின்றது!

"மாதர் சதிபட நடமாடி உரிய நாமங்கள் ஏத்தும்"
"ஏலமலி குழலார் இசைபாடி எழுந்து"
மாதர் மைந்தர்களோடும் பாலெனவே மொழிந்து
ஏத்தும்"

"நாடகமாக ஆடி மடவார்கள் பாடும் நறையூர்"
"மடகார்கடி குறிஞ்சியதுபாடி முருகனது பெருமை
பகர் முதுகுன்று"
பூவார் குழலார் அகில் கொண்டு புகைப்ப"
தூமொழியார் காலையே புகுந்திறைஞ்சிக் கைதொழ
"மையணி கண்மடவார் பலர்வந் திறைஞ்ச"

'மடந்தைமார் துணைவரொடும் தொழுதேத்தி
வாழித்த''

''நன்னிருள் மகளிர் நின்றேத்த''

''புனலொடு தூபம் சாந்தமும் ஏந்திய கையினராகிக்
கன்னியர் நாடொறும் வேடமே பரவும் கழுமலமே''

''தொல்கார்த்திகை நாள் தளத்தேந் திளமுலையார்
தையலார் கொண்டாடும் விளக்கீடு''

''அரிவையர் ஆடல் பேணத் திங்கள் நாள்விழமல்
திருநெல்வேலி''

''மாதர் சொற்கவிபாட நிதானம் நல்கப் பற்றிய
கையினர்''

''நெய்ப்பூசம் ஒண்புழுக்கல், நேரிழையார் கொண்
டாடும் தைப்பூசம்''

முதலிய தேவாரக் குறிப்புக்கள், இம்முடிவுகளுக்கான அடிப்படைச் சான்றுகளாக நிற்கின்றன.[160]

## 4.9. ஈரெழிற்கோலம் (அர்த்த நாரீசுவரர்)

பெண்குலத்தின் பெருமை பேணவும், மாண்பினைப் போற்றவுமே இப்புத்தெழுச்சியைத் தோற்றுவித்தனர் போலும் இப்பெருவிமக்கள், ''பெண்ணில் நல்லாளொடும் பெருந்தகை இருந்த'' திருக்கோலமாகிய அர்த்த நாரீசுவரத் திருமேனியை எண்ணற்ற பதிகளில் எடுத்துப் போற்றினர். சிவநெறிக்குப் பதியாகிய தலைவனே தன் திருமேனியில் ஒரு பங்கை உமையம்மைக்குத் தந்த பேரருளாளன் என்ற உண்மையை மூவரும் ஒருசேர உணர்த்தியமைக்குக் காரணம், அன்னையும் அத்தனுமாகிய பெருமான் அருட்கருணையை உலகிற்கு உணர்த்துவதற்கேயாம்.

''அம்மையப்பரே உலகுக் கம்மையப்பர் என்றறிக
அம்மையப்பர் அப்பரிசே வந்தளிப்பர்—அம்மையப்பர்
எல்லாம் உலகுக்கும் அப்புறத்தர் இப்புறத்தும்
அல்லார்போல் நிற்பார் அவர்''

என்று சாத்திரத் தொன்னூலாகிய திருக்களிற்றுப் படியாரும் இந்தப் பேருண்மையை முதற்கண் வைத்துச் சாற்றலாயிற்று.[161]

ஐங்குறுநூற்றின் கடவுள் வாழ்த்துப்பாட்டு இக்கருத்தையே பின்வருமாறு உணர்த்துகின்றமை உணரத்தக்கது.

*''நீலமேனி வாலிழை பாகத்து*
*ஒருவன் இருதாணிழற்கீழ்*
*மூவகை யுலகும் முகிழ்த்தன முறையே''*

அப்பரடிகளார் திருவையாற்றிற் கண்ட காட்சி, திருக்கயிலையில் காணப்பட்ட அம்மையப்பர் திருவுருவக் காட்சியே ஆகும் என்பது திருத்தொண்டர் புராணத்தால் தெளிவாகும் செய்தியாகும்.

*''வெள்ளி வெற்பின் மேல்மரகதக் கொடியுடன் விளங்கும்*
*தெள்ளு பேரொளிப் பவள வெற்பென இடப்பாகம்*
*கொள்ளு மாமலையாளுடன் கூட வீற்றிருந்த*
*வள்ளலாரை முன் கண்டனர் வாக்கின் மன்னவனார்''*

திருஞானசம்பந்தர் பிரமதீர்த்தக் கரையிற் கண்டது இவ்வெழிற் கோலக்காட்சியேயாகும். இயல்பாகவே பாசங்களின் நீங்கிய முதல்வன், அறிவுருவாக விளங்கும் முதல்வன், ஒன்றினும் தோய்தலின்றித் தன்னை மாத்திரம் விளக்கி நிற்கும் தன்னுண்மை நிலையில் 'சிவம்' எனப்படுவான், உலகெலாம் ஆகி, வேறாய், உடனுமாய் உயிர்களின் வழி நிற்கும் தன்மையில் 'சக்தி' எனப்படுவான். பின் ஐந்தொழில் செய்யும் தன்மையில், 'பதி' எனப்பெயர் பெறுவான், இவ்வாறு தெளிவு படுத்துகின்றன சிவநெறி ஞானப்பனுவல்கள்.[151A]

திருஞானசம்பந்தரும் தம் அருட்செய்தியை இந்த அம்மையப்பர் திருககோலத்தால் விளக்கும் திருப்பதிகங்கள் நான்கினை அருளினார்;[152] அர்த்தநாரீசுவரர் ஈரெழிற் கோலத்தை சிந்தித்துய்வதற்கென்றே ஒரு தனிப்பதிகத்தையே அருளினர்.[153] ''தோடுடைய செவியன்'' என்றெடுத்துத் திருத்தோணியப்பர் அம்மையுடன் எழுந்தருளிவந்த செம்பொருட் காட்சியைக் கண்ணாரக் கண்ட கவுணியர் பெருந்தகை தம் கவிதைகளால், அப்பீடுடைத் திருக்காட்சியைப் பெரிதும் எடுத்தோதியுள்ளமை இயல்பேயன்றோ?

சுந்தரரது குறிப்புக்கள் திருஞானசம்பந்தருடைய குறிப்புக்களை நோக்க, 'ஈரெழிற்கோலம்' பற்றியவை அளவிற் குறைவே, அப்பரடிகளார், சிவஞானப்பிள்ளையாரைப்போன்றே இத்திருவுருவ எழிலில் பெரிதும் ஈடுபட்டுள்ளனர். முன்னே குறிப்பிட்டபடி

இருவரும் புறசமயப்பிடியிலிருந்து தமிழகச் சிவநெறியை மீட்டும் புத்துயிர்புத்தரவந்த பெருமக்களாதலின், இக்கோட்பாடு தழுவிய குறிப்புக்களை மிகுதியும் எடுத்தோதிப் பரவினர் என்று எண்ண இடம் உள்ளது; சுந்தரர் காலத்தில் இக்குறிப்புகளைக் மிகுதியாக எடுத்தோதி வேண்டிய சூழ்நிலை மெல்ல மெல்லக் குறைந்து விட்டது என்று கருதலாம்.

அப்பரடிகளார், அருளும் அம்மைப்பார் திருக்கோலத் திருகோலத்தனிப்பாடல் ஒன்று, ஓதிமகிழ்வதற்கேற்ற-நினைந்து உருகுவதற்கேற்ற திருப்பாட்டாக ('தியான சுலோகம்') உள்ள மையின் அதனை மட்டும் இங்குக் கண்டு மகிழலாம்;[164]

*''புதுவரி பொன் செய்ஓலை ஒருகாதோர் காது*
*சுரிசங்கம் நின்று புரள,*
*விதிவிதி வேதகீதம் ஒருபாடு மோத*
*மொருபாடு மெல்ல நகுமால்*
*மதுவிரி கொன்றை துன்னு சடையாக மாதர்*
*குழலபாக மாக வருவர்*
*இது இவர் வண்ண வண்ணம் இவள் வண்ண வண்ணம்*
*எழில்வண்ண வண்ணம் இயல்பே''*

## 4.10. சமயமும் தத்துவமும் ஒருமைப்படல் :

மூவரது திருப்பாட்டுக்களில் உள்ள இறை, உயிர், உலகு பற்றிய குறிப்புக்களை அடிப்படையாகக் கொண்டு, இவர்கள் காட்டிய மெய்ப்பொருள் நெறியை ஆராய்கின்ற பொழுது, சைவ சமயம் தத்துவநெறியாகவும், பக்திநெறியாகவும் ஒருசேரமலர்ந்த திறத்தினைக் காணமுடிகிறது. மெய்ப்பொருள் உண்மைகளின் மெய்ம்மையைப் பேணிக்காக்கச் சமயம் என்ன செய்ய முடியுமோ அதனைச் செய்து முடித்தது; அவ்வாறே சமயத்தை உலகம் தழுவிய ஒன்றுக (universal) நிலைபெறுவிப்பதற்குத் தத்துவநெறி என்ன செய்ய முடியுமோ அதனைச் செய்து முடித்தது என்று கூறுவது பொருந்தும் சைவநெறி சமயநிலையிலுப், தத்துவநிலையிலும் விளக்கம் கண்டு திகழ்வதற்கு இடைக்காலம் துணை நின்றது. அன்புச் சமயமே சைவசமயம்; மெய்மைத்தத்துவமே சைவ சமய

தத்துவம்.[155] ஆம்; இப்படித்தான் முடிவெடுக்கத்தோன்றுகின்றது இத்திருமுறை மெய்ப்பொருட் சிந்தனை.

### 4. 11. ஒரு மரபு விளக்கம் 8

சரியை. கிரியை, யோகம் என்ற ஒவ்வொரு நெறியே மூவர்க்கும் உரியது என்று கூறுவது மரபாக உள்ளது; ஆனால் ஒவ்வொருவர் நெறியிலும் ஏனைய நெறிகள் இல்லாமல் இல்லை. ஆகவே, இம்மரபுக் கூற்று இவர்கள் திருவாக்குகளில் காணப் பெறும் பெரும்பான்மைக் கருத்துவழி நிற்பது என்றே கொள்ள வேண்டியிருக்கிறது.

*"சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்திர மார்க்கம்*
*தாதமார்க்கம் என்றும் சரங்கரனை அடையும்*
*நன்மார்க்க நாலவைதாம் ஞான யோக*
*நற்கிரியா சரியையென நவிற்றுவதும் செய்வர்*
*சன்மார்க்க முத்திகள்தாம் சாலோக்கிய சாமீப்ய*
*சாரூப்பிய சாயுச்சிய மென்று சதுர் விதமா*
*முன்மார்க்க ஞானத்தால் எய்து முத்தி*
*முடிவென்பர் மூன்றினுக்கு முத்திபத மென்பார்"*[156]

இந்நான்கு நெறியாளர்க்கும் பதமுத்தி பதமுத்தி என்று முத்தி நிலையிலும் வேறுபாடு கூறப்பட்டுள்ளமை காணத் தக்கது.

*"நண்ணரிய சிவானந்த ஞானவடிவேயாகி*
*அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்ட அரசினிதிருந்தார்"*
*"நாதனெழில் வளர்சோதி நண்ணியதனுட் புகுவார்*
*போதநிலை முடிந்த வழிப்புக் கொன்றி உடன்ஆனார்"*

என்று நாவுக்கரசர், ஞானப்பிள்ளையார் முத்திநிலைகளைக் சேக்கிழார் சுட்டுவது நினைக்கத்தக்கது.[157]

புறத்தொழில் மாத்திரத்தால் உருவத்திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடே சரியை; (தாசமார்க்கம்) புறத்தொழில் அகத் தொழில் என்னும் இரண்டாலும் அருவுருவத்திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடே கிரியை; (சற்புத்திரமார்க்கம்) அகத்தொழில் மாத்திரத்தால் அருவத்திருமேனியை நோக்கிச்செய்யும் வழிபாடே யோகம் (சகமார்க்கம்) புறத்தொழில், அகத்தொழில் இரண்டும் இன்றி, அறிவுத்தொழில் மாத்திரத்தால், அம்மூன்று திருமேனிக்கும் மேலாய் எங்கும் நிறைந்து நிற்கின்ற சிவபிரானிடத்திற் செய்யும்

வழிபாடே ஞானம்; (சன்மார்க்கம்) என்பது மாதவச்சிவஞான சுவாமிகள் சித்தியார்க்கெழுதிய பொழிப்புரையில் தெரிவித்துள்ள வரையறை[158] இவ்வருளாளர்களை இவ்வாறு ஒருநெறிக்குரியவர்களாகக் கருதுவது பொருத்தம் இன்று என்பது இங்குக் குறிக்கப்பட்ட இவற்றால் தெளிவாகும், இறையருள் பெறுவதற்கு, இந்நெறிகள் ஒவ்வொன்னுமே ஏற்றது என்பதும் அவரவர் பக்குவத்திற்கேற்றவாறு இவற்றுள் நின்று உயர்நிலை பெறுவதே தக்கது என்பதும், இவ்வருளாளர்கள் அருட்செய்திகளை உய்த்துணருங்கால் கொள்ளவேண்டியவை. தம்மை உணர்ந்து, தமையுடைய தலைவனை உணர்ந்து தம்மைச் சுற்றியுள்ள தடைகளினின்று, இறையருளால் விடுபட்டு இறைவன் திருவடிகளைத் தோய்ந்து இன்புறுவதே உயிர்களின் கடன் என்று சுருங்கக் கூறலாம்.[158 A]

## 5. நன்றி நவிலல் :

மூவர் தேவாரக் கருத்துக்களில் வாழ் நாளெலாம் மூழ்கித் திளைத்த தமிழ்க்கடல் இராய, சொக்கலிங்கனார் அவர்கள் திருமுறை அறக்கட்டளைச் சொற்பொழிவாற்ற இவ்வாண்டு ஐந்தமிழ் விழாவில், என்னைத் தேர்ந்தெடுத்தமைக்கும், இவ்விரண்டு நாட்களிலும், என்னுடைய சிந்தனைகளை — இலக்கியப்பார்வையிலும் மெய்ப்பொருட் பார்வையிலுமாக அமைந்த தேவாரச் செய்திகளை அவ்வருளாளர்களின் அருளிச்செயல்களையே முதன்மை ஆதாரங்களாகவும், ஏனைய சான்றோர் கருத்துக்களைத் துணைமை ஆதாரங்களாகவும் கொண்ட விரிவுரைக் குறிப்புக்களை இருந்து செவிமடுத்து என்னை மகிழ்வித்துப் பயன் கொண்ட எல்லோர்க்கும் குறிப்பாகத் தம்முடைய பல்வேறு அலுவல்களுக்கிடையே இருந்து கேட்டுச் சிறப்பித்த துணை வேந்தர் அவர்களுக்கும் தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் தமிழண்ணல் அவர்களுக்கும், தமிழ்த்துறைப் பேராசிரியர், ஆய்வாளர் அனைவர்க்கும் என் நன்றியறிதல்களைத் தெரிவித்துக் கொண்டு என்பணியை நிறைவுசெய்து மகிழ்கின்றேன்.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரம் ஆகிய அருளாளர்களின் திருவடிகட்கும், அங்கையற்கண்ணியோடுறையும் ஆலவாய்ச் சொக்கர் அடிமலர்கட்கும் என் மனமொழி மெய்களால் ஆகிய வணக்கங்களைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஒங்குக
ஆழ்க தீயது எல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே"[169]

## அடிக்குறிப்புக்கள்

1. கம்பராமாயணம் — காட்சிப்படலம்

2. "The hymns of Ganasambandar, Appar and Sundaramurti form a rich and varied treasure house of religious experience telling of mystical raptures and ecstacies, of moments of light when there is a vision of God and the world is transfigured in the Light of his love, and of periods of gloom when all his dark and the blind seeker is filled with a sense of fear" — K.A. Nilakanda Sastri, "The Culture and History of the Tamils", p.III.

3. "Caivism is the old pre-historic religion of South India; essentially existing from pre-Aryan times and holds away over the Tamil people. But this great attempt to solve the problems of God, Soul, humanity, nature, evils, suffering and the unseen World has never been expounded in English.... The great revival and spread, however, caivism is due to certain Saints or devotees, who were men of great devotion, unwearied activity, and remarkable power" (Samaya Kuravar Santana Kuravar)—G.U. Pope; quoted by M.S. Puranalingampillai, "Tamil India" [1927] — p.63

4. "Bhakti as expressed in a beautiful poem, was born on the banks of Tamil land, grew into Womanhood in the Maratha Country and in the North India, to become old in Gujarat' —Krishna Swamy Iyangar, "Early History of Vaishnavism in South India" — p.10

5. T.P. Meenakshisundaram, "A History of Tamil literature" pp. 70-71

6. "The tree of civilization has its roots in Spiritual values which most of us do not recognize. Without these roots the leaves would have fallen and left the tree a lifeless stump. In the history of civilization it has been the privillage of Asia to enrich the mind of the World with the noblest content of Spritual Values" — Sir S. Radhakrishnan, Preface to "The Dhammapada" (with introductory, essays pali Text, English translation and nobles) [1954]

7. "The Saiva Siddhanta philosophy is the choicest product of the Dravidian intellect. It is the most elaborate influential and undoubtedly the most intrinsically valuable of all the religions of India. It is peculiarly the South Indian and Tamil Religion" —Dr G.U. Pope.

8. திருநாவுக்கரசர் — 6-50-7.; 4-4-10; 5-46-7.

9. மேற்படி — 6-78-5.

10. திருத்தொண்டர் புராணம் — திருஞானசம்பந்த நாயனார் புராணம் —பா. 1957 (சமாசப் பதிப்பு—)

11. மேற்படி — 1964

12. மேற்படி — 1965

13. மேற்படி — 1966

14. மேற்படி — 1967

15. மேற்படி — 1971

16. மேற்படி — 1972

17. சொ. சிங்காரவேலன், "திருஞானசப்பந்தரின் இயற்பெயர் யாது?"
ஞானசம்பந்தம் — (1979)

18. திருத்தொண்டர்புராணம்—திருஞானசம்பந்த நாயனார் புராணம்—பா 1973

19. மேற்படி — 1974, 1975

20. திருத்தொண்டர் புராணம் 1975, 1976
21. மேற்படி — 1978
22. மேற்படி — 1978, 1979
23. மேற்படி — 1979
24. மேற்படி — 1980, 1981, 1982
25. திருத்தொண்டர்புராணம் — திருநாவுக்கரசு நாயனார்புராணம் புராணம் — பா. 1329
26. மேற்படி — 1333
27. மேற்படி — 1334
28. மேற்படி — 1335
29. மேற்படி — 1337
30. மேற்படி — 1340
31. மேற்படி — 1341
32. மேற்படி — 1343
33. மேற்படி — 1344
34. மேற்படி — 1345
3ς. திருத்தொண்டர் புராணம் —தடுத்தாட்கொண்டபுராணம்—188
36. மேற்படி — 194
37. மேற்படி — 196
38. திருவாசகம்
39. திருத்தொண்டர் புராணம் தடுத்தாட்கொண்ட புராணம்—213
40. மேற்படி — 214
41. மேற்படி — 218
42. மேற்படி — 220
43. திருநாவுக்கரசர் — 1060

43A "செம்பொருள்" என்ற தமிழ்ச்சொல் 'சத்' என்ற வடசொல்லாற் பெறம்படும் பொருளைத் தருவது; "சிறப்பென்னும் செம்பொருள் காண்பதறிவு" என்று திருவள்ளுவரால் இது பயன்படுத்தப் பெற்றமையும் காண்க.

44. திருநாவுக்கரசு — 2873
45. மேற்படி — 72
46. சுந்தரர் — திருத்தொண்டத்தொகை — 4
47. காஞ்சிப்புராணம் — திருநெறிக்காரைக்காட்டுப் படலம் 23
48. Vide, Dr. C. Singaravelan — Dictionary of Appar Tevaram, Vol II
49. Ibid.
50. Ibid.
51. Ibid.
52. Ibid.
53. Ibid.
54 திருஞானசம்பந்தர் — 307
திருநாவுக்கரசர் — 4—11.
சுந்தரர் —

54A. உமாபதி சிவாசாரியார் தொகுத்துள்ள திருமுறைத்திரட்டு, திரு. மா. வே. நெல்லையப்பப்பிள்ளை உரையுடன் வெளி வந்துள்ளது; பன்னிரு திருமுறை வரலாற்று ஆசிரியர் திரு.க. வெள்ளைவாரணனார் உரையுடன் வெளிவந்துள்ளது இக்கருத்துரை எளியது; இனியது.
பதிமுதுநிலைக்கு எடுத்துக்காட்டப் பெற்ற திருமுறைப் பாக்கள் 15; இவ்வாறே 12, 6, 8, 7, 14, 12, 5, 4, 16 — என்ற முறையில் தொகுக்கப் பெற்றுள்ளன. தொகுக்கப் பட்டுள்ள முறை ஓர் ஒழுங்கான அமைப்பில் இல்லாமை கூர்ந்துச் நோக்கி சிந்திக்கத்தக்கது.

55. திருக்குறள் — கடவுள் வாழ்த்து — 9
56. "திருக்குறள் துலக்கும் ஒழுக்கநெறி" சென்னைப் பல்கலைக்கழக டாக்டர் இரா.பி. சேதுப்பிள்ளை வெள்ளிவிழா நினைவு அறக்கட்டளைச் பொற்பொழிவு நூல், (1971)—பக். 75
57. மேற்படி — பக். 77

58. திருஞானசம்பந்தர் — 214—6
59. மேற்படி — 132—4, 293—3, 138
60. திருநாவுக்கரசர் — 4—95—2; 4—48—2; 4—48—4; 4—37—9; 6—2—6; 6—4—3; 6—17—1
61. மேற்படி — 4—92—5.
62. சுந்தரர் — 66; 88—10; 20—3, 70—3; 18—8; 22—1; 7—4; 12—3; 12—3; 94—10; 64—3; 51—8; 64—7; 22—1
63. திருத்தொண்டர் புராணம் — 2065; 2317; 2423; 2888.
64. சுந்தரம் — 24—9; 26—4; 52—4; 27—2; 47—1
65. திருநாவுக்கரசர் — 4—62—8
66. திருவருட்பயன் — பதிமுதுநிலை — 6
67. சி. அருணைவடிவேலு முதலியார் — ''முப்பொருள் இயல்பு'' (1976) பக் 67
68. திருநாவுக்கரசர் — 6—98—5; 5—100—2; 5—100—3.
69. மேற்படி — 88—9; 307—8; 48—2; 88—2; 297—3; 210—28; 261—9
70. மணிமேகலை 27:— 89—95 வரிகள்
71. திருஞானசம்பந்தர் — 253—8; 175—3; 310—2; 143—3
72. மேற்படி — 238—5; 11—4; 184—3
73. திருநாவுக்கரசர் — 134—2; 228—9; 311—6; 263—1; 307—10
74. சுந்தரர் — 80—3; 84—3; 53—1; 40—4.
75. திருஞானசம்பந்தர் — 173—7; 167—7; 253—9: 285—2 முதலியன.
திருநாவுக்கரசர் — 296—3; 107—1; 236—7; 299—6 முதலியன.
சுந்தா3 — 16—2; 22—4; 62—7; 38—6 முதலியன.
76. சுந்தரர் — 70—6
77. இராய. சொ. ''தேனும் அமுதும்'' (1955) —முன்னுரை
78. சுந்தரர் — 54—3, 84—3, 67—1 முதலியன

79. திருநாவுக்கரசர் — 267–3, 250—3 முதலியன
80. திருஞானசம்பந்தர் — 228—2. முதலியன
81. திருத்தொண்டர்புராணம் — 1345
82. மேற்படி — 1980
83. மேற்படி — 2915, 1970, 2385, 2487, 220,
1972 4150
84. திருநாவுக்கரசர் — 4·94–1; 9—95–1; 4—32–8; 4—112–30
84. திருஞானசம்பந்தர் — 84—5; 223—3,
85 சிவஞானசித்தியார்
86. சிவஞானபோதம் — 11 ஆம் சூத்திரம்
87. திருநாவுக்கரசர் – 6—95—30
88 மேற்படி — 5—26–3; 6—91—1; 6—89—1; 6—43—1'
6—84–4
89. மேற்படி — 6—1—5; 6–40–7; 4—94—1
90. திருஞானசம்பந்தர் — 240—10; 38–3; 118–6
91. சுந்தரர் — 92–8; 92–8; 62—1; 70—9; 51–8;
56–4; 56—3; 24—9; 58—2
92. திருஞானசம்பந்தர் — 11–2
93. சிவஞானசித்தியார் —90
94. சுந்தரர் –56—3; 56–8; 23-3
95. திருநாவுக்கரசர் — 4—99—1
96. சுந்தரர் 47–8
97. மேற்படி — 55—4
98. i) திருநாவுக்கரசர் —6—95–8; 6–80—5; 5—16–8; 5—38-1

ii) தமிழ்க்கடல் இராய.சொ. அவர்கள் "அப்பர் பாமாலை" என்ற நூலொன்று தொகுத்துள்ளார்கள்; 150 பாட்டுக்களை அப்பர் தேவாரத்தின் மூன்று திருமுறைகளிலிருந்தும் தொகுத்து, அவற்றிற்குக் குறிப்புரையும் வரைந்துள்ளார்கள். இந்நூலில் அவர்கள் ஈடுபட்ட பாட்டுக்கள் பெரும்பான்மையும்,

இவ்விரண்டு விரிவுரைகளிலும் இடம் பெற்றிருக்கின்றமை கண்டின்புறலாம்.

99. திருநாவுக்கரசர்—6-50-3; 4—10-3; 4-26-3; தம்முடைய யோக அநுபவத்தைக் 'கைகண்ட யோகமே' என்று கூறிக் களித்தலும் உண்டு (5-81-5)

100. மேற்படி — 4-29:4; 4 40 - 8; 5-2-1; 4-178; 6 66-7; 6-8-5; 4-113-5

101. திருஞானசம்பந்தர் — 291 – 9

102. திருநாவுக்கரசர் — 6-23-1

103. மேற்படி — 4 9-12

103. A (i) சிவஞானசித்தியார் — சூ. 98.1.

(ii) இதனை உமாபதி சிவாசாரியாரின் கீழ்வரும் சிவப்பிரகாச'ச் செய்யுள் (55) இனிது விளக்கும் :

*"பாசமா ஞானத்தாலும், படர்பசு ஞானத்தாலும்*
*ஈசனை அறியவொண்ணாது; இறையருள் ஞானம் நண்ணித்*
*தேசுறும் அதனால் முன்னைச் சிற்றறிவொழிந்துசேர்ந்து*
*நேசமோடுயர் பரத்து நிற்பது ஞான நிட்டை"*

104. "முப்பொருள் இயல்பு" -பக்,8

105. திருநாவுக்கரசர் — 6—11–5; 4-4-2; 6-44-4 6—23–8; 6–44—40

106. சுந்தரர் – 52–6; 56—8; 23—8,

107. திருவாசகம் — திருவெம்பாவை — பா 2.

108. உமாபதி சிவாசாரியார் — சிவப்பிரகாசம் ....13

109. திருஞானசம்பந்தர் —132—4.

110. மேற்படி — 132 – 6

111. சுந்தரர் — 92—4; 11–2; 41—9; 94–2; 98—3

112. திருநாவுக்கரசர் — 129–8; 248—8; 225—9; 233—6

113. திருஞானசம்பந்தர் —196—3; 69—3

114. மேற்படி — 126—7

115. திருநாவுக்கரசர் — 5—90—7

116. மேற்படி — 5—90–6

117. மேற்படி — 5—90—10

118. சுந்தரர் — 81–9; 22—9; 22—3
புலவர்களுக்கு அறிவுரை — 34.
நெஞ்சிற்கு அறிவுரை — 35, 50, 64

119. திருநாவுக்கரசர் — 195;
நெஞ்சிற்கு அறிவுரை 146. 162, 255
பிற — 213—3, 148—8, 212—2 முதலியன.

120. திருஞானசம்பந்தர் — 91, 116, 161, 215, 233, 235, 280
(ii) 262 –5; 83 –10; 312—4.

121. மேற்படி — 12—1

122. கந்தபுராணம்

123. திருநாவுக்கரசர் — 5–4; 39—7; 99—1

124. உமாபதிசிவாசாரியார் — திருவருட்பயன்

125. திருநாவுக்கரசர் — 61—2; 61—4; 61—8; 61 – 1;61—10
61—6

126. மேற்படி — 297 – 2

127 மேற்படி — 216 – 4

128. மேற்படி — 266-2

129. மேற்படி — 117-10

130. மேற்படி — 176-7

131. மேற்படி — 181-6

132. சுந்தரர் — 67-9; 23-8; 97-8; 47-9.

133. மேற்படி — 38 9; 67-9; 11-7; 93-4.

134. "முப்பொருள் இயல்பு" — பக். 25

135. திருஞானசம்பந்தர் — 281-5; 213-5; 244-5; 239-8

136. திருநாவுக்கரசர் — 4-25-4; 4-54-3; 4-67-5; 4-70-3

137. சுந்தரர் — 83-2; 81-1; 85-10; 82-7; 55-10; 30-4; 89-11.

138. திருநாவுக்கரசர் — 306-7; 137-6;104-5.

139. திருஞானசம்பந்தர் — 244-8;182-2; 88-9.

140. மேற்படி — 281—5; 88-9; 365-1; 224-7 320-3; 232-5;

244-5; 69-7.

141. திருநாவுக்கரசர் — 4-51-10; 6-99-5.

142. மேற்படி — 6-67-2

143. திருஞானசம்பந்தர் —12-3

144. திருநாவுக்கரசர் — 4-113-8; 5-79-1; புள், இருக்கு, வேள், ஊர் — என்று இத்தலதிருப்பெயரைப் பிரித்து, சாம்பாயு, சடாதி என்ற பறவைகளும், இருக்கு வேதமும், முருகனும், சூரியனும் வழிபட்ட ஊர் என்று பொருள் கூறுவது தல புராணம், மயில் (புள்) மீது வீற்றிருக்கும் முருகவேளுக்குரிய ஊர் என்று பொருள் காண்பது அதனினும் பொருத்தமாக உள்ளது என்பதனையும் நினைக.

145. திருஞானசம்பந்தர் — 75-11

146. சுந்தரர் — 3-5

147. சுந்தரர் — 55-9

திருநாவுக்கரசர் — 4-60-9; 4-33-6; 4-30-5; 6 50 7.

148. திருஞானசம்பந்தர் — 8-9

149. மேற்படி — 130-5; 237-4

150. மேற்படி 232-3; 104-2 8-9; 223-3; 12-10; 32-3; 217-5; 106-4; 7-1; 230-7; 79-6; 133-3; 350-9; 8-6; 183-5

151. திருக்களிற்றுப்படியார் — பா 1.

151A. (i) ஐங்குறுநூறு — கடவுள் வாழ்த்து — 1

(ii) திருத்தொண்டர்புராணம் — 1649.

152. திருஞானசப்பந்தர் — 40, 107, 271, 316

153. மேற்படி — 316.

154. திருநாவுக்கரசர் .... 8-10

155. "Saiva Siddhanta is an excellent example of what religion can do to preserve the freshness of Philosophy, can do to make Universal. Saiva Siddhanta is both samaya and siddhanta. It is a profoundly religious approach to the foundamental problems of 'Perennial Philosopby'. The religion of Saiva Siddhanta is a religion of love; It's Philosophy is a Philosophy of

Realism'' — K. Seshadri, ''Saiva Siddhanta as Religion and Philosophy'' ''Tamil Culture'', Vol VIII, No 3, (July-September, 1959) P 172.

156. சிவஞானசித்தியார் (சுபக்கம் — பா 18 (சூத்திரம் 8)

157. திருத்தொண்டர் புராணம் — 1697, 3156,

158. சிவஞான சித்தியார் [சுபக்கம்] 18, 19, 20, 21— சிவஞான சுவாமிகள் பொழிப்புரை.

158A. ''தன்னை யறிவித்துத் தான்தானாச் செய்தானைப் பின்னை மறத்தல் பிழை'' என்று சிவஞானபோத வெண்பாவில், மறவாது போற்றுவதே உயிர்களின் கடமை என்று மெய்கண்டார் அறிவுறுத்தியமை காண்க.

இத்திருப்பாட்டில், 'தீயது' துயர்' என்ற இரு சொற்களால் தளையும் (பாசம்) 'வையகம்' என்ற சொல்லால் உயிரும் (பசு 'அரன்' என்ற சொல்லால் இறையும் (பதி) குறிக்கப்பட்டமை கூர்ந்து நோக்கத் தக்கது, திருஞானசம்பந்தர் அருளிய இது முதலாகிய பதிகம் 'திருப்பாசுரம்' எனப்படும்; இதில் அமைந்துள்ள சைவ சித்தாந்தக் கருத்துக்களும், ஏனைய கருத்தாழங்களும் சேக்கிழாரால் தம் புராணத்தில் விளக்கப்பட்டுள்ளன.

''பிடியதன் உருவுமை'' எனத் தொடங்கும் திருஞானசம்பந்தரின் வலிவலத்திருப்பாட்டுடன் (கணபதிவழிபாடு) ஒவ்வொரு சிவநெறிக் கூட்டமும் தொடங்கி, ''வாழ்க அந்தணர்'' என்ற இத் திருப்பாட்டுடன் முடியும் வழக்கத்தை ஒரு பொது வழக்கமாகச் சைவர்கள் மேற்கொள்ள வேண்டும். ஆறிரு தடந்தோள்'' ''வான்முகில் வழாது பெய்க'' போன்ற பிற்காலப் பாட்டுக்களுடன் முடிதலினும், சைவசமய முதற்குரவர் பாட்டுடன் முடிவதே தக்கது. ஏனைய கூட்டங்களுக்கு 'இத்திருப்பண்' முடிவாக அமைதல் ஒரு பொது நிலை உணர்வைத் தூண்டும் என்பதற்காகவே இது இங்குக் கூறப்படுகிறது.

[அடிக்குறிப்பு எண்களில், தேவார மேற்கோள்களாகக் காட்டப் பெற்றுள்ள பா எண்களில், மூன்று எண்கள் இருப்பின், அவை

முறையே திருமுறை, பதிகம், பாடல்களைக் குறிக்கும், எட்டு : 4—51—10 என்பது நான்காம் திருமுறை, ஐம்பத்தோராவது பதிகம், பத்தாம் பாட்டைக் குறிக்கும். இரண்டு எண்கள் இருப்பின் அவை முறையே பதிகம், பாடல்களைக் குறிக்கும். எ—டு : 312—1 என்பது முந்நூற்றுப் பன்னிரண்டாம் பதிகத்து முதலாம் பாட்டைக் குறிக்கும்.

சிறுபான்மையாக ஒரே எண் குறிக்கப் பெற்ற இடங்கள் தொடரெண்ணைக் குறிக்கும். எ—டு; 1026 என்பது அவ்வருளாளர் பாடிய திருமுறைத் தொகுப்பின் ஆயிரத்திருபத்தாறாவது பாட்டைக் குறிக்கும்.

சைவசித்தாந்த மகாசமாசப் பதிப்புத் திரு முறைப் பதிப்புக் களே ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப் பெற்றுள்ளன.]

## பயன்பட்ட நூல்கள்

### (க) அடிப்படை நூல்கள்

1. "திருஞானசம்பந்தர் அருளிய தேவாரப் பதிகங்கள்", தருமையாதீனப் பதிப்புகள்.
2. "திருநாவுக்கரசர் அருளிய தேவாரப் பதிகங்கள்".சைவசித்தாந்த மகா சமாசப் பதிப்பு (1941) சென்னை.
3. "சுந்தரர் தேவாரம்", திருவாடுதுறையாதீனப்பதிப்பு. (1980)
4. "திருத்தொண்டர்புராணம்", சைவசித்தாந்த மகா சமாசப்பதிப்பு (1950)
5. "மெய்கண்டசாத்திரங்கள்", தருமையாதீனப்பதிப்பு (1980)
6. "தேவார ஒளிநெறி" (சம்பந்தர், அப்பர், சுந்தரர் தொகுதிகள் கழகப்பதிப்புக்கள்.

(2) துணை நூல்கள்.

1. "தொல்காப்பியம்", சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக பதிப்புக்கள் (எழுத்து, சொல், பொருள் அதிகரரங்கள்)
2. "திருக்குறள்", சை. சி. நூ. கழகப் பதிப்பு (பரிமேலழகர் உரை) (1979)
3. "கம்பராமாயணம், "கம்பன் கழகம், சென்னை (1979)
4. "காஞ்சிப்புராணம்", மெய்கண்டார் கழகம், காஞ்சிபுரம்

5. ''கந்தபுராணம்'', ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள்
6. ''அகத்தியர் தேவாரத்திரட்டு'', ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள்
7. ''உமாபதி தேவநாயனர் திருமுறைத்திரட்டும், க. வெள்ளை வாரணனார் உரையுடன்
8. ''பன்னிருதிருமுறை வரலாறு'', க. வெள்ளைவாரணனார், அண்ணாமலைப் பல்கலைக் கழகம் ,(பகுதி க)
9. ''முப்பொருள் இயல்பு'', சி. அருணை வடிவேலு முதலியார் சைவசித்தாந்த மகா சமாசப்பதிப்பு
10. ''திருக்குறள் துலக்கும் ஒழுக்கநெறி'', க. வச்சிரவேலு முதலியார், சென்னை. (1971)
11. ''மணிமேகலை'', உ. வே. சாமிநாதையர் பதிப்பு.
12. ''ஐங்குறுநூறு'', ஒளவை. சு. துரைசாமிப் பிள்ளை உரை, சை. சி நூ கழகப்பதிப்பு, சென்னை.
13. ''சேக்கிழாரும் திருக்கண்ணப்பரும்'', தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், தருமபுர ஆதீனம் (1955)
14. ''யாழ் நூல்'' விபுலானந்த அடிகள், கரந்தைத்தமிழ்ச்சங்கம் தஞ்சை
15. ''முத்தொள்ளாயிரம்'', சேதுரகுநாதன் உரை, கழகப்பதிப்பு
16. ''நாலாயிர திவ்விய பிரபந்தம்'', மயிலை மாதவதாசன் பதிப்பு சென்னை.
17. ''சங்க இலக்கிய ஒப்பீடு'', டாக்டர் தமிழண்ணல், மதுரை (1979)
18. ''திருஞானசம்பந்தர் வரலாற்றாராய்ச்சியும் தேவாரத்திறனாய்வும் டாக்டர் சொ. சிங்காரவேலன், சை. சி. நூ. கழகம் சென்னை (1969)
19. ''மூவர்தமிழ்'', டாக்டர், சொ. சிங்கார வேலன், மணிவாசகர் நூலகம், சிதம்பரம் (1966)
20. ''அப்பர் அருட்செய்தி'', டாக்டர். சொ. சிங்காரவேலன், தெய்வத் தமிழ்மன்றம், மாயூரம் (1974)
21. ''அப்பர் தேவாரத்திறன்'', டாக்டர். சொ சிங்காரவேலன், திருவாவடுதுறையாதீனம். (1981)

22. "இலக்கியக்கலை", பேராசிரியர் அ. ச. ஞானம்சம்பந்தனார், சை. சி. நூ. கழகம், சென்னை.(1981)

23. "சீவக சிந்தாமணி", உ. வே. சாமிநாதையர் பதிப்பு.

24. "திருவிளையாடல் சொற்பொழிவுகள்" சை. சி. நூ. கழகம் சென்னை (1981)

5. "நன்னூல்", நாவலர் பதிப்பு, சிதம்பரம்.

6. "வெண்பாப் பாட்டியல்", நாவலர் பதிப்பு, சிதம்பரம்

27. "தண்டியலங்காரம்", சை. சி. நூ. கழகப்பதிப்பு. சென்னை

28. "யாப்பருங்கல விருத்தி", சென்னைப்பலகலைக்கழகப்பதிப்பு

29. தமிழ் இலக்கிய கொள்கை", உ. த. ஆராய்சி நிறுவனம் சென்னை.

30. "திருவருட்பா", ஊரனடிகள் பதிப்பு, வடலூர் ஆங்கிலம்

1. "The Business of Criticism" Helen Gardener.

2. "Essays in criticism", Maththew Arnold,

3. "The Poets world", James Reves.

4. The Theory of Poetry"— Abercrombie. L.

5. "An Introduction to the Study of Literature", W. H. Hudson.

6. "The Future Poetry", Sri Aurobrindo

7. "The Religion and philosophy of Tevaram" Dr. M. A. Dorairangasamy (Vol IV)

8. "The Poetic Pattern", — Ribin Skelton[1956]

9. "An Introduction to Poetry", Allen, Raymond Macdonald, (1927)

10. "The nature of English Poetry", L S. Harris (1927)

11. A Defence of Poetry", Shelley, (1911)

12. "Theory of Literature", Rene Welleck and Austein Warren, (1956)

13. "The Treatment of Nature in Sangam Literature" Dr.M. Varadarasan, S.I.I. Works, Madras (1957)

14. "Mystics and Mysticism", P.N. Srinivasachari, (1951)

15. "The Discovery of Poetry", P.H.B. Lyon

16. "New methods of the study of Literature" Edith Rickert" [1935]

17. "The culture and History of the Tamils", K.S. Nila kanda Sastri,

18. "Tamil India", M.S. Purnalingampillai, (1927)

19. "Early History of Vaishnavism in South India", Krishna samy Iyangar,

20. "A History of Tamil Literature", Dr.T.P. Meenakshi sundaranar.

21. "The Dhammapada", (Ed) Dr.S. Radhakrishnan (1954)

22. "Dictionary of Appar Tevaram", Dr.C. Singaravelan. vol II

## இதழ்கள்

1. "ஞானசம்பந்தம்",தருமையாதீனத்திங்களிதழ், தருமபுரம்
2. "Tamil culture", Vol VIII (1959), Madras,
3. "Saiva Siddhanta", S.S.M. Samajam, Madras[1976]
4. "செந்தமிழ்ச்செல்வி", சை.சி.நூ. கழகம், சென்னை.

# மூவர் தேவாரம்

## இரண்டு பார்வைகள்

சொ. சிங்காரவேலன்




பதிப்புத்துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்